# உள்ளிருள் நீக்கும் விளக்கு



அறம் தகளி; ஆன்ற பொருள்திரி; இன்பு
சிறந்த நெய்; செஞ்சொல் தீ; தண்டு—குறும்பாவா
வள்ளுவனார் ஏற்றினார் வையத்து வாழ்வார்கள்
உள்ளிருள் நீக்கும் விளக்கு.

—தம்பாலத்தனார்

# துணைவேந்தர் அணிந்துரை

திருக்குறள் உலகத்துத் தலைசிறந்த நூல்களுள் ஒன்று. அத்தகைய உயரிய அறிவுச் செல்வம் பற்றி எத்தனையோ ஆராய்ச்சி நூல்கள் வெளிவந்திருக்க வேண்டும். ஆனால் போதிய அளவிற்கு ஆராய்ச்சி நடைபெறவில்லை. இரண்டாம் உலகத் தமிழ்மாநாடு சென்னையில் நடைபெற்றபோது, இந்தக் குறையைப் போக்க வேண்டும் என்ற எண்ணம், அப்போதைய தமிழக முதலமைச்சர் பேரறிஞர் அண்ணா அவர்களின் நல்லுள்ளத்தில் எழுந்தது. அவர்தம் சீரிய முயற்சியால் திருக்குறள் ஆராய்ச்சித்துறை தமிழகத்து மூன்று பல்கலைக் கழகங்களிலும் அமையும் வகையில் அறக்கட்டளை வகுத்து நிதி உதவி நல்கப்பெற்றது. அதன் பயனாக, மதுரைப் பல்கலைக்கழகம், திருக்குறளில் வாழ்வியல் பகுதிகளை ஆராயும் பணியை மேற்கொண்டது. 'குறள் கண்ட பொருள் வாழ்வு' என்னும் இந்நூல், அந்த ஆராய்ச்சிப் பணியின் ஒரு பகுதியாகும்.

திருக்குறளில் உள்ள பொருளியல் கருத்துக்களைத் தொகுத்தும், அவற்றை இக்காலத்துப் பொருளியல் அறிஞர்களின் கொள்கையோடு ஒப்பிட்டும், பல்கலைக்கழகத் துணைப் பேராசிரியர் டாக்டர் முருகரத்தனம் இந்நூலினை இயற்றியுள்ளார். உலகச் சிந்தனை, வள்ளுவர் சிந்தனை, அரசும் பொருளும், வள்ளுவர் கண்ட வளநாடு என்னும் தலைப்புகள் நூலின் அமைப்பைப் புலப்படுத்துகின்றன. திருக்குறளையும் பொருளியல் நூல்களையும் ஆழ்ந்தும் நுணுகியும் கற்றுப் பலவகைக் கருத்துக்களையும் தெளிவுற இந்நூலில் விளக்கியுள்ளார். வாழ்வியலின் ஒவ்வொரு துறையிலும் திருவள்ளுவர் சிந்தனை செய்து தம் குறள் மணிகளில் விழுமிய கருத்துக்களை வழங்கியுள்ளார். ஆதலின் இத்தகைய ஆராய்ச்சி தொடர்ந்து மேற்கொள்ளப்பெற்றுப் பல துறைகளிலும் நூல்கள் வெளிவருமாயின், திருக்குறளின் பெருமை மேன்மேலும் சிறந்து விளங்குவதாகும்.

**மு. வரதராசன்.**

# ஆசிரியர் முன்னுரை

1968-ஆம் ஆண்டு சென்னையில் நடைபெற்ற உலகத் தமிழ் மாநாடு கருத்தரங்கினை ஒட்டித் தமிழக அரசு மதுரைப் பல்கலைக் கழகத்தில் நிறுவிய அறக்கட்டளையால் தோற்றம் பெற்ற திருக்குறளாய்வுத் துறைக்குத் 'திருக் குறளின் வாழ்வியற் கருத்துக்கள்' ஆராய்ச்சிப் பொருளாக ஒதுக்கப்பட்டன. மக்கள் குடும்பமாகவும் சமூகமாகவும் அரசின் குடிகளாகவும் இயற்கையின் படைப்பாகவும் வாழு-கின்றனர். இவ்வனைத்தியல்புகளையுமே வாழ்வியல் எனல் வேண்டும். ஆகவே வள்ளுவர் கூறும் இல்வாழ்வியல், சமூகவியல், அரசியல், பொருளியல், ஒழுக்கவியல், சமயவியல் கருத்துக்களே திருக்குறளின் வாழ்வியற் கருத்-துக்கள் ஆகும். மதுரைப் பல்கலைக்கழகத்துத் திருக் குறளாய்வுத் துறையில் இவைபற்றி முறைப்படி ஆராய்ச்சி நடைபெறும். முதல் முதலாக வள்ளுவர் வழங்கிய பொரு ளியல் (Economic Ideas of Tiruvalluvar) ஆராய்ச்சிக்கு எடுத்துக்கொள்ளப்பட்டது.

திருக்குறளில் காணப்படும் பொருளியற் கருத்துக்களைக் கண்டறிவதே இந்நூலின் நோக்கம். Economics என வழங்கும் பொருளியல் அண்மையில் தோன்றிய ஒருதுறை என்பர். தனி இயலாக அதற்கு ஓருருவம் தந்து அதன் 'தந்தை' எனப் பெயர் பூண்ட ஆதம் ஸ்மித்து (Adam Smith) என்பார் 18-ஆம் நூற்றுண்டவர். ஆகவே ஈராயிரம் ஆண்டுகள் தொன்மையுடைய திருக்குறளில் பொருளியற் கருத்துக்கள் என்ன இருக்கும்? இருத்தல் அரிது. ஆயினும் முயற்சி மேற்கொள்ளப்பட்டது. முயற்சி வீண்போகவில்லை. முத்துக்குளிப்பது போன்ற முயற்சியாக அது அமைந்தது. முத்துக்கள் பல கிடைத்தன.

இன்றைய பொருளியல் நூல்கள் பேசுவதுபோன்று திருக்குறள் ஒவ்வொரு கருத்தையும் எடுத்துக் குறிப்பாகப் பேசுவதில்லை. அது பேசுவதெல்லாம் மிகமிகப்பொதுவாகப் பேசுதல்தான். பொருளியற் கருத்துக்களில் உழவு ஒன்று பற்றித்தான் திருக்குறள் ஓரளவு குறிப்பாகப் பேசுகிறது.

இன்றைய பொருளியல், பொருளாக்கம் (Production), வழங்கல் (Distribution), துய்த்தல் (Consumption)பற்றியே பெரிதும் பேசுகின்றது. இவைபற்றிப் பொதுவாக ஓரிரு கருத்துக்கள் தவிரப்பிறிதொன்றும் குறளில் இல்லை. அன்று நிலவிய பொருள் வாழ்வையோ பொருளியற் கருத்துக்களையோகூட முறைப்படி தருவது வள்ளுவர்க்கு நோக்கமாக இல்லை. மக்கள் பொருளீட்டிப் பொருள் வழங்கிப் பொருள் துய்த்துத் தம்தேவைகளை நிறைவேற்றும் பொருள் வாழ்வை அவர் கண்டார். அவ்வாழ்வை அறத்தின் வழியில் நெறிப்படுத்தும் முயற்சியினை அவர் மேற்கொண்டார். நல்லரசன் ஒருவன் நல்வழியில் பொருளீட்டி நன்முறையில் குடிகளை அளித்தோம்பி நல்லாட்சி செய்வதைக்காண விழைந்தார் அவர். அமைதியும் இன்பமும் ஏமமும் குடிகொண்ட வளநாடு ஒன்றை மனக்கண்ணால் கண்டார்; இவற்றைத் திருக்குறளில் அறம் பொருளாக அமைத்தார். இவ்வாறு பொருளியற்பாட நூற்கருத்துக்களைவிட மக்கள் வாழத்தக்க பொருள்வாழ்வு ஒன்றினைத் தீட்டியதையே குறளில் காணுகின்றோம். இது எல்லைவிரிந்து பொருள் ஆழ்ந்து நோக்கம் பரந்த ஒன்று. வள்ளுவர் கற்றறிந்தாராக நில்லாது கற்றறிந்து தெளிந்த சிந்தனையாளராக ஓங்கி உயர்ந்து நிற்கின்ற இயல்புக்கு ஏற்பவே இது அமைந்துள்ளது. பொருளியலைவிடப் பொருள் துணைக்கொண்டு நடத்தும் வாழ்வுபற்றியே வள்ளுவர் பேசிச் செல்லுதலால் அது பற்றி ஆராயும் இந்நூலுக்குக் **குறள் கண்ட பொருள் வாழ்வு** எனப்பெயர் சூட்டப்பட்டது.

இதற்கு முன்னர்க் குறளில் காணும் பொருளியற் கருத்துக்கள் பற்றி அறிஞர் சிலர் எண்ணிப் பார்த்திருக்கின்றனர். அவர்களில் முதன்மையானவர்களாகப் பேர். தெ. பொ. மீ. அவர்கள், டாக்டர் பா. நடராசனர் அவர்கள், பேர். அ. அருணசலம் அவர்கள் ஆகியோரைக் குறிப்பிடல் வேண்டும். இவர்கள் கட்டுரைகளும் நூல்களும் எழுதி வழங்கியுள்ளனர்.

1. **வள்ளுவர் கண்ட நாடும் காமமும்** (நூல்)
— பேர். தெ. பொ. மீ.

2. **பொருள் நூற்கருத்துக்கள்** (கட்டுரை)
— பேர். தெ. பொ. மீ.

3. **வள்ளுவர் தந்த பொருளியல்** (நூல்)
— டாக்டர் பா. நடராசனார்.

4. **வள்ளுவர் வகுத்த பொருள் வாழ்வு** (நூல்)
— பேர். அ. அருணாலம்.

ஆகியவை இங்குக் குறிப்பிடத் தக்கவை. டாக்டர் பா. நடராசனாரவர்களே சென்னைப் பல்கலைக்கழகத்தில் 1961-இல் Economic Ideas of Tiruvalluvar எனச் சொற்பொழிவும் நிகழ்த்தியுள்ளார்கள். 1971-ஆம் ஆண்டு திசம்பரில் மதுரைப் பல்கலைக்கழகம் **'வள்ளுவர் கண்ட பொருளியற் கருத்துக்கள்'** பற்றி ஒரு கருத்தரங்கு நடத்தியது. அதில் பொருளியற் பேராசிரியர்கள் பதினறுபேர் பங்கு கொண்டு கட்டுரைகள் வழங்கினர்; தமிழறிஞரும் கலந்து கொண்டனர். இங்கும் பல கருத்துக்கள் உருக்கொண்டன. இவ்வெல்லா நூல்கள் பற்றியும் கட்டுரைகள் பற்றியும் ஒன்று கூறலாம். இன்றைய பொருளியற் கருத்துக்களைக் குறளில் காண வேண்டும் என்னும் ஆர்வம் இங்கெல்லாம் ததும்பி நிற்கிறது, ஆனல் குறள் சென்ற ஆழமும் அகலமும் இவை செல்லவில்லை. ஆயின் முன்னர் நூல் எழுதிய பேராசிரியர் மூவரையும் முன்னோடி வழிகாட்டியோராக நன்றியுடன் போற்றலாம். வள்ளுவர் கண்ட பொருள் வாழ்வின் கருத்துக்களை முழுமையாகவும் முறைப்படியும் ஒரு நூலில் எடுத்துக் காட்டுதல் வேண்டும் என்ற எண்ணத்தில் இந்நூல் எழுந்துள்ளது.

முதலாண்மை (Capitalism)ப் பொருள் வாழ்வே இன்றைப் பொருளியலைத் தோற்றுவித்தது என வரலாற்றறிஞர் எடுத்துக் காட்டுகின்றனர். இம்முதலாண்மைக் காலத்தில் எண்ணற்ற பொருளியலறிஞர் இத்துறையை வளர்த்தனர். அதற்குமுன் பொருள் வாழ்வு பற்றிய கருத்துக்கள் அங்கும் இங்குமாகச் சிறிது கிடைக்கின்றன, பொருளியல் வரலாறு இயற்றிய அறிஞர்கள் குறிப்பிடத்தக்க முறையில் பொருள் வாழ்வுக் கருத்துக்களை நல்கிய பண்டைச் சிந்தனையாளர்களாக மூவரை மட்டுமே தந்து செல்லுகின்றனர். அவர்-

களுடைய கருத்துக்களோடு விவிலியம் கூறும் கருத்துக் களையும் அவ்வறிஞர்கள் தருகின்றனர். இக்கருத்துக்களைத் தந்த அறிஞர்கள் பொதுவாக மக்கட் சமூகம் பற்றியும், மக்கள் வாழ்வு பற்றியும், அரசு பற்றியும், சமயம்பற்றியும் அக்கறை கொண்டு சிந்தனை செய்த சான்றோராவர். இச் சான்றோர் வரிசையில் இடம் பெறத்தக்கவரே திருவள்ளுவர். இவர் கண்ட கருத்துக்கள் அச்சான்றோர் கண்ட கருத்துக்களோடு பொதுவகையில் ஒத்துச்செல்லுகின்றன. சான்றோர் கருத்துக்களை விளக்கும் பணியினை இந்நூலின் முதலியல் மேற்கொண்டுள்ளது.

வள்ளுவர் மக்கள்வாழ்வின் அனைத்துத்திறங்கள் பற்றியும் சிந்தனை செய்த சான்றோர். அவருக்குப் பொருள் வாழ்வு ஒரு திறம். அவர் இல்வாழ்வு, சமய வாழ்வு, யாக்கை இயல்பு, உயிரியல்பு, உலகவியல்பு, அரசியல்பு, சமூக வியல்பு பற்றிப் பல்வேறு கருத்துக்களைக் கொண்டுள்ளார். இக்கருத்துக்களே அவருக்கு அடிப்படையானவை. இக் கருத்துக்களை ஒட்டியே அவர்காண விழையும் பொருள் வாழ்வு இயங்குகிறது. இவைபற்றியும் முன்னியலில் குறித்த மேலைநாட்டுச் சான்றோர் கருத்துக்களோடு இவற்றை உறவுபடுத்தியும் இரண்டாம் இயல் பேசுகிறது.

குறளில் செம்பாதியாகப் பொருட்பால் வகுத்த வள்ளு-வர் ஓரரசியற் சிந்தனையாளர். அரசின் பல்வேறு திறங்களை அவர் கூறிச் செல்லுகிறார். அவற்றுள் அரசு வருவாயும் செலவும் உண்டு; அவை தழுவிச்செல்லும் அறமும் நெறி-யும் உண்டு. இவற்றை Public Finance என இன்றைய பொருளியல் வழங்குகிறது. இவைபற்றி மூன்றும் இயல் விளக்குகிறது.

வள்ளுவர் வளநாடு ஒன்றைக்காண விழைந்தார்; அதன் இலக்கணத்தைத் தொகுத்துரைத்தார். இன்றைய பொருளியலும் நன்னாடு ஒன்றைப் படைக்கவே நாட்டம் கொண்டுள்ளது. இந்நூலின் நான்காம் இயல் இவைபற்றி எடுத்துச் சொல்லுகிறது.

குறளில் குளித்தெடுத்த முத்துக்களைத் தேர்ந்து நிரல்பட வைத்து ஒருமாலையாகத் தொடுக்க முயற்சி மேற்கொள்ளப் பட்டது. மேலும் முத்துக்குளிக்க நிறைய வாய்ப்பு உண்டு; அழகிய அரிய மாலை கிடைக்கவும் வாய்ப்பு உண்டு. இந்நூல் இடையில் ஒரு முயற்சி எனவே கொள்ளலாம்.

வள்ளுவர் கண்ட பொருளியற் கருத்துக்களை ஆராய்ந்து நூல் எழுதவேண்டும் என்று துணைவேந்தர் டாக்டர் மு. வ. அவர்கள் பணித்தபோது என் உள்ளத்தில் அச்சமே குடிகொண்டது. பொருளியலில் (ஓரளவு தமிழிலும்) புலமை பெற்றோரே செய்யக்கூடிய பணி இதுவாயிற்றே; தமிழே கற்றுத் தமிழே கற்பித்து வரும் எனக்கு எவ்வாறு கூடும் என்னும் அச்சமே அது. வள்ளுவர் கண்ட பொருளியல் பற்றித் தமிழாசிரியன் ஒருவன் எழுதும் நூலைப் பொருளி-யல்துறை அறிஞர்கள் மதித்தல் வேண்டும் என்னும் அக்கறையால் தோன்றியது அவ்வச்சம். பொருளியலின் அடிப் படைக் கருத்துக்களை மேற்படையாகவும் குறளோடு உற வுடைய கருத்துக்களை ஆழ்ந்தும் கற்றுச் செய்ய வேண்டிய பணி இது. ஓரளவு அவ்வாறே பணி முடிந்தது. குறைகள் இருக்கும்; நிறைவு செய்ய வேண்டியது இனிப் பொருளியல் அறிஞர் பணியாகும்.

வள்ளுவர் கண்ட வாழ்வியற் கருத்துக்கள் தமிழ்த் துறையினரால் மட்டுமே ஆராய்ந்து காணக்கூடியவை அல்ல. தமிழ், அரசியல், பொருளியல், தத்துவம், சமயம் ஆகிய துறைகளில் புலமை முற்றியோர் உறவு கொண்டு ஆற்ற வேண்டிய பணி இதுவாகும். திருக்குறள் அறக் கட்டளைக்கு ஏற்ப இவ்வாழ்வியற் கருத்துக்களை ஆராயத் திருக்குறள் ஆய்வகம் கடமை பூண்டுள்ளது. அதை நிறைவேற்றப் பயற்சியும் புலமையும் பெற முயற்சி மேற்கொண்டுள்ளது. இக்காரணம் பற்றியே பல்துறை அறிஞர்களை அழைத்து வள்ளுவர் வாழ்வியற் கருத்துக்களை ஆராயும் முகத்தான் இத்திருக்குறள் ஆய்வகம், கருத் தரங்குகளை நடத்திவருகிறது. இவ்வாறு, வள்ளுவர் கண்ட பொருளியல் பற்றியும் வள்ளுவர் கண்ட அரசியல்பற்றியும் இரண்டு கருத்தரங்குகள் நடத்தப்பெற்றுள்ளன. ‘வள்ளுவர் கண்ட பொருள் வாழ்வு’ இக்கடமையில் முதற்பணி.

திருக்குறள் ஆய்வகத்தில் பணியாற்றுவோர் ஒவ்வொரு-வரும் ஆண்டுக்கு ஒருநூல் கொணர்தல் வேண்டும் என்னும் எண்ணம் மேற்கொள்ளப்பட்டுள்ளது. எடுத்துக்கொண்ட பிறதுறையினையும் கற்றுத் திருக்குறளோடு ஒப்பிட்டுக் காணல் இக்காலத்தில் நிறைவேறுதல் வேண்டும்! இருந்தும் 'பிற துறையார் அந்தை வணக்கம் செய்தல் வேண்டும்' என்ப-திலும் எங்களுக்குக் கண்ணும் கருத்தும் உண்டு. 'வள்ளுவர் கண்ட இறைமாட்சி', 'குறளும் விவிலியமும்' என இருநூல்கள் உருப்பெற்றுள்ளன. நூலாக்கத்தில் அகப்பணி ஓராண்டு ஆனால் புறப்பணியும் ஓராண்டும் அதற்கு மேலும் ஆகிறது!

இந்நூல் எங்கள் திருக்குறள் ஆய்வகத்தின் முதல் வெளியீடு. 1969-ஆமாண்டு, ஜூலையில் திருக்குறள் ஆய்வ-கத்தில் பணியேற்றபின் தமிழ்த்துறையோடு ஒன்றப்பிணிக்கப் பட்டும் முதுகலை மாணவர்க்குப் பாடங்கற்பிக்கப் பணிக்கப் பட்டும் பாடப்பணி புரிந்துவந்த என்னை 1971-இன் தொடக்-கத்தில் தடுத்தாட் கொண்டு திருக்குறளைப் படிக்குமாறு வாய்ப்பு நல்கி நூலும் இயற்ற 'அறக்கட்டளை' இட்ட துணை வேந்தர் பெருமகனார் டாக்டர் மு. வரதராசனார் அவர்-களுக்கு இத்தமிழகமே கடமைப்பட்டுள்ளது. குறள் ஒன்றே கருமமாக்கி ஒல்லும் வாயெல்லாம் ஊக்கமும் உதவியும் தந்த அப்பேராசிரியப் பெருந்தகைக்கு என் மனங் கனிந்த நன்றி.

இந்நூலுக்கு வேண்டிய 'சிறப்புச் சொற் கோவை' யை ஆராய்ச்சி மாணவர்கள் வேங்கடராமன், மோகன், தாமோதரன் ஆகியோர் ஆக்கித் தந்தனர். அவர்களுக்கு நன்றி, மழை, புயல், மின்பற்றுக் குறை ஆகிய இடர்ப் பாடுகளிடையே காலம் கடந்ததாயினும் ஆர்வத்தோடு அச்சுப் பணியை நிறைவேற்றித் தந்த கடலூர் பிரபாத் அச்சகத்தார்க்கும் நன்றி உரியது என்னுடன் பணியாற்றும் நண்பர் கலைஞர் விஜயவேணுகோபால் அவர்கள் 'உள்ளிருள் நீக்கும் விளக்கினை' ப்படைத்துத் தந்தார்கள். அன்னார்க்கும் நன்றி. எங்களை மீறித் திருந்தாப் பிழைகள் பொறுக்க வேண்டுகிறேன்.

தி. முருகரத்தனம்.

# பொருளடக்கம்

—— X ——

இயல் 1

# உலகச் சிந்தனை

*1. 0.* திருவள்ளுவர் கண்ட பொருளியற் கருத்துக்களை நேரே ஆராயுமுன் பொருளியல் இன்னது என்பதையும் அதன் வரலாற்றையும் அறியவேண்டுவது இன்றியமையாதது.

## 1. 1. அறிவுத் துறைகள்

இந்நிலவுலகில் வாழும் மனிதன் மண்ணாகவும் மலையாகவும் நீராகவும் நெருப்பாகவும் விண்ணாகவும் வெளியாகவும் காடாகவும் நாடாகவும் உயிர்களாகவும் அமைந்த சூழலில் வாழுகிறான். அவனுக்கு மேலே மீன்களாகவும் கோள்களாகவும் பால்வெளியாகவும் பாழ்வெளியாகவும் தோன்றுவனவும் அவனுடைய அண்டச் சூழல்களே. இவையெல்லாம் **இயற்கைச் சூழல்கள்** எனப்படும். அவனே குடும்பம் அமைத்தும் சமூகம் தோற்றுவித்தும் அரசு நிறுவியும் பண்பாட்டோடும் நாகரித்தோடும் வாழ்ந்துகொண்டிருக்கிறான். இவையெல்லாம் **சமூகச்சூழல்கள்** எனப்படும். இவ்விரு திறத்துச் சூழல்களையும் மனிதன் அறிகிறான்; ஆராய்கிறான்; கற்கிறான்; கற்பிக்கிறான். இயற்கைச் சூழல்களை அவன் ஆராய்ந்து வகுத்த அறிவே **இயற்கையறிவியல்கள்** (Natural Sciences). அவையே **பூதவியல்** (Physics), **வேதியல்** (Chemistry), **உயிரியல்** (Biology) முதலானவை. சமூகச்சூழல்களை ஆராய்ந்து வகுத்த அறிவே **சமூக அறிவியல்கள்** (Social Sciences). **ஒழுக்கவியல்** (Ethics), **அரசியல்** (Politics), **பொருளியல்** (Economics), **சமூகவியல்** (Sociology) முதலானவையே அச்சமூக அறிவியல்கள். தனிமனிதனாகவும் சமூக மனிதனாகவும் வாழுகின்றபோது தேவைப்படும்

ஒழுகலாறுகளைக் கூறுவது **ஒழுக்கவியல்;** மனிதன் அரசோடு கொண்ட உறவுகளைக் கூறுவது **அரசியல்;** அவன் சமூகத்தோடு கொண்ட உறவுகளைக் கூறுவது **சமூகவியல்;** மனிதன் தன் தேவைகளை நிறைவேற்றிக்கொள்ள மேற்கொள்ளும் முயற்சிகளைக் கூறுவது **பொருளியல்.**

## 1. 2. பொருளியல் என்பது யாது ?

**பொருளியல்**[1] இன்று ஒரு பெருங்கல்வி. அது இன்று கல்விக் கழகங்களிலும் தொழில்நிறுவனங்களிலும் நிதிநிறுவனங்களிலும் ஆல் போல் பரந்து விரிந்து வளர்ந்து வருகிறது. இன்றைய சமூகவாழ்விற்கும் தனிமனிதர் வாழ்விற்கும் அக்கல்வி இன்றியமையாததாக அமைந்துள்ளது. மக்கள்பண்பாடு நாகரிகம் அனைத்தும் இப்பொருளியலின் அடிப்படையிலேயே அமைகின்றன எனச் சிந்தனையாளர்கள் கொள்வதிலிருந்தும் அதன் சிறப்பினையும் இன்றியமையாமையையும் உணரலாம்.[2]

இந்தப் பொருளியல் என்பதுதான் என்ன ?

பொருளியற்பணிகளின் தொடக்கமே மனிதனின் தேவைகள் **தான்.** மனிதனுக்குப் பல்வேறு தேவைகள் உண்டு. உண்டி, உடை, உறையுள் ஆகிய தேவைகள் அவனுக்குத் தலையானவை. காதல், கலை, கல்வி முதலாக இன்னும் பல தேவைகள் வளர்ந்துகொண்டே போகின்றன. இந்தத் தேவைகள் அன்றும் இன்றும் இங்கும் எங்கும் உள்ளவை. இத்தேவைகளை நிறைவேற்றிக்கொள்ள மனிதன் பல்வேறு ஆக்கப்பணிகளில் ஈடுபடுகிறான்; உணவுக்காக உணவுப் பண்டங்களைத் தேடுகிறான்; அல்லது விளைவிக்கிறான். உடைக்காகத்

---

1. Economics என்னும் ஆங்கிலச்சொல்லுக்கு நேரான 'தமிழ்ச்சொல்' லாக இன்று 'பொருளியல்' என்னும் சொல்லே ஆட்சிபெற்று வருகிறது. 'வள்ளுவர்தந்த பொருளியல்' (1965) என்ற தலைப்பில் டாக்டர் பா. நடராசன் அவர்கள் ஒரு நூல் எழுதியுள்ளார். மா. பா. குருசாமி அவர்களுடைய 'புகுமுகப் பொருளியல்' என்பதும் குறிக்கத்தக்கது. 'பொருள்நூல்' என்றும் இதனைக் குறித்தல் உண்டு. 'பொருள்நூற்கருத்துக்கள்' என்பது தெ. பொ. மீ. அவர்கள் கட்டுரை. 'பொருளாதாரம்' என்னும் சொல் தென்பால் நடந்து கொண்டிருக்கிறது.

2. கார்ல் மார்க்ஸ் முதலான பொதுவுடைமைக்கோட்பாட்டுச் சிந்தனையாளர்கள் இவ்வாறு கருதுவர்.

துணிகளும், ஆடைகளும் படைக்கிருன்; உறைவதற்காகக் குடிசைகளும், வீடுகளும், மாளிகைகளும் கட்டுகிருன். பண்டைக்கால மனிதனுக்கு அவன் தேவைகள் எளிதாக நிறைவேறின. காரணம் அவன் தேவைகள் எளியன; குறைந்தன; சிறியன. தன் தேவைகளை அவன், தானே தன் உழைப்பால் நிறைவேற்றிக் கொண்டான். தனக்குக் கிடைக்காத ஒருசிலவற்றைப் பிறரிடமிருந்து பெற்றுக்கொண்டான். அவற்றுக்காகத் தன் பண்டங்களை நேரே மாற்றிக்கொண்டான். இவ்வாருக அவனிடம் **பண்டமாற்றும்** இருந்தது. கடற்கரை மக்கள் மீனையும், உப்பையும் தந்துவிட்டு மருதநில மக்களிடமிருந்து நெல்லையும் பிறவற்றையும் பெற்றனர். மக்கள் குறைவாகவும் மனிதன் தேவைகள் எளியனவாகவும் இருந்த பண்டைக்காலத்தில் பண்டமாற்று எளிதாகவும் சிறந்ததாகவும் இருந்தது. ஆனல் காலம் செல்லச்செல்ல மக்கள் தொகையும் பெருகியது; அவர்கள் தேவைகளும் வளர்ந்தன. பண்டமாற்று அடிக்கடி செய்யவேண்டி வந்தது; பேரளவிலும் செய்யவேண்டி வந்தது. ஆகவே அது சிக்கல் உடையதாகியது. இந்நிலையில் பண்டமாற்றுக்குப்பதில் அதனையே போன்று பொதுவாகப் பயன்படும் ஓர் ஊடுபொருளாக (a common medium of exchange) **பணம்** (money) என்பது தோன்றியது. இப்பணத்தால் எல்லாவற்றையும் வாங்கமுடிந்தது. இப்பணத்தினை ஒட்டி உலக மக்கள் எல்லாரும் உறவுகொள்ளும் ஒருசமூகஅமைப்புத் தோன்றியது. இவையெல்லாவற்றையும் அறிவதற்கும் ஆராய்வதற்குமே **பொருளியல்** என்னும் ஒரு துறையறிவு தோன்றியது.

## 1. 3. பொருளியல் வரையறை

அறிஞர் போற்றும் பொருளியற்பேரறிஞர் **ஆல்ப்ரெட் மார்ஷல்** (Alfred Marshall) பொருளியல் இன்னது என வரையறுத்து விளக்கம் தருகிருர். அந்த விளக்கத்தை இன்றைய பொருளியலுலகம் போற்றிவருகிறது.

"Political Economy or Economics is a study of mankind in the ordinary business of life: it examines that part of individual and social

action which is most closely connected with the attainment and with the use of the material requisites of well-being. Thus it is on the one side a study of wealth, and on the other, and more important side, a part of the study of man."[3]

அறிஞர் மார்ஷலின் இவ்விளக்கத்தால் இரு கருத்துகள் தெளிவுறுகின்றன. ஒன்று, பொருளியல் மனிதனைப்பற்றியது என்பதும், ஆகவே சமூக அறிவுத்துறைகளில் அதுவும் ஒன்று என்பதும் ஆகும். இரண்டாவது, மனிதன் தன் தேவைகளை நிறைவேற்றிக்கொள்ளப் பண்டங்களைத் தேடுதலுக்கும் படைத்தலுக்கும், பின்னர் அவற்றை நுகர்ந்து பயன் துய்த்தலுக்கும், அவன் ஒரு சமூகமாக இருத்தல் வேண்டும்; அவ்வாறு இருந்து மேற்கொள்ளும் முயற்சிகளையும் பணிகளையும் பற்றி ஆராய்ந்து உரைப்பது பொருளியல் என்பதாகும்.

நாகரிகம் வளர வளர மனிதன் தேவைகளும் வளர்ந்து கொண்டே போகின்றன. தேவைகள் வளர்வதோடு மக்கள் தொகையும் பெருகிக்கொண்டே செல்கிறது. ஆனால் பொருள்களும் பொருளாக்கமும் போதுமானவையாக இல்லை. ஆகவே மனிதனின் எந்தத் தேவைகளை எந்தப் பண்டங்களைக் கொண்டு தீர்க்கலாம் என்பதே இன்று அவனுடைய பெருமுயற்சியாக இருக்கிறது. தேவைகளைத் தேர்தலும் அவற்றுக்கான பண்டங்களைத் தேர்தலும் ஆகிய 'தெரிந்து செயல் வகை'யே அவன் இன்று தன் பொருள் வாழ்வில் ஆற்றிக்கொண்டிருக்கும் பணி. இந்தத் 'தெரிந்து செயல் வகை' பற்றி ஆராய்வதே பொருளியல் என இன்றைய பொருளியலறிஞர் சிலர் அதற்கு விளக்கம் தருகின்றனர்.[4]

எந்த விளக்கத்திலும் மக்கள் **தேவைகளும்** அவற்றைத் தீர்க்கும் **பயன் நிறைந்த பொருள்களும்** உண்டு என அறியலாம்.

---

3. P. 1, Principles of Economics.
4. 'These choices are of the essence of the science of economics, which can most simply be defined as the science of choice'. p. 11, Economics: An Introduction (1966) by Walter Birmingham.

## 1. 4. பொருளியல் புகல்வன

மக்கள் தங்கள் தேவைகளுக்கான பொருள்களை எவ்வாறு படைக்கின்றனர் ? படைக்கப்பட்ட பொருள்களை எவ்வாறு எல்லாருக்கும் வகுத்து வழங்குகின்றனர் ? இப்படைப்புப் பணிகளுக்கு மக்கள் என்ன அமைப்புக்களையும் கருவிகளையும் தோற்றுவித்திருக்கின்றனர் ? அவ்வமைப்புக்களும் கருவிகளும் மக்கட்சமூக வாழ்வில் என்ன பங்குபெற்று எவ்வாறு பணிபுரிகின்றன ? இவற்றை விளக்குவதே பொருளியல். இவற்றை விளக்கப் பல்வேறு கருத்துக்களையும் கொள்கைகளையும் விதிகளையும் அது வகுத்து வைத்திருக்கிறது. **தேவை** (Wants), **பயன்** (Utility), **ஆக்கம்** (Production), **ஆக்கக் கருவிகள்** (Factors of Production), **இயற்கை** (Land), **ஆட்கள்** (Labour), **முதல்** (Capital), **ஆட்சி** (Organization), **நுகர்ச்சி** (Consumption), **வகுப்பு** (Distribution), **மதிப்பீடு** (Cost), **பணிப்பகுப்பு** (Division of Labour), **செல்வம்** (Wealth), **சேமிப்பு** (Saving), **வணிகம்** (Trade, Commerce), **தொழில்** (Industry), **வேட்டல்** (Demand), **வழங்கல்** (Supply), **விலை** (Price), **மதிப்பு** (Value), **போட்டி** (Competition), **விற்பனைக் களம்** (Market), **தனியாட்சி** (Monopoly), **கட்டுப்பாடு** (Control), **மாற்று** (Exchange), **பணம்** (Money), **பணவீக்கம்** (Inflation), **வாடகை** (Rent), **கூலி** (Wages), **வட்டி** (Interest), **இலாபம்** (Profit), **நிதியியல்**( Banking), **காசியல்** (Currency), **வெளிநாட்டு வணிகம்** (International Trade), **இறக்குமதி** (Import), **ஏற்றுமதி** (Export), **நாட்டுவருவாய்** (National Income), **பணி** (Employment), **சீர்வாழ்வு** (Prosperity), **அரசுப்பொருளியல்** (Public Finance), **வரியீடு** (Taxation), **நிதிநிலைக் குறிப்பு** (Budget), **திட்டமிடுதல்** (Planning), **நாட்டுடைமையாக்கம்** (Nationalization); இவைகள் தான் இன்றைய பொருளியலின் அடிப்படையும் மேற்படையும் அனைத்துமாகும். இவ்வனைத்துக் கருத்துக்களையும் பொருளியல் ஐந்து இயல்களாக வகுத்துக் காண்கிறது: 1. **செல்வ நுகர்ச்சி** (Consumption of Wealth) 2. **செல்வப் படைப்பு** (Production of Wealth) 3. **செல்வ மாற்றம்** (Exchange of Wealth) 4. **செல்வப் பங்கீடு** (Distribution of Wealth) 5. **அரசுப் பொருளியல்** (Economics of Government).

## 1. 5. பொருளியலின் தோற்றம்

இன்றைய பொருளியல்அரிச்சுவடியே கூட இத்தகைய கருத்துக்களைக் கொண்டிருக்கின்றது. ஆனல் இந்தப் பொருளியலின் தோற்றமும் வளர்ச்சியும் இருநூறு ஆண்டுகள் கூட ஆனவை அல்ல. 18-ஆம் நூற்றாண்டின் இறுதியில்தான் அது அரும்பியது. 19-ஆம் நூற்றாண்டில் தான் அது மலர்ந்தது. **ஆதம் ஸ்மித்** (Adam Smith) என்பாரே இன்றைய பொருளியலின் தந்தை என்பர். இங்கிலாந்தில் கி. பி. 1723-இல் தோன்றி 1790 வரை வாழ்ந்த சிந்தனையாளர் அவர். **நாடுகளின் செல்வம்** (Wealth of Nations) என்ற நூலியற்றி மாயாப்புகழ் நிறுவினர்; கிளாஸ்கோப் பல்கலைக்கழகத்தின் ஒழுக்கநூற் பேராசிரியராகப் பணியாற்றினர். **நாடுகளின் செல்வம்** என்ற நூலே இன்றைய பொருளியலின் வித்தானது. கடந்த இரண்டு நூற்றாண்டுகளில் எத்தனையோ புதுப்புதுக்கலைகள் - அறிவுத்துறைகள் - அரும்பிப் பூத்தது நாம் அறிவோம். அவற்றுள் ஒன்றே பொருளியல். அதற்கு முன்னர்ப் பொருளியல் இல்லையா என்றால் 'இல்லை' எனலாம். காரணம், பொருளியல் தோன்றுவதற்கான சமூகச்சூழல் இதற்கு முன் மக்களின் வரலாற்றில் அமைந்திருந்த தில்லை. பொருளியல் என்பது காலம் என்னும் தாய் பெற்றெடுத்த சேய்தான். பொருளியலைப் பொறுத்தவரை காலத்துக்கும் கருத்துக்கும் நெருங்கிய உறவுண்டு. **பொருளியல் சிந்தனையின் வரலாறு** என்னும் நூலை இயற்றிய அறிஞர் **எரிக் ரோல்** (Eric Roll) என்பார் இதனை எடுத்துக்காட்டுகிறார்.[5] அவருடைய கருத்துப்படி சமூகத்தின் பொருளியல் அமைப்புக்கும் அக்காலப் பொருளியற் சிந்தனைக்கும் நெருங்கிய உறவுண்டு. ஒரு சமூகத்தில் பொருள் ஈட்டும் முயற்சியால் பல்வேறு பிரிவினராக அமைந்திருப்போரிடையே உள்ள உறவுகளும் அவர்களிடையே ஏற்படும் பூசல்களும் பொருளியற் சிந்தனையை உருவாக்குகின்றன.[6] இத்தகைய கருத்துக்களைக் **கார்ல் மார்க்ஸ்**

---

5. A History of Economic Thought (1953) by Eric Roll, Faber and Faber LTD, London.

6. 'Economic Theories are always, though often tortuosly, related to economic pratice. A study of the interplay between the conditions of life and the theorizing of man can be a helpful guide through the conflicts of ideas. Many ideas of the past had their roots in institutional arrangements, in the relations between different economic groups, in their conflicting interests'. P. 12, HET.

முதலான பொதுவுடைமைச் சிந்தனையாளர்கள் வற்புறுத்திக் கூறி வருகின்றனர். இவற்ருல் ஒருண்மை விளக்கமுறுகிறது. இன்றைய பொருளியற்கருத்துக்களுக்கான சிந்தனை இன்றைய சமூக அமைப்பில்தான் உண்டு; அதற்கு முன்னர் இல்லை.

"தனியார் உடைமை, தனியார் முயற்சி, தனியார் செல்வ மாற்றம், விற்பனைக் களத்தை ஒட்டி அமைந்த பொருளியல், சுருக்கமாகச் சொன்னுல் முதலாண்மைப் பொருளாக்கம்—இதுவே இன்றைய பொருளியலின் தலையாய கோட்பாடுகள் வளர்வதற்கான விளை நிலமாகும். முதல், உழைப்பு, மதிப்பு, விலை, பண்டவழக்கு, வேட்டல், வாடகை, வட்டி, இலாபம் — இவையே இந்தப் பொருளியலின் அடிப்படைக்கூறுகள்; ஆகவே பொருளியலுக்குரிய கொள்கையளவிலான ஆராய்ச்சியும் இவை பற்றியதே. இக்கோட்பாடுகளின் முறைப்படியான வளர்ச்சியின் தொடக்கம் 17-ஆம் நூற்ருண்டின் இறுதியிலும் 18-ஆம் நூற்ருண்டின் முற்பகுதியிலுமே உருவாயிற்று. இக் கோட்பாடுகளுக்கு உரிய விளைநிலமான பொருளியற்சூழல்கள் நன்கு வளர்ச்சியடைந்த முழு அமைப்பில் மக்கள் வரலாற்றில் இதற்கு முன்னர் இருந்ததில்லை"[7]

---

7. 'The broad social framework of the present day economy was taken as given. Private property and enterprise, private exchange, the market economy, in short, capitalist production was the soil in which their principal concepts grew. Capital, labour, value, price, supply, demand, rent, interest, profit these are the elements of the system and, therefore, of its theoritical analysis.

The earliest systematic development of these concepts is to be found at the end of the seventeenth and beginning of the eighteenth centuries. The particular set of economic conditions to which they refer was not present in doveloped and comprehensive form at any earlier stage of human history'. P. 20, HET.

இந்நிலையினைப் பொருளியலறிஞர்கள் அனைவரும் அறிந்திருக்கின்றனர். ஆகவே பொருளியல்வரலாறு எழுதிய அறிஞர்கள் 17, 18-ஆம் நூற்றாண்டுகளுக்கு முன்னர்ப் பொருளியற் சிந்தனை இருந்ததாகவே உடன்படவில்லை. இதற்கு ஏற்றவாறே பண்டைச் சிந்தனையாளர்கள் மற்ற கலைகளைப்பற்றி ஆழ்ந்தும் அகன்றும் உயர்ந்தும் விரிந்தும் எண்ணித் தொகுத்தும் வகுத்தும் வைத்த கருத்துக்கள் நமக்கு ஏராளமாகக் கிடைக்கின்றன; ஆனால் பொருளியற் சிந்தனைபற்றி உருவாக ஒன்றும் கிட்டவில்லை. கிரேக்க ஞானியர் கருத்துக்களை இன்றைய உலகம் உச்சிமேல் வைத்துப் போற்றுகிறது. அவை பரப்பிலும் பெரியவை; பண்பிலும் உயர்ந்தவை; அவர்கள் சிந்தனையில்கூடப் 'பொருளியல்' என ஒன்றும் காணமுடியவில்லை. அங்கும் இங்கும் பொருள்பற்றிய கருத்துக்களே காணக் கிடைக்கின்றன. இன்றைய பொருளியலமைப்பின் கூறுகள் எந்த அளவு அன்று இருந்தனவோ அந்த அளவுதான் பொருளியற்சிந்தனையும் அன்று தோன்றியிருக்க முடியும். அந்த அளவு மிகமிகக் குறைவு.[8]

## 1. 6. பண்டைச் சிந்தனை

இனிப் பண்டைய அறிஞர்களும் இடைக்கால அறிஞர்களும் மனிதனுக்கும் பொருளுக்கும் இடையே உள்ள உறவினைப் பற்றித்தான் என்ன கூறியிருக்கிறார்கள் என அறிவது நல்லது.

---

8. 'But it is important to stress here that political economy as a science begins at a time when the foundations of industrial capitalism were already well laid. There is a surprising unanimity of opinion among historians of economic dectrine on this point; and many writers have even gone so far as to ignore completely any earlier economic thought, or to refer to it only in very slighting terms. It is perfectly true that the total volume of economic theory, in any modern sense to be found in the writings of, for example, the Greek philosophers is very small ; but we can only expect statements of an economic character in the present day sense of the term to the extent to which certain of the economic conditions of our society were already present in the society in which the Greek philosophers lived'. pp. 20&21, HET.

மனிதன் தனித்தனியே சிறுசிறு கூட்டமாகப்பிரிந்து குடிமை வாழ்வு (Tribal life) நடத்திக்கொண்டிருந்த தொல்பழங்காலத்தில் அவனுடைய பொருளாக்க முயற்சிகள் எளிமையாகவே இருந்தன. உழவுத் தொழிலும் உருவம் பெருத காலம் அது. அப்போது உடைமைகள் பொதுவானவை. தனித்தனியே ஒவ்வொருவரும் பாடுபட்டனர்; பாடுபட்டுத் தேடியவற்றைத் தாமே உண்டனர்; எனவே பண்ட மாற்றுக்கு இடம் இல்லை. பொருளாக்கத்துக்குப் பயன்பட்ட கருவிகள் எளியவை. அவற்றுக்கும் அவற்றால் தேடப்பட்ட பண்டங்களுக்கும் உள்ள உறவுகள் வெளிப்படையாகத் தெரிவன. அவற்றிலே சிக்கல் இல்லை. இவ்வாறு எளிமையான முறையில் பண்டை மனிதனின் தேவைகள் நிறைவேறின. இந்நிலையில் அவன் பொருள் வாழ்வினை விளக்குவதற்கு ஆழ்ந்த சிந்தனையும் நீண்ட விளக்கங்களும் தேவையில்லை [9]. இந்தக்காலம் மாறியது.

## 1. 7. எபிரேயச் சிந்தனை

நாகரிகம் மலர்ந்தது. நகர வாழ்வு அமைந்தது உழவுத் தொழில் மக்கள் வாழ்க்கையில் பேரிடம் பெற்றது. பொருளாக்க முறையில் மாற்றம் ஏற்பட்டது. மக்கள் தேவைகளும் பலவாயின. மக்கள் வாழ்க்கை முழுமையாக மலர்ச்சி பெறுவதற்கான வாய்ப்புக்கள் தோன்றின. உழைப்புப்பாகுபாடு (Division of Labour) ஆழமடைந்தது. தனியுடைமையும் பண்டமாற்றும் ஆட்சி பெற்றன. மெல்ல மெல்ல வணிகம் மக்கள் வாழ்வின் ஒரு கூறாக வளர்ச்சியடைந்து வந்தது. விற்பனைக்கு எனப் பொருள்கள் ஆக்கப்பட்டன. மக்களது பொருள்வாழ்வும் தனி மனித எல்லை கடந்து விரிந்து பரந்து வளர்ந்து விட்டது. இந்நிலையிலேயே சமூகம் பற்றிய சிந்தனைகள் தோன்றின; உடன் பொருள் வாழ்வு பற்றிய சிந்தனைகளும் தோன்றின. இத்தகைய சமூகமே கிறித்தவ சமயத்தின் **பழைய ஏற்பாட்டில்** (Old Testament) காணப்படுவது. ஈராயிரம் ஆண்டுகளுக்கு முன்னர்க் கிரேக்கச் சிந்தனையாளர்களை உருவாக்கியது இத்தகைய சமூகமே. தமிழகத்தைப் பொறுத்தவரையில் சங்ககாலத்துக்கு முன்னரே இந்தச் சமூகம் அமைந்துவிட்டது.

---

9. 'Man cannot begin to theorize about the economic process as long as this is so simple as to require no special explanation.' p. 21, HET.

இத்தகைய சமூகம் முதல் முதலாக எழுந்தபோது எபிரேயச் சிந்தனை அதற்கு எதிராகவே முரசு கொட்டியது. இந்தச் சமூகத்தில் தனியுடைமை எழுந்தபோதே உள்நாட்டு வெளிநாட்டு வணிகமும் எழுந்தது. அவற்றோடு பெருஞ்செல்வம் ஒருசிலரிடம் குவியும் நிலையும் வந்தது. அதற்கு ஏற்ப 'இல்லாரும்' தோன்றினர். அரசன் பெருஞ்செல்வனாக வளர்ந்தான். அவன் அகவாழ்வும் புறவாழ்வும் பொருளால் பொலிவுற்றன. விருந்தும் விழாவும் பூசலும் போரும் நடைபெற்றன. அவற்றின் தேவைக்கான பொருளை அரசன் உருட்டியும் மிரட்டியும் வரிவாங்கியும் சேர்த்தான். பொதுவாக மக்களிடம் மனநிறைவு குறைந்தது; இதனால் செல்வத்தின்மீதே வெறுப்புத் தோன்றியது; இதனை எதிரொலிப்பதாகவே எபிரேயச்சிந்தனை அமைந்தது; அவாவறுத்தல், துறவு, ஒப்புரவறிதல், அருளுடைமை இவற்றையே வற்புறுத்தி நன்றியில் செல்வம் எனச் செல்வத்தைக் குறை கூறியது. தனியுடைமை, நிலவுடைமை, வட்டி வாங்கல், வணிகம் - இவை தாக்குதலுக்கு ஆளாயின. இக் கருத்துக்கள் எல்லாம் பொருளால் விளையும் தீமைகளைச் சுட்டிக்காட்டி அவற்றைக் களையும் முயற்சிகளே.[10]

## 1. 8. கிரேக்கச் சிந்தனை

எபிரேயச் சிந்தனையை அடுத்துக் குறிப்பிடத்தக்கது கிரேக்கச் சிந்தனை. இன்றைய மேலைநாகரிகத்துக்கும் பண்பாட்டுக்கும் அடிப்படையான கருத்துக்களைக் கண்டுகொடுத்த பெருமை கிரேக்கச் சிந்தனைக்கே உண்டு. இதன் தூண்களாக விளங்குகின்றவர் **பிளேட்டோவும்** ( கி. மு. 427—347 ) அவர் மாணவர்

---

10. 'This change in the economic climate is reflected in the spiritual revolt of the prophets. By their denunciation of the covetousness of the new society they sought to guide men back to the ways of living of the covenant, to revive justice and mercy as the principles of social behaviour. They castigated the excesses of the new commercial classes, of the usurers and the 'land robbers'; and they preached once again limitations upon the rights of private property'. pp. 23 & 24, **HET.**

**அரிஸ்டாட்டிலும்** (கி. மு. 384—392) ஆவர். இன்றைய பொருளியலுக்கு உரிய சில கோட்பாடுகளை அவர்கள் கண்டுபிடித்துத் தான் இருக்கின்றனர்.

## 1 8. 1. பிளேட்டோ

பிளேட்டோவைப் பொறுத்தவரையில் அவர் குறிப்பிட்ட பொருளியல் கருத்தாக ஒன்றே ஒன்றைத்தான் சுட்டிக்காட்ட முடிகிறது என்கின்றனர் அறிஞர்கள். அதுதான் மக்கள் உழைப்பில் அமைந்த பாகுபாடு (Division of Labour). மக்களின் ஒருயர்குறிக் கோளாக நகரரசு ஒன்றைப் புனைந்து பார்க்கிறார் பிளேட்டோ அவர் எழுதிய **குடியரசு** (Republic) அதை விளக்குவதே அதில் மக்களை, ஆள்வோர் ஆளப்படுவோர் என இருதிறத்தாராகப் பிரிக்கிறார் அவர். சமூகத்திற்குத் தேவையான எல்லாப் பணிகளையும் தொழில்களையும் செய்வோர் ஆளப்படுவோர் என்னும் பிரிவினர். ஆளப்படுவோரே உழைப்பாளிகள். ஆள்வோர், வேறு எவ்வகை உழைப்பும் இன்றி நாட்டை ஆளும் பணியை மட்டும் மேற்கொண்டவர்கள். அதிலே நாடுகாவலும் படைத்தொழிலும் அடங்கின. இச்சமூக அமைப் பினையும் ஆட்சிமுறையையும் வகுக்கின்றபோதுதான் பிளேட்டோ உழைப்புப்பாகுபாட்டினைக் குறிப்பிடுகின்றார். அவர் வகுத்த மக்கட் பாகுபாடு உலக அமைப்பில் இயல்பானது எனப் பிளேட்டோ கருதி விட்டார். இதனால் சில பொருளியல் உண்மைகளை அவர் உணர முடியாது போய்விட்டது. பொருளாக்க முறைகளில் உழைப்புப்பாகு பாடு இடம் பெறும்போது ஆழ்ந்த பயிற்சியோடு கூடிய நுணுக்கப் பணி (Specialization) உடன் இடம்பெறும். உடன் வணிக அமைப்புக்கள் தோன்றும்; விற்பனைக் களங்கள்விரிந்து பரவிப்பல்கும். இன்று நாம் காணும் இப்பொருளியல் உண்மைகளைப் பிளேட்டோ கண்டு கூற முடியவில்லை. 'உழைப்புப் பாகுபாட்டால் பண்டங் களின் தரம் உயரும்; அவற்றின் பயன் சிறப்புறும்' என மட்டுமே பிளேட்டோ கருதினர்.[11] இக்காரணத்தால் அவர் சில தொழில்கள்

---

11. 'On purely analytical side Plato's main achievement is the account of the division of labour ............ When men specialize and are no longer self-sufficient, a commercial organization becomes necessary.. Plato does not pursue this argument; nor does he consider the specifically social and economic aspects of division of labour.' pp. 27 & 28, HET.

பயனற்றவை என்று குறை கூறினர்; வெளிநாட்டு வணிகம் சிறப் பற்றது எனப் புறக்கணித்தார். பிளேட்டோவின் காலத்தில் அவர் நாட்டில் நிலவுடைமை நிலைபெற்றுக் கடல் வாணிகம் ஓங்கிப் பணப் புழக்கம் பெருகியிருந்தாலும் அச்சமூகம் கூறும் சில பொருளியலுண் மைகளை அவர் கண்டு தெளிய முடியவில்லை. ஆகவே அவரது பொருள் வாழ்வு பற்றிய சிந்தனை இன்றைய பொருளியலறிஞர்கள் போற்றத் தக்கதாக இல்லை. பொருளியல் துறைக்கு அவர் தந்தது மிகச் சிறிதே என்கின்றனர் அவர்கள். ஆனால் அவர் பொருளியல்நூல் எழுதவரவில்லை என்பதையும் நாம் நினைவில் கொள்ளவேண்டும். அவர் ஓரரசியற் சிந்தனையாளரே.

பிளேட்டோ ஆள்வோர்பற்றிச் சொன்ன அரசியற் கருத்துக்கள் பொருளியலுக்கும் உரியனதான். ஆள்வோர் சமூகம் பொதுவுடைமைச் சமூகமாக அமைய வேண்டும் என்றார் அவர். நாட்டின் செல்வத்தை எந்த அளவு எந்த முறையில் பகிர்ந்தளிக்கலாம் என்பன பற்றிய கருத்துக்களை அவர் கூறியுள்ளார். அவர் கண்ட அரசியற்கருத்துக்களின் கற்பனைப்பண்பால் அவருடைய பொருளியற் கருத்துக்களும் வலிவிழந்துவிட்டன.

பிளேட்டோ, அரசியல் சமூகம் ஒழுக்கம் ஆகியவற்றில் அக்கறைகொண்ட ஒருதத்துவச் சிந்தனையாளர். நல்ல அரசியல் கொண்ட நல்ல சமூகம் ஒன்றைக் காணவிழைந்தே 'குடியரசு' வரைந்தார். இடையே அவர் கண்ட சில பொருளியற்கருத்துக்கள் இத்தகைய அறச் சிந்தனையை அடிப்படையாகக் கொண்டவை இதுவே இங்குக் குறிக்கத்தக்கது.

## 1. 8. 2. அரிஸ்டாட்டில்

கிரேக்கச் சிந்தனையாளர்களில் மக்கள் பொருள்வாழ்வினை நுணுகியாராய்ந்து கற்பனை சாராது நடைமுறை சார்ந்து உண்மை கண்டவர் அரிஸ்டாட்டில். அரசியல் சமூக ஆராய்ச்சியே அவர் முதல் நோக்கம். **அரசியல்** (Politics) என ஒருநூலும் **ஒழுக்கவியல்** (Ethics) என ஒரு நூலும் அவர் இயற்றியுள்ளார். இலக்கியச் சிந்தனையையும் அவர் விட்டவரல்ல. **இலக்கியவியல்** (Poetics) என்பது அவர் இலக்கியப்பணி. பொருள்வாழ்வைப் பொறுத்தவரை பின்னைய

பொருளியலுக்கு அடிப்படையாக அமைந்திருக்கும் சில கொள்கைகளை அரிஸ்டாட்டில் கண்டு கூறியிருக்கின்றார் என அறிஞர்கள் போற்றுகின்றனர்.[12] பொருளியலின் எல்லை, அதன் விளக்கம், மாற்றுவினை (Exchange)பற்றிய ஆராய்ச்சி, பணம் பற்றிய கோட்பாடு (Theory of Money) ஆகியவற்றைச் சிறந்த நிலையில் அரிஸ்டாட்டிலிடம் காண முடிகிறது. அவர் பொருளியலை இருகூறாகக் காணுகிறார். ஒன்று நேரே பயன்படுத்தப்படும் பண்டங்களைப் படைத்தல் பற்றியது. இதுவே பொருளியல் என்ற பெயருக்குத் தகுதியுடையது. மற்றது நேரே பயன்படுத்தலுக்கு அல்லாது பண்டமாற்றத்தின் பொருட்டு-வணிகத்தின் பொருட்டுப்-பண்டங்கள் படைத்தல் பற்றியது. அஃதாவது பண்டமாற்றம் அப்பண்டங்களின் வழங்கல் (Supply) ஆகியவை பற்றியது. குறிப்பாகப் பண்டங்கள் கிடைத்தல் பற்றி அரிஸ்டாட்டில் ஆராய்கின்ற போது பண்டமாற்றத்தை (Exchange) இயல்பானது என்றும் இயல் பற்றது என்றும் இரண்டாகப் பிரிக்கிறார். இயல்பான கைமாற்றம் மக்கள் தேவைகளை நிறைவேற்றுவதற்கு மேற்கொள்ளப்படுவது. இவ்வாறு நேரடிப் பயன்பாட்டுக்கல்லாது பொருள் ஈட்டுவதற்கு என மேற்கொள்ளப்படும் வணிகக்கைமாற்றம் இயல்பற்றது (Unnatural) எனவும் அது முறையற்றது (improper) எனவும் அரிஸ்டாட்டில் குறைகூறுகிறார். அவர் இவ்வாறு பிரித்து ஆராய்வதால் மேலும் ஒருண்மை வெளிப்படுகிறது. பண்டங்களுக்குப் பயன்பாட்டு மதிப்பு (Use-Value) கைமாற்ற மதிப்பு (exchange-value) என இருதிறம் உண்டு என்பதே அந்த உண்மை. அரிஸ்டாட்டில் அறிந்த இந்த உண்மை இன்றும் பொருளியலின் ஒரு கோட்பாடாக விளங்கிவருகிறது. மக்கள் வாழ்வு விரிந்து பரவி வளர்கின்றபோது பண்டமாற்று வணிகம் (Barter) போதாததாகிறது. அப்போது பணம் ஒருடுகருவியாகப் பயன்பட வருகிறது. பண்டங்களின் மதிப்பை அளவிடும் பொருளாக (measure) அது விளங்குகிறது. மக்கள் தேவைகளைச் சுட்டிநிற்கும் ஒருபொருளுமாகும் அது (as a sort of recognized representative of demand). பண்டங்களின் மதிப்பைத் தொகுத்து வைத்துப் பின்னர் உதவும் பொருளாகவும் (Store of Value) அது பணிபுரிகிறது.

12. '... ... Aristotle who laid the foundations of much of later economic thought', P. 27, HET.

இச்சூழ்நிலையில் வணிகத்தின் பொருட்டே வணிகமும் தோன்றுகிறது; பணத்தைப் பணத்துக்காகவே ஈட்டித்தொகுக்கும் பாங்கும் தோன்றியது. இவற்றை அரிஸ்டாட்டில் உணர்ந்து கூறுகிறார். இவை முறை யல்ல எனவும் அவர் உணருகிறார். தேவை நிறைவேற்றத்துக்காகப் பொருள் மாற்றம் என்னும் நிலை இல்லாமையாலும், பொருளீட்டலே குறிக்கோளாகவும் முடிந்த முடிபாகவும் அமைதலாலும் இப்பொருள் மாற்றத்தை அவர் கடிகிறார். 'பொருளுக்காகவே பொருள்; பொருள் ஈனும் பொருள்' என்ற நிலைகளை வட்டித்தொழிலில் காணுகின்றோம். பணம் என்பது தானே ஒன்றையும் தராத மலடு. ஆகவே பணத்துக்கு வட்டி என்பது பண்பற்றவற்றுள்ளும் பண்பற்றது. இவ்வாறெல்லாம் ஆராய்ந்து கருதிப் பொருள் வாழ்வுக்கு ஓர் ஒழுக்க அடிப்படையை வகுக்கின்றார் அரிஸ்டாட்டில்.[13] தொழிலுக்கும் வணிகத்துக்கும் பொருளீட்டலுக்கும் ஒழுக்க வரையறை வேண்டும் என்பதே அவர் கருத்து. தொழில் வணிகம் பொருளீட்டல் இவற்றுக்கு எல்லையும் நல்லவை இவை பொல்லாதவை இவை என்ற அற உணர்வும் அவர் கண்ட பொருளியலுக்கு அடிப்படைஎன்பது இவற்றால் புலப்படுகிறது.

அரிஸ்டாட்டிலின் கடிந்துரைகளில் மற்றொரு பொருளியற் கருத்தும் அடங்கியிருக்கிறது. 'பயனுக்காகப் பொருள்' என்றில்லாது 'பொருளுக்காகப் பொருள்' என்பதில் **முதல்** (Capital) என்னும் கருத்தும் தோன்றுகிறது. பொருளாக்கத்-துக்குப் பொருள் ஒரு கருவியாகப் (as a factor of production) பயன்படுகிறபோது அது முதல் எனப்படுகிறது. பொருளுக்குரிய இத்தகைய இருதலைப்பயன் முதன் முதலாக அரிஸ்டாட்டிலின் சிந்தனையில் கிடப்பதைக் கண்டு அறிஞர்கள் வியப்படைகின்றனர். ஆனால் அரிஸ்டாட்டில் இத்தகைய முதலைப் போற்றவில்லை. அது

---

**13. 'Money is intended to be used in exchange, but not to increase at interest; it is by nature barren; through usury it breeds, and this must be the most unnatural of all the ways of making money. In these views Aristotle shows himself to be still anxious to limit the scope of commerce by setting it on an ethical basis and by distinguishing between different forms of it'. p. 33, HET.**

செல்வத்தின் இயல்புக்கு எதிரானது என அவர் கடிகின்றார். பின்னை அறிஞர்கள் அரிஸ்டாட்டில் கூறிய முதலைப் பற்றிய எல்லாக்கருத்துக்களையும் ஏற்றுக்கொண்டு அம்முதலைச் சார்ந்திருக்க வேண்டியதாக அவர் கூறிய ஒழுக்கத்தை உதறி எறிந்தனர். இடைக்காலத்துக் கிறித்தவ சமயம் எல்லையற்ற பொருளாசையையும் முறையற்றுப் பொருளீட்டலையும் வட்டித்தொழிலையும் கண்டித்தபோது அது அரிஸ்டாட்டிலின் இக்கருத்துக்களைத் துணைக்கு அழைத்துக்கொண்டது.

தன் காலத்தில் விரைந்து மாற்றமுற்று வந்த தன் சமூகத்தை நுணுகி ஆராய்ந்தார் அரிஸ்டாட்டில். அவ்வாராய்ச்சியில் அங்கங்கே காணக்கிடந்தவையே மேலே கண்ட பொருளியற் கருத்துக்கள். இன்றை யறிஞருலகம் இவ்வாராய்ச்சிக்காக அவரை ஏற்றிப் போற்றுகின்றது. அவருக்கு முன்னிருந்த கிரேக்கச்சமூகம் உழவின் அடிப்படையில் அமைந்த தன்னிறைவு பெற்ற ஒன்று. அது தொழிலும் வணிகமும் வளமுற்றுச் செல்வமும் சீரும் செழித்த நாடாக அவர் காலத்தில் புத்துருப்பெற்று வந்தது. காசும் கைமாற்றமும் மக்கள் வாழ்வின் பல்கிவரும் பழக்கமாயின. இந்த மாற்றத்தால் தோன்றிய பொருள்வாழ்வினை ஆராய்ந்து நன்மை தீமைகளைச் சுட்டிக்காட்டினார் அரிஸ்டாட்டில். இச் சிந்தனையாளர் கண்ட இக்கருத்துக்களே பின்னர்ப் பொருள் வாழ்வோடு அருள் வாழ்வும் பிணைய வேண்டும் என்று வற்புறுத்திய சான்றோருக்கு ஊக்கம்தந்து உறுதுணையாய் நின்றன.[14]

---

14. 'In Aristotle we see the first separation and reunion of the positive and the ethical approach to the economic process. ........Aristotle ascribes the evils of property not to that institution itself, but to the vicious manner in which men adminster it. But the distinction between the forms which economic activity actually takes and the ethical precepts which should underlie it is clealry brought out. In his analysis of the principles of a society in transition from agricultural self-sufficiency to trade and commerce he remained unsurpassed for centuries. He remains also the chief source of inspiration of all those who wish to effect a worthy compromise between the baser and the higher pursuits of man', P. 35, HET.

## 1. 9 ஏசுநாதர் சமயச்சிந்தனை

மேலைநாட்டில் வளர்ந்த பொருளியற் கருத்துக்களைப் பொறுத்த வரையில் கிரேக்கச் சிந்தனையாளர்களை அடுத்துக் குறிப்பிடத் தக்கவர்கள் கிறித்தவ சமயச்சான்றோர்கள் ஆவர். கிரேக்க நாகரிகத்தை அடுத்து ரோமப்பேரரசு பலநூற்றாண்டுகள் ஐரோப்பிய நாடுகளை ஆண்டுவந்தது. வீரத்திலும் வாழ்விலும் அது ஓங்கியிருந்தாலும் சமூகச்சிந்தனையைப் பொறுத்தவரையில் அதன் பணி ஒன்றுமில்லை என வரலாற்றறிஞர்கள் வருத்தத்தோடு குறிப்பிடுகின்றனர். காரணம் ரோமப் பேரரசின் பொருள் வாழ்வில் பூசலும் பிளவும் மிகுதியாக இல்லை.[15] வணிகம் ஓங்கி வளர்ந்தது. உழவுத்தொழில் பாராட்டப்பட்டுச் செழித்தது. நாடே செல்வம் கொழித்துச் சிறப்புற்றது. புதுப்புது வழிகளில் பெருஞ்செல்வம் திரட்டும் முயற்சிகள் அவ்வப்போது குறை கூறப்பட்டன. பொன், பணமாகப் பயன்படுத்தத் தக்க பண்புடையது என்பது இக்காலத்தில் நிலைபெற்றது. தொழில் நன் முறையில் வளர்ந்துகொண்டு வருகின்றபோது உள்நாட்டு வாழ்க்கைச் சிக்கலால் ரோமப்பேரரசு வீழ்ந்துவிட்டது. ஆனாலும் ரோமநாகரிகம் இன்றைய பொருள் வாழ்வுக்கு அடிப்படையான சில கருத்துக்களைத் தந்து விட்டுச் சென்றது. அவற்றுள் ஒன்று **தனியுடைமையுரிமை** (Right of private property); மற்றொன்று மக்கள் தமக்குள்ளே விரும்பி மேற்கொள்ளும் கொடுக்கல் வாங்கலுக்கான **ஒப்பந்த உரிமை** (Guaranteed freedom of contract). இவ்வுரிமைகளே 17, 18, 19-ஆம் நூற்றாண்டுகளில் **முதலாண்மை** (Capitalism) செழிப்பதற்குப் பெருந் துணையாயின என்பது பலரும் அறிந்தது. மேலும் இவை கட்டற்ற பொருள் வாழ்வுக்கும் தனியுரிமைக்கும் வழிவகுத்தன.[16]

---

15. 'All one can say in relation to economic thought is that the struggle between the old and the new society in its specifically economic aspects, which was vividly before the eyes of Greek philosophers and which inspired their views, appears not to have been so marked in Rome.' P. 36, HET.

16. 'Thus while Aristotle becomes the philosopher of the Middle Ages and one of the sources of the Cannon Law, it is Roman Law which serves as an important basis for the legal doctrines and institutions of capitalism.' P. 38, HET.

அரிஸ்டாட்டிலின் கருத்துக்கள் இவற்றுக்கு மாறாக அறத்தை ஒட்டிய பொருள் வாழ்வை வற்புறுத்தித் தனிமனிதர் உரிமைக்கும் உடைமைக்கும் எல்லை கோலின. ரோமப்பேரரசின் வீழ்ச்சிக்குப் பின்னர் இடைக்காலத்தில் கிறித்தவசமயம் அரிஸ்டாட்டிலின் கருத்துக்களைத் துணைக்கொண்டு மக்கள் பொருள்வாழ்வினை நெறிப் படுத்தும் பணியை மேற்கொண்டது. ரோமப்பேரரசின் தொடக்க காலத்திலேயே ஏசுநாதர் புரட்சி செய்தார். ரோமப்பேரரசில் ஆள்வோரும் செல்வரும் ஒருபுறம்; ஏழைகளும் உழைப்பாளர்களும் அடிமைகளும் ஒருபுறம்; இருசாரார் இடையேயும் பெரும்பிளவு மடுவாகக் கிடந்தது. ஏசுநாதர் ஏழைபங்காளராக இருந்து எல்லார்க்கும் எல்லாம் என்பதான சமவாழ்வு, சமவுடைமையை வற்புறுத்தினார். ஓங்கிய செல்வத்தையும் சுரண்டலையும் தனியுடைமையையும் கட்டற்ற வாழ்வையும் அவர் கடிந்துரைத்தார். ஏசுநாதர் வகுத்த இந்த அன்புச் சமயத்தின் பண்பு இடைக்காலத்தில் தடம்புரண்டது. அப்போது அது நிலமுதலாளித்துவத்துடன் கைகோத்துக் களிப்புற்றது; அதன் கூட்டாளியாகியது; அன்றைய சமூகத்தை அதன் குறைநிறைகளோடு காக்கவே பணிபுரிந்தது ஆனால் மறுபுறம் ஆன்மீகம் பேசி எல்லா இடங்களிலும் ஒழுக்கத்தை வற்புறுத்தியது. இவ்வுலகில் மக்கள் நடத்தும் பொருளியல்வாழ்வையும் அது சமயவாழ்வாகவே கருதியது. 'இம்மைச்செய்வது மறுமைக்கு ஆம்' என்பதே அதன் முழக்கம். மறுமையுள் இம்மை அடக்கம்; தனக்கென வாழாது பிறர்க்கென வாழ வேண்டும் எனவும் வற்புறுத்தியது; அழுக்காறு, அவா, பொருட்பற்று இவற்றை நீக்குக என விதித்தது. ஆனாலும் பொருள் தீராத தீவினை என ஏற்றுக்கொண்டது. செல்வரைக் குறை கூறி ஏழையை ஏத்தியது; பரமண்டலத்தில் பணமுடையோருக்கு இடமில்லை என்று பறையறைந்தது; சுரண்டலைச் சாடியது. பொதுவாக இவ்வுலகில் வாழ்வாங்கு வாழ்தலை வெறுத்தது; பழமையைப் போற்றியது; புதுமையைத் தூற்றியது. இவ்வுலகின் கொடுமை கண்டு கண்மூடிக்கொண்டது. சமூகத்தின் மேடுபள்ளங்களுக்குக் காவலாகியது. தொடக்கத்தில் ஏசுநாதர் மொழிகள் அன்றைய சமூகஆராய்ச்சியாக விளங்கின. ஆனால் இடைக்காலத்தில் சமயமும் வாழ்வும் புளியம்பழமும்

தோடும் போல் உறவற்றுப் போய்விட்டன[17]. வளர்ந்து வரும் தொழிலையும் வணிகத்தையும் அவற்றின் அடிப்படையில் அமைந்த பொருள் வாழ்வினையும் அது வரவேற்காததே இதற்குக் காரணம்.

## 1. 10. தாமஸ் அக்கினாஸ் சிந்தனை

ஆனால் முன்னேற்றத்தை எவ்வளவு நாள்தான் தடுத்து நிறுத்த முடியும்? வளர்ச்சியின் வேகம் தடைகளைத் தகர்த்தெறிந்தது. **தாமஸ் அக்கினாஸ்** (Thomas Aquinas) என ஒருதூயோர் தோன்றி (கி. பி. 1225 – 1274)க் கிறித்தவ சமயத்திற்குப் புது விளக்கங்களும் புதுக்கருத்துக்களும் தந்தார். அவர், செல்வமும் வணிகமும் மக்கள் நன்மைக்குப் பயன்படுமானால் ஏற்றுக்கொள்ளத் தக்கவையே; அல்லாத போதுதான் அவை தீயவை என்றார். சமூகநன்மையைக் கருதி ஈகை வேண்டுமென்றார். தனக்குப் போக எஞ்சியவற்றை ஒப்புரவு செய்தலை அவர் வற்புறுத்தினார். இதன் பொருட்டு ஏழைகள் செல்வரிடமிருந்து பொருளைத் திருடுதலைக் கூட விரும்பினார். வணிகத்தின்வழிப் பொருளீட்டலில் மக்கள் மனம் போன போக்கில் செல்லக்கூடாது என்றும் இதில் கர்த்தரின் ஆணையே மேலானது என்றும் அவர் வற்புறுத்தினார். பண்டங்களின் விலை நியாய மானதாக இருத்தல் வேண்டும்; பண்டங்களைப் படைப்போர், தம் வாழ்க்கைத் தேவைகளை நிறைவு செய்வதற்குப் போதுமானதே அந்த நியாயமான விலை என அவர் வகுத்துரைத்தார். வட்டித் தொழில் கொடுமை; ஆகவே கூடாது என்பதும் அவர் கருத்து. தாமஸ் அக்கினா சின் கருத்துக்கள் பழஞ்சமயக் கருத்துக்களை விடாது போற்றியும் ஓரளவு இன்றைப்பொருளியலை உடன்பட்டும் செல்லுதலைக் காணலாம்.

கிரேக்கச் சிந்தனை, பொருள்வாழ்வு பற்றிய கருத்துக்களுக்கு அறத்தை அடிப்படையாக்கியது; அப்போது சமயம் பெரிதில்லை. பின்னர்த் தலையெடுத்த கிறித்தவ சமயச் சிந்தனை, தான் கண்ட பொருள்வாழ்வு பற்றிய கருத்துக்களுக்குச் சமயத்தை அடிப்படையாகக் கொண்டது. அதன் சமயத்துள் அறம் அடக்கம் கொண்டது. இங்கு நினைவுகூரத்தக்க கருத்துக்கள் இவையே.

---

17 'Thus the church was able sometimes to condemn those economic practices which increased exploitation and inequality and sometimes to preach an indifference to the miseries of the world. In general it defended the inequalities of stations to which it had pleased God to call men' p. 44, HET.

## 1. 11. இந்தியச் சிந்தனை

அடுத்து இந்தியப் பொருளியற்சிந்தனையும் இங்குக் கருதத்தக்கது. இன்றைப் பொருளியலே மேலைநாடுகளுக்கு உரியது எனக் கருதப்படுகிறது. 17-ஆம் நூற்றாண்டை அடுத்து அங்குத் தோன்றிய பொருள் வாழ்வில் முகிழ்த்ததே அது. அத்தகைய பொருள் வாழ்வு கிழைநாடுகளில் தோற்றம் பெறவில்லை. ஆகவே 17-ஆம் நூற்றாண்டுக்கு முன்னர் மேலை நாடுகளில் பொருளியல் எனக் குறிப்பிடுவதற்கு ஏற்ப உருவம் பெற்ற நிலையில் ஒன்றும் இல்லாதது போலவே இந்தியாவிலும் பொருளியல் ஆகிய கலை தோன்றவில்லை. ஆனாலும் மேலை நாடுகளில் அரிஸ்டாட்டிலும் அக்கினசும் பொருள் வாழ்வு பற்றிச் செய்த சில சிந்தனைகள் போன்று இந்தியாவிலும் அறிஞர் சிலர் அங்கும் இங்குமாகக் கருத்துக்கள் வழங்கிச் சென்றிருக்கின்றனர். அவற்றைத் தொகுத்துக் கண்டால்தான் இந்தியாவின் பொருளியற்சிந்தனை புலப்படும். இந்தச் சிந்தனை பெரும்பாலும் சமஸ்கிருதத்திலும் பாலியிலும் பிராகிருதத்திலும் உள்ளது.

வடமொழி மரபு, அறிவுத்துறைகளை நான்காக வகுத்துக் காண்கிறது. ஒன்று **ஆன்வீட்சிகீ (Anvikshiki)** என்பது; இது தத்துவங்கள் பற்றியது. இரண்டாவது **த்ரயீ (Trayi)** என்பது; இது வேத இதிகாச புராணங்கள் பற்றியது. மூன்றாவது **வார்த்தா (Varta)** என்பது. இது பொருள்வாழ்வு பற்றியது. நான்காவது **தண்டநீதி (Danda niti)** எனப்படுவது; **நீதி சாஸ்திரம்** எனவும் படும். இது சமூக ஆட்சிமுறை பற்றியது.

வார்த்தா என்பது வட்டித்தொழில், உழவுத்தொழில், பண்டமாற்று, பசுஓம்பல் முதலியவையாம்[18]. இதனால் வார்த்தா (அல்லது வார்த்தை) பற்றிய நூல் பொருளியல் என்பதில் ஐயமில்லை. இச்சொல் தொழில் என்னும் பொருளுடைய **வர்த்தி (Vrtti)** என்பதிலிருந்து தோன்றியதாக அறிஞர் கருதுவதும் இதனை உறுதி செய்கிறது. தொடக்க காலத்தில் வார்த்தை என்பதனுள் வட்டித்தொழில் இடம் பெறாமல் இருந்ததாம். பிறதொழில்கள் வளர்ச்சியடையாத காலத்தில் உழுதொழிலே தலைமைத்தொழிலாக இருந்திருக்கிறது. பண்டமாற்று

18. பரிமேலழகர் 512-ஆவது குறளுரையில் இதனை வார்த்தை என வழங்கி விளக்குகிறார். (வடமொழி ஈற்று ஆகாரம் தமிழில் ஈற்று ஐகாரமாகத் திரியும்; ஆசா ஆசை என்பது போல). சுக்கிர நீதி, அதி. 1, சு, **156.** வார்த்தையை விளக்குகிறது.

என்பது வணிகம். பசுஓம்பல் பசுக்களை மட்டும் காத்தலைக் குறிப்பதாகக் கொள்ளுவது பொருத்தமாகத் தோன்றவில்லை. இக்கருத்து பசுவைப் புனிதமாகக் கருதும் பிற்காலத்தில் தோன்றியதாக இருக்கலாம். பொதுவாகக் கால்நடைகள் ஓம்புதலை இது குறிப்பதாகக் கொள்ள வேண்டும்.

பொருள்வாழ்வுக்குரிய கருத்துக்களை ஓரளவு கூறுவது **அர்த்த சாஸ்திரம்** என்னும் துறை. இது குறிப்பாகச் சட்டம், அரசு, பொருள் ஆகியவை பற்றி ஆராய்வது. **கவுடலியரின் அர்த்த சாஸ்திரம்** இத்துறையில் புகழ் பெற்றது. இன்று **அரசுப்பொருளியல்** (Public Finance) எனக் கருதப்படும் துறையை அர்த்த சாஸ்திரம் நன்கு ஆராய்கிறது. இயற்றலும் ஈட்டலும் காத்தலும் வகுத்தலும் எவ்வாறு என்பதை இந்தியச் சிந்தனையாளர்கள் ஆழ்ந்து எண்ணியிருக்கின்றனர் என்பதற்கு இத்துறை சான்றாகும். அர்த்த சாஸ்திரங்களைப் போன்றே நீதிசாஸ்திரங்களும் தர்மசாஸ்திரங்களும் மக்களின் பொருள்வாழ்வு பற்றிப் பல்வேறு கருத்துக்களைக் கூறியிருக்கின்றன. இவற்றுள் **சுக்கிரர்** என்பார் இயற்றிய **சுக்கிர நீதி** என்பது கவுடலியரின் அர்த்தசாஸ்திரத்தைப் போன்று புகழ்பெற்றது. புத்த சமண சமயங்களும் மக்களின் பொருள் வாழ்வினை நெறிப்படுத்த எவ்வளவோ ஆணைகளை இயற்றி-வைத்திருக்கின்றன. இவை அனைத்தும் பொருளின் இயல்புபற்றியும், பொருளீட்டுதலில் கைக்கொள்ள வேண்டிய நெறிகள்பற்றியும் பொருளைப் பயன்படுத்தும் வழிகள்பற்றியும் அறிவுரைகள் கூறுகின்றன.

இந்தியச் சிந்தனை பொருள்வாழ்வுபற்றி என்ன கூறும் என்பதனை அறிவதற்கு முன், அது மக்கள் வாழ்வின் இயல்புபற்றியும் அதன் நோக்கங்கள்பற்றியும் வகுத்திருக்கும் கொள்கைகளை அறிந்து கொள்ளுதல் வேண்டும். காரணம் இக்கொள்கைகள் மக்கள் பொருள் வாழ்வினை மிகவும் பாதிக்கின்றன.

பொதுவாக இந்தியச் சமயங்கள் இவ்வுலக வாழ்க்கையைத் தூற்றிப் பேசி அவ்வுலகவாழ்க்கையைப் போற்றிப் பேசுகின்றன. 'இம்மை வாழ்க்கை மாயம்' என்னும் சமயமும் இங்கு உண்டு. உலகம் நிலையாமை, யாக்கை நிலையாமை, செல்வம் நிலையாமை எனப் பல்வேறு 'ஆமைகளை' வற்புறுத்திப் பேசுகின்றன இந்தியச் சமயங்கள். இவற்றால் பொருள்வாழ்வில் மேம்பாடு அடையவேண்டும் என்ற

நோக்கமும், பொருளீட்டலில் ஆர்வமும், பொருள் துய்ப்பதில் அக்கறையும் மக்களிடத்து இருக்கும் என எதிர்பார்க்க முடியாது. இந்திய அறநூல்கள் எல்லாம் பெரும்பொருளீட்டலையும் துய்த்தலையும் இழித்துரைத்தே வந்திருக்கின்றன. ஆனால் நடைமுறையில் பெரும் பொருளீட்டலும் துய்த்தலும் இல்லாமல் இல்லை. அர்த்தசாஸ்திரம் போன்றவை இவற்றை வற்புறுத்துதலையும் காணலாம்.

இந்தியத் தர்மசாஸ்திரங்களாகிய அறநூல்கள் மக்களின் அகம் புறம் அனைத்தையும் நெறிப்படுத்தும் நோக்கம் உடையன. இவற்றில் தனிமனிதனின் ஊண் உறக்கம் முதற்கொண்டு உலக வாழ்வுவரை ஒழுக்கவிதிகள் உண்டு. பிரமசரியம், கிருகஸ்தம், வானப்பிரஸ்தம், சந்நியாசம் ஆகிய நான்கு நிலைகள் தனிமனிதனுக்கு ஆகும் எனத் தர்மசாஸ்திரங்கள் வகுத்திருக்கின்றன; தனிமனிதனின் வாழ்க்கை இயல்புகளைத் தர்மம் அர்த்தம் காமம் மோட்சம் எனவும் பிரித்துக் காணுகின்றன இவை அனைத்தும் மக்களின் பொருள் வாழ்வினைப் பெரிதும் பாதிப்பன; ஈட்டலும் துய்த்தலும் இவற்றின் மீதுள்ள நம்பிக்கையின் வன்மை மென்மையினை ஒட்டியே அமைந்திருக்கும். இன்றைய பொருளியல், பொருள்வாழ்வைப் பொருளாக்கம் (Production), பொருள்மாற்றம் (Exchange), பொருள் பகிர்வு (Distribution), பொருள் துய்த்தல் (Consumption) என நான்காக விளக்குகிறது. இவற்றில் பொருள் பகிர்தலையும் பொருள் துய்த்தலையும் பற்றிச் சமயசாஸ்திரங்களும் தர்மசாஸ்திரங்களுமே கூறுகின்றன எனலாம். பொருளாக்கத்தையும் பொருள் மாற்றத்தையும் (பண்டமாற்று, வணிகம்) அர்த்த சாஸ்திரங்களும் நீதி சாஸ்திரங்களும் கூறுகின்றன எனலாம். அன்பு, அருள், இரக்கம், விருந்தோம்பல், பகுத்துண்ணல், சுற்றந்தழுவல், ஈகை, திருப்பணி, அவாவறுத்தல் புலாலுண்ணாமை, காணிக்கை, அன்னதானம், சொன்னதானம், யாகம், நடுவு நிலைமை, ஐம்புலத்தாறு ஓம்பல் முதலிய எண்ணற்ற ஒழுகலாறுகள் பொருள்வாழ்வைப் பாதிக்கும் திறத்தைச் சிறிது எண்ணினால் நன்குணரலாம். இத்தகைய ஒழுக்கவாழ்வில் இன்றைய பொருளியல் போற்றும் தனிமனிதர்உரிமை ஓரளவு உண்டு. கள்ளாமை, வெஃகாமை முதலியவை இதற்கு அரண். ஆனால் அதே போது குடும்பமும் சமூகமும் சமயமும் முக்கியமானவை என்பதும் வெளிப்பட வற்புறுத்தப்படுகின்றன. இதனால் தனக்கு வாழ்தலைவிடப் பிறர்க்கு வாழ்தலே போற்றுதலுக்கு உரியதாகிறது.

இந்தியச் சமூகத்தில் அமைந்த சாதிப்பாகுபாடு, பொருள் வாழ்வினைப் பெரிதும் பாதிப்பது. சாதியாசாரங்கள், வருணாச்ரம தர்மங்கள் எல்லாச் சாஸ்திரங்களிலும் பேசப்படுகின்றன. சாதிப் பாகுபாடு இந்திய மக்களின் பொருள்வாழ்வைப் பாதித்த வகைகள் இனிமேல்தான் ஆராயப்படவேண்டியிருக்கின்றன. அவற்றின் நன்மை தீமைகளும் இனிமேல்தான் கணக்கிடப்படவேண்டும். சாதிப்பாகுபாட்டில் உழைப்புப்பாகுபாடு என்பது இன்று பொருளியலறிஞர் காண்பது போன்று அமைந்திருக்கலாம். சாதிப்பாகுபாடு பொருளாக்கத்தில் இவ்வாறு வரையறை செய்வது போன்றே பொருள்துய்ப்பதிலும் வரையறை செய்கின்றது. கீழ்ச்சாதியினர் பொருள்துய்த்தல் கடுமையாகவும் கொடுமையாகவும் வரையறைக்கு உள்ளாகியுள்ளது. மேற் சாதியினரே எல்லா இன்பங்களுக்கும் உரியவர்களாகக் கொள்ளப் பட்டனர்.

மேலை நாடுகளுக்குரிய நாகரிகங்களில் தோன்றிய பொருளியற் கருத்துக்களை அறிஞர்கள் ஆராய்ந்து தொகுத்துக் கண்டதுபோல இந்திய நாட்டில் இன்னும் ஆராய்ச்சி நடைபெறவில்லை. இருந்தும் பண்டை நூல்களைப் படித்துப் பார்க்கின்றபோது கீழ்க்கண்ட கருத்துக்கள் அங்குப் பொருள்வாழ்வு பற்றிய கருத்துக்களாகக் கிடைக்கின்றன.

இந்தியாவில் பொருளாக்கத்துக்குரிய காரணிகளான இயற்கை (நிலம்)[19], உழைப்பு, முதல், அமைப்புத்திறன் ஆகியவற்றின் இயல்பும் பயனும் உணரப்பட்டிருந்தன. உழவு பெருந்தொழிலாகவும் தலைசிறந்த தொழிலாகவும் விளங்கியது. நீர்ப்பாசனம், உரம், பயிர் வகை, காலமாறுபாடு, மண்ணியல்பு, ஆழுழவு, அகலுழவு, உழவுக்கு வரும் தீமைகள், கால்நடை, நிலஉரிமை, பங்கீடு ஆகியவை பற்றிய கருத்துக்கள் அன்று நன்கு உணரப்பட்டிருந்தன.

பண்டங்களின் மதிப்பு, விலை ஆகியவைபற்றிய கருத்துக்கள் தெரிந்திருந்தன. பண்டங்கள் எந்த அளவு கிடைக்கின்றன என்பதைப் பொறுத்தும் அப்பண்டங்களின் பயனைப் பொறுத்தும் விலைகள் அமைகின்றன என்ற கொள்கை அறிஞர் அறிந்ததுதான்[20].

---

19. 'We find the dictum in Sukranity that land is the source of all wealth'. P. 7, ETI.

20. 'Firstly Price is what is paid (in money) for acquiring an article, and secondly that prices are high or low according as they possess or do not possess utility'. Sukraniti, Ch II, 717—719, quoted in P. 9, ETI.

வணிகம் அன்று நன்முறையில் செழித்து வளர்ந்திருந்தது. வாங்கல், கொடுத்தல், கலப்பு, குறியிடல், வகைபிரித்தல், தரகர் ஆகியவை பற்றிப் பலப்பல விதிகள் பண்டை நூல்களில் வகுத்து வைக்கப்பட்டிருக்கின்றன. சுரங்கப்பொருள்கள் காட்டுப்பொருள்கள் முதலானவற்றில் அரசே அனைத்துரிமையும் (Monopoly) கொண்டு தொழிலும் வணிகமும் நடத்திவருதல் உண்டு.

வாடகை, வாரம், வட்டி, கூலி, முதலியவை பற்றி ஆராய்ச்சிகள் நடைபெற்றிருக்கின்றன. அவற்றின் இயல்பறிந்து அளவுகள் பலவாறு குறிக்கப்பட்டிருக்கின்றன. தொழிலில் மேற் பார்வையாளர்பங்கு நன்கு அறியப்பட்டிருக்கிறது. தொழிலாளர் நலமும் நன்கு பேணப்பட்டுள்ளது.

பண்டை இந்தியாவில் சமூக அறிவுத்துறைகளில் அரசியல் ஆழமாக ஆராயப்பட்டுள்ளது. பொருட்பால் அல்லது அர்த்தசாஸ்திரம் என்பது பெரும்பாலும் அரசியல் பற்றி ஆராய்வதே. அரசியலுக்கு இன்றியமையாதது பொருள் வருவாய். அதனால் இந்திய அரசியற் சிந்தனை அரசின் வருவாய், வருவாய் வழிகள், செலவு முதலியவை பற்றிப் பலபட ஆராய்ந்துள்ளது. அரசின் 'இயற்றலும் ஈட்டலும் காத்தலும் வகுத்தலும்' எவ்வளவு விரிந்தும் ஆழ்ந்தும் சென்றுள்ளன என்பதனைப் பின்னரும் காணலாம்.

இத்தகைய பொருளியற் கருத்துக்களைப் பேசும் நூல்கள் இம்மை வாழ்வை வற்புறுத்தி ஆராயும் அர்த்தசாஸ்திரம், நீதி சாஸ்திரம், வார்த்தாசாஸ்திரம் முதலியவை. மேலே தொகுத்துக் காட்டிய இந்தியப் பொருளியற் கருத்துக்கள் பண்டைக்காலத்திலும் இடைக்காலத்திலும் மேலைநாடுகளில் தோன்றிய பொருளியற் கருத்துக்களைவிடப் பரந்தவையும் விரிந்தவையும் நிறைந்தவையுமாகத் தோன்றுகின்றன. ஆனால் இந்தச் சாஸ்திரங்களும் அவை கூறும் கருத்துக்களும் சமய வாழ்வையும் மறுமை வாழ்வையும் வற்புறுத்தும் தர்மசாஸ்திரங்களுக்கும் சமயச் சாஸ்திரங்களுக்கும் அடங்கியே செல்லு பவைதான். இத் தர்ம சமயசாஸ்திரங்களின் கருத்துக்கள் மேலே தொகுத்துரைக்கப்பட்டன. ஆனால் இங்கு எப்பொருளியற் கருத்து எத்தர்மத்திற்கு அடங்கிச் செல்கிறது என்பது போன்ற விளக்கம் தரமுடியவில்லை. எடுத்துக்காட்டாக அர்த்தசாஸ்திரம் எந்த அளவு தர்ம சாஸ்திரத்தைத் தாங்கிச் செல்கிறது என்பது பற்றி ஒன்றும் கூற முடியவில்லை. இத்தகைய ஆராய்ச்சி இனித்தான் வளரவேண்டி இருக்கிறது. ஆகவே குறிப்பாகப் பேசாது பொதுவாகவே பேச

வேண்டியிருக்கிறது. மேலைநாடுகளில் வளர்ந்ததை விடப் பொருளியல் கருத்துக்கள் இங்கு மிகுந்து வளர்ந்திருந்தாலும், அங்கிருந்ததைவிடச் சமயம் இங்கு அக்கருத்துக்களை மிகுதியும் அடிமைகொண்டிருந்தது என்பதும் தெளிவாகிறது. இந்திய மரபின் சிந்தனையை இதுவரை கண்ட முறையில் ஒருண்மை வலியுறுகிறது. அதாவது சமயம், ஒழுக்கம், அரசியல், பொருளியல் ஆகியவை ஒன்றை ஒன்று சார்ந்து இணைந்து செல்பவை என்பதாகும்[21]. இவற்றில் சமயமே தலைமை பூண்டு செல்லுகிறது; ஒழுக்கம் அதனை அண்டிச் செல்கிறது.

## 1. 12. முடிவுரை

பண்டை உலகில் பொருளியல் எவ்வாறு வளர்ந்தது என்பதை அறியும்பொருட்டு இந்திய மேலைநாட்டுச் சிந்தனையாளர் கருத்துக்களை ஆராய்ந்ததில் கீழ்க்கண்ட கருத்துக்கள் நிலைபெறுகின்றன.

1. பொருளியல் என ஒருதுறை பண்டைக்காலத்தில் இல்லை. பொருளியலைக்குறிக்கும் சொல்கூட மேலைநாடுகளிலும் கீழைநாடுகளிலும் இல்லை[22]. அன்றைய சமூகச் சூழலும் பொருள் வாழ்வும், விளக்கம் கூறும் அளவுக்கும், ஆராய்ச்சிக்கும் உரியவை எனக் கருதுமாறு இன்றுபோல் வளர்ச்சியும் வளமும் பெற்றிருக்கவில்லை என்பதே இந்நிலைக்கு காரணம். வளர்ச்சியும் வளமும் இருந்தாலும் கூட மக்கள் அவற்றின் இயல்பையும் காரணங்களையும் புரிந்துகொண்டிருக்கமாட்டார்கள் என்பதும் இதற்குக் காரணம்.

---

21. 'Finances furnishes a meeting point for Politics, ethics and economics. It is, therefore, natural that throughout history, theories of finances should be largely mixed up with their political and ethical aspects and implication'. P 12, ETI.

'Summing up we may state that in the ancient economic thought, the interdependence of economics, political and ethical conception is not only realized in theory, but is put into practice'. P. 15, ETI

22. 'There is no single expression in Sanskrit which connotes exactly what is implied by modern economics ..........In classical times, economics had not emerged as a subject differentiated from other branches of philosophical speculations. The ancient Greeks had no exact words to express what we now mean by 'economics.' P. 2, ETI.

2. பண்டைய அறிஞர்கள் சமூகம், சமயம், அரசியல், அறம், நீதிமுறை ஆகியவைபற்றி இயற்றிய நூல்களில் பொருளாலும் பொருளோடும் அமைந்த மக்கள் வாழ்வுபற்றிப் பலப்பல கருத்துக்கள் கிடைக்கின்றன. அவ்வறிஞர் சிந்தனைப்போக்கில் சமயமும் சமூகமும் அறமும் அரசியலும் பொருள்வாழ்வோடு பிரிக்க முடியாது பிணைந்தவையாகும். ஆகவே அவர்கள் நூல்களில் ஒரு சிறுபகுதியாகவே பொருளியற் கருத்துக்கள் அமைந்துள்ளன[23].

3. இவ்வாறு காணக்கிடக்கும் கருத்துக்கள்கூட அன்றைய பொருள்வாழ்வை உள்ளவாறு எடுத்துவிளக்கும் அறிவியலாக இல்லை. மக்கள் பொருள்வாழ்வை அறத்தை ஒட்டி நெறிப்படுத்துவனவாகவே அவை உள்ளன. 'நல்லவை இவை; அல்லவை இவை; செய்யத்தக்கவை இவை; தகாதவை இவை' என ஆணையிடுபவை அவை. அங்கே அறத்திற்கு அடங்கி அதன் வழிப்படுவதே பொருள்.

இதுகாறும் கண்ட கருத்துக்களே வள்ளுவர் கண்ட பொருளியற் கருத்துப்பற்றிய ஆராய்ச்சிக்குப் பின்னணி. இப் பின்னணியோடு குறளைக் காண்பது குறளின் இயல்பினையும் சிறப்பினையும் தனித்தன்மையையும் அறிய உதவும். மேலே கண்ட மூவகைக் கருத்துக்களும் குறளுக்கும் வள்ளுவர்க்கும் ஒத்து வருகின்றன. வள்ளுவரும், பிளேட்டோ போன்றும் அரிஸ்டாட்டில் போன்றும் அக்கினாஸ் போன்றும் உலகச்சிந்தனையாளரில் ஒருவராய் மக்கள் வாழ்வுபற்றி முழுமையாகச் சிந்தித்து அவர்கள் பொருள் வாழ்வை அறமுறைப்படி நெறிப்படுத்த முயன்றுர் என்பது இப் பின்னணியால் தெளிவாகப் புலப்படுகிறது. இதனை விரிவாக இனிக் காணலாம்.

---

23. 'As with Plato and Aristotle, for whom economic matters were incidental to the conduct of the state and the development of certain abstract ideas, so with Aquinas'.P. 5. BTGE.

இயல் 2

# வள்ளுவர் சிந்தனை

## 2. 1. பொருளியல் தோன்றாமை

வள்ளுவர் கண்ட பொருள் வாழ்வினை உலகச் சிந்தனையாளர் கருத்தோட்டத்துடன் வைத்துக் காணுதல் பொருட்டு அச்சிந்தனையாளர் கருத்துக்கள் முன்னைய இயலில் தரப்பட்டன. அக்கருத்தோட்டத்தின் மூன்று இயல்புகள் முடிவில் தொகுத்துச் சுட்டிக்காட்டப் பட்டன. அவ்வியல்புகள் இந்தியா உட்பட்ட அனைத்து நாடுகளுக்கும் பொதுவானவை. தமிழ்ச் சிந்தனையாளர் வகுத்த குறளிலும் அவ் வியல்புகளைக் காணுகின்றோம். குறளில் இவ்வியல்புகள் எவ்வாறு அமைந்துள்ளன என்பதை இனிக் காணலாம்.

### 2. 1. 1. பொருளியலுக்கு விளைநிலம் இன்மை

பொருளியல் என்னும் ஒருதுறையறிவு பண்டைக் காலத்து உலகில் வளர்ந்திருக்கவில்லை என்பது முதல் முடிவு. இந்நிலைக்குக் காரணங்கள் பல. பொருளியல் ஒருதனித்துறையாக வளரத்தக்க அளவுக்கு அன்றைய பொருள்வாழ்வு வளர்ந்திருக்கவில்லை. அதாவது வணிகமும் தொழிலும் நிதிப்புழக்கமும் பேரளவில் வளர்ந்திருக்க வில்லை. அத்தகைய வளர்ச்சி கொலம்பசின் புத்துலகக் கண்டுபிடிப் பிற்குப் பின்னர்க் கடல்வழி அயல்நாட்டு வணிகம் பெருகியபோது தான் ஏற்பட்டது. முதலாளித்துவம் என வழங்கப்படும் முதலாண்மை (Capitalism) தோன்றி வளர்ந்தபோது உடன் வளர்ந்ததே பொருளியல்துறை. பண்டைஉலகில் தமிழகம் நடத்திய கடல்

வணிகத்துக்கு மிகச் சிறந்த ஓரிடம் உண்டு. மூவேந்தர் ஆட்சியின் கீழ்ப் பலப்பல கடல் துறைமுகங்கள் இரவு பகலாக வணிகம் நடத்தி வந்தன; எண்ணற்றோர் பணி புரிந்தனர். கிழக்கே சீனம் வரையும் மேற்கே கிரேக்கம் வரையும் பல நாடுகளோடு அன்றைய தமிழர் வணிகம் நடத்தி வந்தனர். இவ்வணிகத்துக்கு உரிய பண்டங்கள் எல்லாம் கடலிலும் கானகத்திலும் மலையிலும் நிலத்திலும் விளைந்த பண்டங்களே. வணிகத்துக்கு உரிய பெருந்தொழில்களும் அவை தந்த ஆக்கப்பொருள்களும் அன்று இல்லை. கட்டிடக்கலைநூல் போன்ற துறைகள் தமிழகத்தில் அன்று தனியே வளர்ந்திருந்தாலும் பொருளியல் தனியே வளரவில்லை. தமிழகத்திலும் அன்றைய வணிகமும் தொழிலும் அதற்குப் போதியனவாக இல்லை போலும். வள்ளுவர் இத்தகைய தமிழகத்தை அறிந்திருப்பார். ஆனாலும் அவர் நூலில் இத்தமிழகத்தின் பொருள்வாழ்வுபற்றிய குறிப்புக்கள் போதுமான அளவு இடம்பெறவில்லை. அவை இடம்பெறுதல் அவர் நோக்கமும் அல்ல போலும்.

## 2. 1. 2. அறிவாற்றல் இன்மை

தொழிலும் வணிகமும் ஓரளவு வளர்ந்திருந்தாலும் அவற்றின் இயல்புகளையும் காரணங்களையும் விளைவுகளையும் அன்றைய மக்களும் அறிஞர்களும் எளிதில் புரிந்து கொண்டிருக்க முடியாது என்கின்றனர் இன்றைய அறிஞர்கள். அவ்வாறு புரிந்து கொள்ள முடியாதபோது அப் பொருள்வாழ்வு ஒரு தனிக்கலையாக வகுக்கப் பெறுதலும் அரிது. தமிழகத்து நிலையும் இது தானே?

## 2. 1. 3. புறக்கணிப்பு

பொருளியல் தோற்றம் பெறுமைக்கு மற்றொரு காரணமும் உண்டு என்கின்றனர் அறிஞர்கள். தொழில்கள் அன்று சிறு தொழில்களாகவே இருந்தன. அத்தொழில்களில் ஈடுபட்டிருந்த மக்கள் சமூகத்தில் தாழ்நிலையில் இருந்தவர்கள்; அவர்களுக்குப் பெருமையும் மதிப்பும் இருந்ததில்லை; ஓரளவு இழிந்தோராகவே கருதப்பட்டனர். ஆகவே அவர்கள் ஈடுபட்டிருக்கும் தொழில்களுக்கும் பெருமையும் மதிப்பும் கிடைக்காமற் போயின. இதனால் அவற்றை ஆராய்வதற்கும் கற்பதற்கும் அன்றைய அறிஞர்கள் துணிவும் முயற்சியும் மேற்கொள்ளவில்லை. வணிகமும் வணிகர்நிலையும் இத்தகைய சமூக இடுக்கணுக்கே ஆட்பட்டன. இதனால் தொழிலும் வணிகமும்

படிக்கத்தக்க தகுதி பெறுது புறக்கணிக்கப்பட்டன; இத்தகைய கணிப்பு ஐரோப்பியச் சமூகத்தில் கண்ட ஒன்றுதான்.

ஆனால் இந்திய நிலையும் இது தானா என்பது ஆராய்வதற்கு உரியது. இந்து நாகரிகத்தில் வணிகம் மூன்றும் வருணத்தார்க்கு உரிய பணி. அவ்வருணம் மேல் வருணம் என்ற போற்றுதலுக்கு உரியதுதான். சமணசமயம் வணிகரை ஏற்றிப் போற்றியது. அவர்கள் சீரோடும் சிறப்போடும் வாழ்ந்தனர் என்பதைச் சிலம்பு முதலான இலக்கியங்கள் எடுத்துக் காட்டுகின்றன. வணிகர்கள் பழந் தமிழகத்தில் அரசர்களோடு ஒருங்கு வைத்து மதிக்கப்பட்டனராம்.

''பெருநிலம் முழுதாளும் பெருமகன் தலைவைத்த
ஒருதனிக் குடிகளோடு உயர்ந்தோங்கு செல்வத்தான்,
வருநிதி பிறர்க்குஆர்த்தும் மாசாத்துவான் என்பான்,
இருநிதிக் கிழவன்..............''

(சிலம்பு 1 : 31—3)

என ஒருவணிகரை ஏற்றுகிறது சிலம்பு. பழந்தமிழகத்தில் பொருளீட்டும் நோக்கத்தை மேற்கொண்டு வணிகம் செய்யக் காதல் தலைவர்கள் அயல்நாடுகள் சென்றமையை எட்டுத்தொகையும் பத்துப்பாட்டும் விரித்துரைக்கின்றன. இத்தலைவர்கள் எல்லாரும் போற்றுதலுக்கு உரியவர்களே.

பலவேறு தொழில்கள் நாலாம் வருணத்தார்க்கு உரிய கடமையும் பணியும் என இந்து தருமசாஸ்திரங்கள் வகுத்திருக்-கின்றன. இவர்கள் கீழ்ச்சாதியினரும் தீண்டாதாரும் எனப் பல்வேறு திறத்தினர். இவர்களும் இவர்கள்தொழில்களும் வடபுல 'அறிஞர்களால்' ஒதுக்கப்பட்டிருக்கலாம். ஆனால் தமிழகத்தின் நிலை இது எனச் சொல்ல முடியாது. சங்ககாலத்தை ஒட்டித் தமிழகத்தில் நால்வருணம் செயற்கையாகச் சுமத்தப்பட்டிருக்கலாம். வடபுலத்தில் சமண பவுத்த சமயங்கள் வருண தருமங்களை எதிர்த்துப் போராடின. தென்புலத்தில் குறளும் அதனை எதிர்த்துக் குரல் கொடுத்திருக்கிறது:

*பிறப்புஒக்கும் எல்லா உயிர்க்கும்; சிறப்புஒவ்வா*
*செய்தொழில் வேற்றுமை யான்.* (குறள், 972)

தமிழகத்தைப் பொறுத்த வரையில் வணிகமும் தொழிலும் போற்றப் பட்டன என்பது தெளிவு. ஆகவே பொருளியல் ஒருதனித்துறையாக

வளராமைக்குத் தமிழகத்தில் வேறு காரணங்கள் இருந்திருக்க வேண்டும். வள்ளுவரும் வேறு காரணங்கள் கருதியிருக்க வேண்டும். அறமும் அரசியலுமே வள்ளுவர் உள்ளத்தை மிகவும் ஆட்கொண்ட பொருள்களாகத் தோன்றுகின்றன. மற்ற உலகச்சிந்தனையாளர்கள் நிலையும் இதுவே. இந்நிலையும் பொருளியல் வளர்ச்சி குன்றியமைக்கு ஒருகாரணம் என அறிஞர்கள் கருதுகின்றனர்[1].

## 2. 2. பொருளே பொருள்

பிளேட்டோவும் அரிஸ்டாட்டிலும் பெரிதும் அறமும் பொருளுமே சிந்தனை செய்தனர்; வாழ்க்கையை முழுமையாக ஆராய

---

1. 'The subordination of economic activity to other interests is responsible in part for the pausity of systamatically developed economic doctrines in early civilizations. To be sure, most of the great writers of the past at times dwelt upon economic questions, and many of them were far in advance of their age in the understanding of certain economic principles. But such space as they gave to economics in their writings tended to subordinate it to discussions of the state, of ethics or of justice. Further the ab ence of economic literature in the past may be due in part to the fact that production and exchange were carried on by the less respected members of the community. In the highly stratified societies of ancient Greece and Rome or the middle ages only those of inferior status engaged directly in manufacture and trade, and most writers accordingly considered the affairs of such people beneath their dignity. To write about them would have been unwarrented effort. And then again knowledge of economic matters was s ant Aside from those facts of common observation, little was known of the basic characteristics of production, exchange and consumption. It would have been impossible in the absence of such knowledge to treat economics systematically. Thus an intensive investigation into the fundamentals awaited the opening of the commercial era of the later middle ages and the appearance of the great mercantile stages upon the worldscene in the 15th century'. p 2, 3, BTGE.

விழைந்தனர்; ஒழுக்கத்தையும் தத்துவத்தையும் உயர்த்திப் போற்றினர். மக்களின் பொருள்வாழ்வு அம் மக்கள்வாழ்வின் ஒரு கூறே ஆகவே பொருளியற்சிந்தனை கிரேக்கச் சிந்தனையாளர்கள் ஆராய்ச்சியில் ஒருசிறிதே இடம் பெற்றது. தாமஸ் அக்கினாஸ் ஒருசமயச் சிந்தனையாளர்; அறமும் சமயமுமே அவர் அக்கறை கொண்ட பொருள்கள். பொருள்வாழ்வு மக்களிடம் இம்மையில் ஒருசிறிதே இடம் பெறத்தக்கது என அவர் கருதினார்; அதற்கு ஏற்பவே அவர் தம் சிந்தனையில் அதனுக்கு இடமும் தந்தார்

வள்ளுவரும் இத்தகைய சிந்தனையாளரே. தமிழ்மரபு, வாழ்க்கையை மூன்று கூறுகளாகப் பிரிக்கிறது. அவை **அறம் பொருள் இன்பம்** என்பவை. இவையே மக்களுக்கு உறுதிப்பொருள்கள் எனவும் அடைய வேண்டியவை எனவும் நூல்கள் வற்புறுத்துகின்றன. வள்ளுவர் இவற்றையே முப்பால் என வகுத்தார். **அறத்துப்பால்** மக்களின் அகவாழ்வின் ஒழுகலாறுகளையும் தனிமனிதர் என்ற முறையில் வேண்டிய ஒழுகலாறுகளையும் அறம் என வகுத்து வழங்குகிறது. **பொருட்பால்** மக்களின் அரசியல் சமூக வாழ்வினை விளக்குகிறது. **இன்பத்துப்பால்** மக்களின் காதலின்பத்தை இலக்கியமாக்கித் தருகிறது. குறள்கள் தொகை 1330. இவற்றுள் அறம் 380; பொருள் 700; இன்பம் 250. பொருட்பால் எழுநூறு குறள்கள் கொண்டிருத்தல் குறிப்பிடத் தக்கது. திருக்குறளில் இது பாதிக்கு மேல் ஆகிறது. இந்நிலை வள்ளுவரது பொருளைப்போற்றிய உள்ளத்தைக் காட்டுகிறது. இங்குப் பொருட்பால் என்பதிலுள்ள **பொருள், சமூகவாழ்க்கை** என்ற பொருளுடையது. தொல்காப்பியம் அக வாழ்வு புறவாழ்வு ஆகிய இரண்டையும் பேசும் அதிகாரத்தைப் பொருளதிகாரம் எனக்குறித்ததும் இக்காரணம் பற்றியே. [பொருள் என்பது செல்வத்தைக்குறித்தல் வேறு ஒரு பொருள்:

அதனால்
அறனும் பொருளும் இன்பமும் மூன்று
ஆற்றும் பெருமநின் செல்வம்.

(புறம் 28 ; 15-16)

என்ற அடிகள் பொருள்வேறு செல்வம் வேறு என்பதைக் காட்டுகின்றன.] குறள்கூறும் பொருள், அரசியலையும் தன்னுள் கொண்டது.

பிளேட்டோ **குடியரசு** எழுதியதைப் போன்றும் அரிஸ்டாட்டில் **அரசியல்** எழுதியதைப் போன்றும் வள்ளுவர் **பொருட்பால்** எழுதினர் எனலாம். இந்தப் பொருட்பாலே அரசுமுறையும் குடி வாழ்வும் பொருள்வாழ்வும் பேசுகின்றது. வள்ளுவர்க்கு இவை எல்லாம் பல அல்ல; ஒன்று போலும். அவர் கண்ட வாழ்வில் பொருளும் செல்வமும் பிரிக்கமுடியாது பிணைந்து செல்கின்றன. அரசின் பொருள்வாழ்வு பற்றி வள்ளுவர் அங்கும் இங்கும் சிலவே பேசுகிறார். அரசைவிட அரசின் பொருள் அவருக்குப் பெரியதாகத் தோன்றவில்லை. வள்ளுவர்க்கு மட்டுமல்ல; மற்ற உலக அறிஞர்க்கும் அரசும் செல்வமும் வேறு வேறல்ல :

> பொருளியலும் அரசியலும் வெவ்வேறாக இருந்தது பதினெட்டாம் நூற்றாண்டுக்கு முன்பு. அரசியலைப் பொருளியலோடு வைத்துப் பொருளியலுக்கு அரசியல் பொருளாதாரம் (Political Economy) என்ற புதிய அமைப்பினை ஏற்படுத்திய பெருமை இயற்கைவாதிகளின் தலைவரான டாக்டர் குவிஸ்னேவைச் சாரும். ஆனால் அவர்க்கு முன்பே வள்ளுவர் இந்தச் சாதனையைச் செய்துள்ளார். (டாக்டர் ஆ. இராமசாமி, 'குறள் கூறும் பொருளியல்.')

வள்ளுவர், பொருட்பாலின் 70 அதிகாரங்களுள் இரண்டதிகாரங்களில் பொருள் பற்றிப் பேசுகிறார். ஒன்று **பொருள் செயல் வகை** (அதிகாரம் 76); மற்றொன்று **நன்றியில் செல்வம்** (அதிகாரம் 101). ஆனாலும் இவ்வதிகாரங்களில் பொருள் ஈட்டுதலையோ பொருளியலையோ அவர் பேசவில்லை; பொருளின் பயன் நன்மை தீமைகளையே அங்குப் பேசுகிறார். இக்கருத்துக்கள் எல்லாம், வள்ளுவர், பொருளாகிய சமூகம் பற்றி அக்கறைகொண்ட சிந்தனையாளரே என்பதையும், அதன் பொருட்டே தம் நூலில் செம்பாதி செலவிட்டார் என்பதையும், பொருளாக்கம் பற்றிக் குறிப்பாக எதுவும் பேசவில்லை என்பதையும் சுட்டிக்காட்டுகின்றன. இவ்வகையில் வள்ளுவர் உலகின் பண்டைய சிந்தனையாளர்களை ஒத்தே செல்கின்றார் என்பது தெளிவுபடுகிறது.

## 2. 3. அறமே சிறந்தது

வள்ளுவர்க்கு வேறு நோக்கம் உண்டு. உள்ள சமூகத்தை உள்ளவாறு தீட்டிக்காட்டுவது அவர் குறிக்கோள் அல்ல. அவர் அறத்தின் வழிப்படும் சமூகம் ஒன்றைக் காண விழைகிறார்.

வள்ளுவரின் சமூகச் சிந்தனையில் பரந்த இடம் பெற்றது அரசியலே. ஆனாலும் சிறந்த இடம் பெற்றது அறமே. வள்ளுவர்க்கு அறமே தலையாய குறிக்கோள். அறம் பொருள் இன்பங்களில் இன்பத்தை முன் வைத்துப் பேசும் தொல்காப்பிய மரபு ஒன்று உண்டு:

இன்பமும் பொருளும் அறனும் என்றாங்கு
அன்போடு புணர்ந்த ஐந்திணை

(தொல். பொருள். 92)

அறத்தை முன்வைத்துப் பேசும் மரபும் உண்டு (புறம் 28). ஆனால் வள்ளுவர் அறத்தைத் தேர்ந்தே முன் வைத்து முப்பால் இயற்றியுள்ளார். இது, அவர் அறத்தைப் போற்றும் உள்ளப் பாங்கையே எடுத்துக்காட்டுகிறது.

வள்ளுவர்க்கு வெறுஞ் சமூகத்தைப்பற்றி மட்டுமே கூறும் நோக்கம் இல்லை. அவ்வாறானால் படை குடி கூழ் அமைச்சு நட்பு அரண் ஆறும் உடைய அரசினை விளக்கியதோடு -- பொருட்பாலோடு -- நின்றிருக்கலாம். கவுடலியரும் சுக்கிரரும் அவ்வாறுதான் கூறிச் சென்றனர். ஆனால் வள்ளுவர் இவற்றோடு அறத்தையும் இணைத்தார். அவர் நோக்கம், பொருள் அறத்தின் வழிப்பட்டதாக இருக்க வேண்டும் என்பதாகும். பிளேட்டோ தன் 'குடியரசில்' முறைமை (Justice) என்பது யாது என விரிவாக ஆராய்கிறார். அரிஸ்டாட்டில் 'அரசியல்' எழுதி 'ஒழுக்கநூலும்' (Ethics) தனியே யாத்தார். இவ்விரு சமூகச் சிந்தனையாளர்களுக்கும், அறமும் இன்றியமையாதது என்பதையே இந்நிலை காட்டுகிறது. இச் சிந்தனையாளர்க்கும் வள்ளுவர்க்கும் ஒருமுக்கிய வேற்றுமையுண்டு. பிளேட்டோ குடியரசின் ஆராய்ச்சியில் முறைபற்றி இடையிடையே ஆராய்கிறார்; அவ்வளவுதான் அரிஸ்டாட்டில் அரசியல் போன்று ஒழுக்கமும் ஒரு தனித்துறை எனக்கருதி இயற்றினார். ஆனால் வள்ளுவர்க்கு அறமும் அரசியலும் இரண்டல்ல; ஒன்றே. இவை இரண்டும் ஒரு நூலின் பகுதிகளே என யாத்தார். இதனால் இரண்டும் ஒன்றை ஒன்று பொருட்பொருத்தமுறத் தழுவிச் செல்லுதல் வேண்டும்; முன்னதைப்பின்னது பற்றிச் செல்ல வேண்டும் என்பது பெறப் படுகிறது. பிளேட்டோவிடமும் அரிஸ்டாட்டிலிடமும் கவுடலியரிடமும் சுக்கிரரிடமும் காணாத சிறப்பு இது. இதனை வள்ளுவரிடம்தான் காணமுடிகிறது. இதன் விளைவு கவனத்திற்கு உரியது. பொருட்பாலில் கௌடலியம் போன்று குறிப்பிட்டுத்

தரப்படும் செய்திகள் இல்லை; ஆனால் பொதுவான நெறிகளையே பெரிதும் காணுகிறோம். இந்நிலைக்குக் காரணம் அதுவே.

வள்ளுவர்க்கு அறமே அனைத்திலும் சிறந்தது என்பது மேலே சுட்டப்பட்டது. இதனாலேயே **அறன் வலியுறுத்தல்** என ஓர் அதிகாரமே(4) அவர் இயற்றியுள்ளார். அதிலே தன் கருத்தை வெளியிடுகிறார் அவர்.

சிறப்பு ஈனும்; செல்வமும் ஈனும்; அறத்தினூஉங்கு
ஆக்கம் எவனோ உயிர்க்கு. (குறள் 31)

அறத்தினூஉங்கு ஆக்கமும் இல்லை; அதனை
மறத்தலின் ஊங்கு இல்லை கேடு. (குறள் 32)

மனத்துக்கண் மாசிலன் ஆதல் அனைத்து அறன்;
ஆகுல நீர பிற. (குறள் 34)

அறத்தான் வருவதே இன்பம்;மற்று எல்லாம்
புறத்த; புகழும் இல. (குறள் 39)

செயற்பால தோரும் அறனே ஒருவற்கு (குறள் 40)

இவற்றிற்குமேல் பொருளின் பெருமையாக என்ன சொல்ல முடியும்? இக்கருத்துக்கள் முப்பால் முழுவதும் எதிரொலித்துக் கொண்டிருக்கின்றன.

ஓரிடத்தில் அருளையும் பொருளையும் ஒப்பிட்டு அருளை ஏற்றிப்போற்றுகிறார் வள்ளுவர்:

அருட்செல்வம் செல்வத்துட் செல்வம்; பொருட்செல்வம்
பூரியார் கண்ணும் உள. (குறள் 241)

அறத்தின் அடிப்படை அருள்; அதுவே துணை என்கிறார் அவர்:

நல்லாற்றான் நாடி அருள்ஆள்க; பல்லாற்றான்
தேரினும் அஃதே துணை. (குறள் 242)

வள்ளுவர் பொருட்பால் வரைந்துகொண்டு செல்லுகின்றபோது அறத்தையும் ஒழுக்கத்தையும் ஆங்காங்கே வற்புறுத்திக் கொண்டே செல்லுகிறார். சில கருத்துக்களை உடன்பாட்டிலும் எதிர்மறையிலும் அவர் கூறிக்கொண்டு செல்வதன் நோக்கம் இதுவே; நன்மையைக் கூறியதோடு அமையாது தீமையையும் சுட்டிச் செல்வார்; செய்க எனக் கூறுதலோடு அமையாது செய்யற்க எனத் தடுத்தும் உரைப்பார். பெருமை, சிறுமை, பெரியார்,

சிற்றினம், தூய்மை, செம்மை, கொடுமை, தீமை, அறிவு, பேதைமை, குடிமை, மானம், சான்ருண்மை, பண்பு, நன்றி, நாண், அச்சம், கயமை—இத்தகைய சொற்கள் அறிவியலுக்கு உரியவை அல்ல; அறவியலுக்கே உரியவை என்பர். இத்தகைய சொற்கள் வள்ளுவர் வகுத்த பொருட்பாலில் பல்கப் பயன்படுத்தப்பட்டுள்ளன. இவை பொருளுக்கு அறத்தை வழங்கிச் செல்லுதலையே செய்கின்றன. கீழ்வரும் அதிகாரங்கள் இவ்வுண்மைகளை வலியுறுத்தும்; இவை எல்லாம் பொருட்பாலில் உள்ளவை என்பதை நினைவுகூர வேண்டும்

கல்வி : கல்லாமை
பெரியாரைத் துணைக்கோடல் : சிற்றினஞ் சேராமை
வினைத்தூய்மை
செங்கோன்மை : கொடுங்கோன்மை
நட்பு : தீ நட்பு : கூடா நட்பு
அறிவுடைமை : புல்லறிவாண்மை : பேதைமை
பெரியாரைப் பிழையாமை
பெண்வழிச்சேறல் : வரைவில் மகளிர்
கள்ளுண்ணாமை
சூது
குடிமை
மானம்
சான்ருண்மை
பண்புடைமை
பொருள் செயல் வகை : நன்றி இல் செல்வம்
நாணுடைமை
இரவு : இரவச்சம்
கயமை

இவ்வதிகாரங்கள் அறமுரைக்கின்றனவோ பொருளுரைக்கின்றனவோ என்ற ஐயத்தை எழுப்பாமல் போகமாட்டா. வள்ளுவர் சிந்தனை, பொருளைவிட அறத்தைச் சிறப்பிக்கும் இத்திறத்திலும் உலகச் சிந்தனையுடன் இணைந்தே செல்கிறது என்பது இக்கருத்துக்களால் விளக்க முறுகிறது.

## 2. 4. அறமும் பொருளும்

வள்ளுவர் நோக்கம்தான் சரியா? அறத்துக்கும் பொருளுக்கும் உறவுதான் என்ன? இது அன்றும் இன்றும் விடை கூறித் தீராத வினாதான்! இன்று அறவியலும் பொருளியலும் தனித் தனியே இயங்குகின்றன. 'அறமும் பொருளும் உடன் செல்லவேண்டும்'

என்பாரும், 'அவை வேறு வேறே' என்பாரும் 'அவை முரண்பட்டு மோதுகின்றன' என்பாரும் ஆகப் பலதிறத்தார் இன்று உண்டு. குறிப்பாக **முதலாண்மை** (Capitalism) ஈன்றெடுத்த பொருளியல் பெரும்பழிக்கு ஆளாகியது. அது வரையறையற்றுப் பொருளீட்டலை-யும் அன்பும் அருளுமற்றுச் சுரண்டலையும் ஆதரித்தது; மக்கள் பொருள் வாழ்வில் மேடும் மடுவும் ஏற்படக் காரணமாகியது; அரசினையும் கடமையாற்ற விடாது ஒதுங்கியிருக்கக் கற்பித்தது. இதனால் அருளுள்ளம் கொண்ட ஆன்றோர் மருளுள்ளம் கொண்டனர். **ரஸ்கின்** (John Ruskin) என்ற சான்றோர் இன்றைய பொருளியலை **இழி பிறப்புக் கருமையறிவியல்** (bastard science of darkness) எனச் சாடினார். அவர் வசைமாலை அதனோடு நிற்கவில்லை. '**செல்வம் அல்லாது கொல்வம் என்னும் அச்சம் தரும் அறிவியல்**' (dismal science of illth rather than wealth) என அதன்மீது பாய்ந்தார். **தாமஸ் கார்லைல்** (Thomas Carlyle) என்ற அறிஞரும் அது கண்டு கலங்கினார். அவரே பொருளியலுக்கு (dismal science) என 'நாமகரணம்' செய்தனர் என்பர். மக்கள்தொகை, பஞ்சம், பட்டினி, உணவு முதலியவை பொருளியலில் இடம் பெற்றவாற்றை ஆராய்ந்து **மால்துஸ்** (Thomas Malthus) என்ற அறிஞர் எழுதிய கட்டுரையைக் கண்ட பின்னரே கார்லைல் இவ்வாறு கலங்கினராம். சுருங்கச் சொன்னால் இச்சான்றோர்எல்லாம் வேண்டுவது

அருளொடும் அன்பொடும் வாராப் பொருளாக்கம்
புல்லார் புரள விடல் (குறள் 755)

என்பதே. அறமும் பொருளும் ஒன்றை ஒன்று அணைத்துச் செல்ல வேண்டும் என்கின்றனர் இவர்கள். அறம், மக்கள் நல்வாழ்வு வாழ வேண்டும் என்பதை நோக்கமாகக் கொண்டது. பொருளியலும் மக்களின் நல்வாழ்வையே நோக்கமாகக் கொண்டதானால் இரண்டிற்கும் இடையே மோதல் ஏற்படுவதற்கு வழியில்லை என்றே தோன்றுகிறது. ஒன்றுக்கு ஒன்று துணையாகலாம். பொருளியல் மக்களின் தேவைகளை எவ்வாறு நிறைவேற்றுவது என்பதை விளக்குகிறது. அறம், மக்களின் தேவைகள் எவை? அவை எத்தகையவையாக இருக்கலாம்? என வகுத்துத் தருகிறது. இரண்டும் ஒன்றின் - தேவைகளின் - இருவேறு திறத்தைப் பேசுகின்றன. அவற்றிடையே அடிப்படையில் முரண்பாடு இருக்கத் தேவையில்லை. பொருளியல் தரும் ஒருமுடிவு பயனுடையதோ பயனற்றதோ? நன்மையோ தீமையோ? என அறுதியிடுவதற்கு அறமே துணை நிற்கிறது. துணை என்பதில்லை;

அவ்வாறு அறுதியிடுதலே அறத்திற்கு உரிய பணி. பொருளியல் தரும் ஒருமுடிவு அறமுறைப்படியும் சரியா இல்லையா எனவும் காண வேண்டும். ஆகவே ஒன்று பற்றி முடிவு செய்ய அறம் பொருள் இரண்டும் தேவைப்படுகின்றன என்பது தெரிகிறது. பொருள்வாழ்வில் பயன் தரும் ஒன்று நாளடைவில் நல்லதாக இருத்தல் வேண்டும்; அறமுறைப்படி சரியான ஒன்று இறுதியாகப் பொருள்வாழ்வில் நன்மை தரல் வேண்டும் என எதிர்பார்க்கலாம் என்கிறார் **செலிக்மன்** (Seligman) என்னும் அறிஞர்.[2] பொருளியல் ஓர் அறிவியல். அது மக்கள் பொருள்வாழ்வின் இயல்பினை உள்ளவாறு விளக்கி யுரைக்கிறது. ஆனால் அறத்தின் பணி, மக்கள் வாழ்வு அனைத்தும் தழுவியது. அதன் பணி விரிந்தது; பரந்தது; ஆகவே அதற்கு அடங்கியதே பொருள். இப்பொருள் அறம் உரைப்பதில்லை; அது போலவே அறமும் பொருளுரைப்பதில்லை; ஆனால் அது பொருளை நெறிப்படுத்துகிறது. இரண்டின் இயல்பும் இத்தகையது. ரஸ்கின், தால்ஸ்தாய், காந்தியடிகள் போன்ற இன்றைய சான்றோர் இதனையே விரும்புகின்றனர். அன்றைய சான்றோராம் வள்ளுவர் அரிஸ்டாட்டில் ஆகியோரின் விருப்பமும் இதுவே. ஆகவேதான் 'அரசியல்' எழுதிய அரிஸ்டாட்டில் அறமும் எழுதினார். வள்ளுவரும் அறத்தை முன்னிட்டுப் பின் பொருளை வைத்து முப்பால் எழுதினார். காந்தியடிகள் பொருள்வாழ்வில் பேராசையும் பெருஞ்செல்வமும் வேண்டாம் என்றார்; அன்பும் ஈகையும் தேவை என்றார்.[3]

## 2. 5. பொருளைப் போற்றுதல்

பொருளை ஈட்டலும் இயற்றலும் வகுத்தலும் பற்றி யுரைப்பது பொருளியல்; பணம் காசு ஆகியவை இத்தகையன எனவும் பொருளியல் விளக்குகிறது. ஆனால் செல்வம்

---

2. 'What is economically advantageous must in the long run be right, and what is correct in ethics must in the end also be profitable to the business world'— Seligman.

3. '......in his economic philosophy Gandhiji stressed on the replacement of greed and accumulation by generosity and love' — A. V. Krishnamurthy in 'Gandhian Economics'

தரும் பயனது இயல்பு, மக்களுக்கும் செல்வத்திற்கும் இடையே அமைந்த உறவு ஆகியவைபற்றி அறநூல்களும் தத்துவநூல்களும் சமயநூல்களுமே பெரிதும் பேசுகின்றன. மக்கள் நடத்தும் பொருள் வாழ்விற்கு உரிய இவை அனைத்துமே ஆராய்தலுக்கு உரியன. வள்ளுவர் முன்னவை பற்றி மிகுதியாகக் கூறவில்லை. அவர் அக்கரையும் ஆர்வமும் பின்னவை பற்றியே எனத் தெரிகிறது. இனி அவை பற்றிச் சிறிது காணலாம்.

செல்வம் என்பது ஒருபொருள். இறைவன், அறம், பொருள், இன்பம், இல்வாழ்க்கை, துறவு, அன்பு, ஈகை, இம்மை, மறுமை, ஒழுக்கம் ஆகியவையும் பொருள்கள். இவற்றுள்ளே சிலவற்றை உறுதிப் பொருள்கள் எனவும் அறிஞர் வழங்குவர். வள்ளுவர் செல்வம் முதலாகிய இவ்வெல்லாப் பொருள்கள் பற்றியும் தம் நூலுள் பேசுகிறார். ஆனால் செல்வத்தைவிட மற்ற பொருள்களையே அவர் உயர்வாகப் போற்றுகிறார்.

இருந்தும் செல்வத்தின் பயனை வள்ளுவர் உணராமல் இல்லை. பொருளை அவர் போற்றுகிறார். மக்களிடத்துப் பொருளுடைமையை – தனியுடைமையை – அவர் உடன்படுகிறார். ஒருவர் உடைமையை மற்றவர் மதிக்க வேண்டும் எனவும் அவர் வற்புறுத்துகிறார். தனிமைப் பொருளுடைமை பண்டும் இன்றும் உலகில் நிலவி நிலைபெற்று வந்துள்ளது. இன்றைய முதலாண்மைப் பொருள்வாழ்வுக்கே அடிப்படை தனியுடைமைதான் (private ownership of property). இதனை வற்புறுத்திச் சட்டமாக்கி உலகிற்கு வழங்கிய பெருமை ரோமப் பேரரசுக்கு உண்டு என்பது முன்னரே சுட்டப்பட்டது. வள்ளுவர் இதனை வற்புறுத்திப் பேசுவது இன்றைய பொருளியலுக்கு ஒருமுன்னுரை வழங்குவது போன்றே உள்ளது.

> அஃகாமை செல்வத்திற்கு யாதெனின் வெஃகாமை
> வேண்டும் **பிறன்கைப் பொருள்.** (குறள் 178)

> உள்ளத்தால் உள்ளலும் தீதே **பிறன்பொருளைக்**
> கள்ளத்தால் கள்வேம் எனல். (குறள் 282)

இவ்விரண்டு குறள்களும் தனியுடைமையைத் தெளிவாகச் சுட்டிக் காட்டுகின்றன; அத்தனியுடைமையைப் பிறர் மதிக்க வேண்டும் எனவும் இவை வற்புறுத்துகின்றன. இவ்விரண்டு குறள்களும்

முறையே **வெஃகாமை** (அதி. 18) **கள்ளாமை** (அதி. 29) ஆகிய அதிகாரங்களில் இடம் பெற்றவை. இவ்விரண்டதிகாரத்தின் இருபது குறள்களும் தனியுடைமையை வற்புறுத்திப் பிறர் பொருளை விரும்புதலையும் களவாடுதலையும் கண்டிக்கின்றன.

'தனியுடைமையால் தீங்குகள் விளைகின்றன; இன்றைய நோய்களுக்கு எல்லாம் அதுவே வித்து' என இன்று சிந்தனையாளர்கள் அதனைச் சாடுகின்றனர். வள்ளுவர் முப்பால் இத்தீங்குகளுக்கு இடம் தரவில்லை. இதனைப் பின்னர்க் காணலாம்.

வள்ளுவர் பொருளைப் போற்றும் கருத்துக்கள் இன்றைய பொருளியலுலகம் போற்றத் தக்கன:

பொருளல் லவரைப் பொருளாகச் செய்யும்
பொருள்அல்லது இல்லை பொருள். (குறள் 751)

இல்லாரை எல்லாரும் எள்ளுவர்; செல்வரை
எல்லாரும் செய்வர் சிறப்பு. (குறள் 752)

சமூகத்தில் செல்வத்துக்குள்ள செல்வாக்கை இங்கு உணர்ந்து எழுதுகிறார் வள்ளுவர். இதனால்தான்

பொருள் என்னும் பொய்யா விளக்கம் (குறள் 753)

எனவும் ஏத்துகிறார். இவ்வுலக வாழ்விற்குப் பொருள் இன்றியமையாதது என்பதை,

பொருள் இல்லார்க்கு இவ்வுலகம் இல்...... (குறள் 247)

என்பதால் அவர் புலப்படுத்துகிறார். ஆகவே அவர் கட்டளை,

செய்க பொருளை.... (குறள் 759)

என்பதாகும். செய்த பொருளைப் போற்ற வேண்டும் என்பது அவரது அடுத்த ஆணை:

பொருளாட்சி போற்றாதார்க்கு இல்லை (குறள் 252)

வள்ளுவர் பொருளைக் கருத்தாகக் கொண்டு அமைத்த அதிகாரம் ஒன்று உண்டு. அது **பொருள் செயல் வகை** (அதி. 76) என்பது. இவ்வதிகாரத்தில் பொருளின் சிறப்பையும் அதன் பயனையும் வற்புறுத்திப் பேசுகிறார். (மேலே இரண்டு குறள்கள் **752, 753** சுட்டிக்காட்டப்பட்டன.) மக்களிடத்து இத்தகைய

கருத்துக்கள் பொருளின்மீது அக்கறையும் ஆர்வமும் கொள்ளத் தூண்டும். இவ்வக்கரையும் ஆர்வமுமே இன்றைய பொருள் வாழ்வுக்கு அடிப்படை.

## 2. 6. பொருளின் பயன்

இத்தகைய பொருளின் பயன்பற்றி வள்ளுவர் பேசுகிறார். பொருளின் பயன் ஊணும் உறையுளும் உடுப்பும் பெறுவதுதான் என்பது எல்லாரும் அறிந்ததே ஆனால் வள்ளுவர் எளிதாக இவற்றைக் குறிப்பிட்டுவிடவில்லை. மக்களுக்குத் தேவையான உறுதிப் பொருளைப் பெறப் பொருள் தேவைப்படுகிறது என்கிறார் அவர். சிறுமீனை விட்டுப் பெருமீனைப் பிடிப்பது போன்ற விரகு இது 'மாந்தர்க்கு உறுதி என உயர்ந்தோரான் எடுக்கப்பட்ட பொருள்கள்' அறம் பொருள் இன்பம் என்பவை. பொருளால் அறமும் இன்பமும் எய்தலாம் என்கிறார் வள்ளுவர்.

*அறன்ஈனும், இன்பமும் ஈனும், திறன் அறிந்து*
*தீதுஇன்றி வந்த பொருள்.* (குறள் 754)

*ஒண்பொருள் காழ்ப்ப இயற்றியார்க்கு எண்பொருள்*
*ஏனை இரண்டும் ஒருங்கு.* (குறள் 760)

இது மட்டுமல்ல; மேலும் அருளையும் அன்பையும் பேணும் செவிலித்தாய் செல்வம் என்கிறார் அவர்.

*அருள்என்னும் அன்புஈன் குழவி பொருள்என்னும்*
*செல்வச் செவிலியால் உண்டு.* (குறள் 757)

வள்ளுவர்க்குப் பொருள் ஒருகருவி. அதைக்கொண்டு இன்றைய பொருளியலறிஞர் கருதுவது போன்று வணிகம் செய்யவும் தொழில் நடத்தவும் வட்டிக்கு விடவும் கூறவில்லை அவர்; அதைக் கொண்டு என்றும் நிலைபேறுடைய உயர்விலும் உயர்வான மனிதப் பண்புகளை வாங்க வேண்டும் என்கிறார்.

இவ்வாறு வள்ளுவர் பொருளையும் அதன் பயனையும் போற்றிச் சொல்வதெல்லாம் ஓரளவுதான்; அதுவே முடிந்த முடிவு அல்ல; அதுவே வாழ்க்கை முழுவதற்கும் அல்ல. அவர் கண்ட உறுதிப் பொருள்களை வாழ்வில் மேற்கொள்ளக் கொள்ளச் செல்வத்தின் சிறப்பும் பயனும் படிப்படியே தேய்ந்து போகின்றன. இதனை விளக்க முற அறிய வள்ளுவர் மக்கள் வாழ்க்கை பற்றிப் பொதுவாகக் கூறிய

பிற கருத்துக்களைக் காண வேண்டும். மனித வாழ்க்கையின் நோக்கங்கள், தேவைகள், இயல்புகள் ஆகியவையே மனிதரின் பொருள் வாழ்வினை வகுத்து அமைக்கின்றன எனலாம். இவை எத்தகையவை?

## 2. 7. மக்கள் தேவைகள்

உணவு உறையுள் உடுப்பு முதலாகிய பலப்பல தேவைகளை நிறைவேற்றிக் கொள்ளுதல் பொருட்டு மக்கள் மேற்கொள்ளும் முயற்சிகளையும் அம்முயற்சிகளின் தகுதி திறங்களையும் விளக்குவது பொருளியல் என்பது முன்னர்ச் சுட்டிக்காட்டப்பட்டது. இந்தத் தேவைகள் மக்களிடம் இயல்பாகவே அமைந்துள்ளன எனப் பொருளியல் கருதுகிறது. மேலும் இந்தத் தேவைகள் வரையறையுள் அடங்காத மிகப்பல என்றும் அவை காலம் செல்லச் செல்ல, நாகரிகம் வளர வளரப் பல்கிப் பெருகுகின்றன என்றும் அது கொள்ளுகிறது. இவை பொய்யும் அல்ல; மிகையும் அல்ல. திருவள்ளுவரின் தேவைகள் மிக மிகச் சிலவாகவே இருந்திருக்கும். ஆனால் இன்று நம் தேவைகள் பலப்பல.[4]

இத்தேவைகளை மக்கள் நிறைவேற்றிக் கொள்ளுகிறார்கள். ஆனால் தேவைகள் ஒருமுறையோ, சிலபோதோ நிறைவேற்றப்பட்டவுடன் தீர்கின்றவை அல்ல; அவை முடிவில்லாது நீண்டுகொண்டே

4. 'From Socrates and Aristotle to J. M. Keynes, and prof. J. K. Galbraith is a span of 2,250 years. It takes us from a slave society, where all but the few were poor, to an affluent democracy. Great changes of taste and fashion have occurred. Socrates rose in the morning, put on his cloak and went out into the public square to engage in conversation and discussion. His needs were few, and he was unencumbered by worldly possessions. Today we are obsessed with material wants, and struggle to beach with a car loaded with deck chairs, aqua-lungs, and assorted paraphernalia, towing a yatch or a power boat behind us' -P. 367, EMS.

செல்கின்றன; ஒன்று தீர்ந்தவுடன் மற்றொன்றோ மற்றும் பலவுமோ முளைத்துக்கொண்டே இருக்கின்றன. ஆகவே மக்கள் விடாது முயலுகின்றனர்; உழைக்கின்றனர். தேவைகளும் தீர்த்தலும், தேவைகளும் தீர்த்தலுமாக மக்கள் வாழ்வே ஒருபோராட்டமாகி விடுகிறது. இத்தேவைகளால் மக்கள் சோர்வுபடுவதும் இல்லை; தளர்வதும் இல்லை; மாறாக அவற்றின்மீது காதல் கொண்டு அலைந்து கொண்டே இருக்கின்றனர். தேவை நிறைவேற்றம் மக்களின் அவாவினைத்தான் கிளறி விட்டுக் கொண்டே செல்லுகின்றது. இதுவே இன்றைய பொருளியல் வாழ்க்கைக்கு அடிப்படையாக விளங்குகிறது. மக்களிடையே ஆசைகள் குறைந்து அதனால் தேவைகள் குறையுமானால் இன்றைய பொருளியல் சுருங்கி விடும். இத்தகைப பொருள்வாழ்வால் போட்டி, பொறாமை, சுரண்டல், ஒருபுறம் வளம், ஒருபுறம் வறுமை ஆகிய கொடுமைகள் இன்றைய உலகில் ஓங்கி வளர்ந்து தலைவிரித்து ஆடுகின்றன. முடிவு, உறு பசியும் ஓவாப் பிணியும் செறுபகையும் சேர்ந்தியலும் நாடாக உலகு காட்சியளிக்கிறது.

மக்களுடைய தேவைகள் எவை? அவற்றுள்ளும் உண்மையான போற்றத்தக்க அடிப்படைத் தேவைகள் எவை? அவற்றை எவ்வாறு காண்பது? அவற்றை எவ்வாறு மதிப்பிடுவது? இத்தேவைகளின் இயல்புகள் யாவை? மக்களுக்கு எந்த அளவு தேவைகள் வேண்டும்? அவற்றுள் உயர்ந்தவை எவை? ஒவ்வாதவை எவை? அவற்றைத் தீர்த்தலில் கொள்ள வேண்டிய கொள்கைகள் எவை? இவை பற்றியெல்லாம் முடிவுகாண மக்கள் கொள்ள வேண்டிய குறிக்கோள்கள் எவை? இத்தகைய வினாக்கள்பற்றிப் பொருளியல் பேசுவதில்லை. இவை, தனக்கு உரியன அல்ல எனவும் அது கருதுகிறது போலும். இத்தகைய வினாக்களுக்கு உரிய பொருளெல்லாம் அறநூல்களுக்கே உரியன. சமயச் சான்றோரும் தத்துவ அறிஞரும் இவைபற்றிப் பெரிதும் அக்கறை கொண்டு ஆராய்ந்தனர். பிளேட்டோ, அரிஸ்டாட்டில், ஏசுநாதர், நபிநாயகம், அக்கினாஸ் போன்றவர்களது நோக்கம் எல்லாம் இவற்றையே முக்கியமாகக் கொண்டது. அவர்களுக்கும் மக்கள் நடத்தும் பொருள்வாழ்வு பற்றியும் நிரம்பச் சிந்தனை உண்டு. ஆனால் அவர்கள் கண்ட பொருள்வாழ்வுக் கருத்துக்கள் எல்லாம் அற வாழ்வுக் கருத்துக்களுக்கு உட்பட்டு அடங்கித் தோன்றியவையே. பொருள்வாழ்வு அப்பழுக்கின்றித் தூய்மையோடும் அல்லலின்றி அன்போடும்

அமைய வேண்டும் என அச்சான்றோர் சிந்தனையைச் செலுத்தினர்.[5] இத்தகைய நோக்கத்தோடு மேற்கண்ட வினாக்களுக்கு உரிய பொருள்களையும் பொருளியல் ஆராய்ந்து செல்லுமானால் இன்று காணும் கொடுமைகள்-சுரண்டலும் வறுமையும்-இல்லாமற் போகலாம்; அல்லது குறைந்தாவது போகலாம்.

வள்ளுவர் தந்த முப்பாலின் முதன்மையான பணி இதுவே. வள்ளுவர் ஓர்அறமுரைக்கும் சான்றோர். அவர் பொருளும் உரைக்கின்றார். பொருள் உரைக்கின்ற போதும் அறம் கொண்டு அதனை நெறிப்படுத்துகிறார். அவர் கண்டுரைத்த அறங்கள் பொருள்வாழ்வைப் பெரிதும் பாதிப்பன. அவற்றின் நோக்கம் சுருங்கச் சொன்னால் உலகிற்கு உற்ற நோய் நீக்கி உறுமை முற்காக்கும் பெற்றியது

மக்களின் உண்மைத் தேவைகளையும் அவற்றை ஒட்டி அமைந்த பொருள் வாழ்வையும் விளக்கும் வகையில் வள்ளுவர் அடிப்படைக் கொள்கைகள் சிலவற்றைத் தந்துள்ளார். அவற்றை ஒரு சிறிது காணலாம்.

## 2. 8. இறைப்பற்று

வள்ளுவர் இறை உண்மையை உடன்படுகிறார் என்பது திருக்குறளின் முதல் அதிகாரமான கடவுள் வாழ்த்தால் வலியுறுகிறது. அவ்விறைவன் **அடிசேர்தலை** மக்கள் நோக்கமாக வள்ளுவர் வற்புறுத்துகிறார்:

*பிறவிப் பெருங்கடல் நீந்துவர்; நீந்தார்*
*இறைவன் அடிசேரா தார்.* (குறள் 10)

இவ்வுலகில் நடைபெறும் பிறப்பினை அறுத்து இறைவனை அடைதல் வேண்டும் என இக்குறள் வற்புறுத்துகிறது. இதன் பொருட்டு

---

5 'What do men really want in life? How do men in general arrive at evaluations of the objects surrounding them? What are the basic needs which men feel compelled to satisfy? What is the highest good for which men should strive? Plato, Aristotle, Xenophon, Augustine, and Thomas Aquinas were concerned with an investigation of economic matters only as they were important to—and shed light upon—such basic questions as these, or as economic activity needed to be brought into line with a general principle of life already established'—P. 2, BTGE.

இவ்வுலகப் பற்றினை விடல் வேண்டும் என்று மற்றொரு குறள் வழியுரைக்கிறது:

பற்றுக பற்றற்றான் பற்றினை; அப்பற்றைப்
பற்றுக பற்று விடற்கு. (குறள் 350)

இதனால் இவ்வுலக வாழ்வுக்கே உள்ள பெருமையும் சிறப்பும் குறைகின்றன. குறையவே, பொருள் வாழ்வுக்குரிய பெருமையும் சிறப்பும் குறையும் என்பது கூறாமலே புலப்படும். செல்வத்தின்மீது செலுத்தப்படும் ஆர்வம் இதனால் கட்டுப்படுத்தப்படும்.

## 2. 9. ஊழ் நம்பிக்கை

வள்ளுவர் **ஊழ்** என்னும் ஒரு பொருள் பற்றிப் பேசுகிறார். (அதிகாரம் 38). இந்தியச் சமயங்கள் நல்வினை, தீவினை எனப் பேசும் கர்மபலன்தான் இது என்று கருதுமாறு வள்ளுவர் ஒருவிளக்கமும் தரவில்லை. நல்வினை, தீவினை என்ற தொடர்களோ, வினை என்ற சொல்லோ ஊழ் என்னும் அதிகாரத்தில் இல்லை. அதற்கு மாறாக **உலகத்து இயற்கை** (குறள் 374), **பால்** (குறள் 376) ஆகிய சொற்கள் அங்குப் பயன்படுத்தப்பட்டுள்ளன. "படைப்பில் ஒரு முறையான ஆட்சி இருந்து வருகின்றது...... எல்லாம் ஒரு வகை ஒழுங்குக்கு உட்பட்டே நடந்து வருகின்றன....... இத்தகைய ஆட்சி முறையை 'ஊழ்' என்று சான்றோர் குறித்து வந்திருக்கின்றார்கள்."[6] வள்ளுவர் குறிப்பிடும் ஊழும் இத்தகையதே என அறிஞர் மு. வ. அவர்கள் விளக்குகிறார்கள். இவ்வியற்கை யமைப்பாம் ஊழ் **ஆகூழ்** அல்லது **ஆகலூழ்** எனவும் **போகூழ்** அல்லது **இழவூழ்** எனவும் இருதிறத்தது என்கிறார் வள்ளுவர். பொருளீட்டலுக்கும் துய்த்தலுக்கும் தனிமனிதன் முயற்சி அல்லாமலும் ஊழின் துணையும் வேண்டும் என வள்ளுவர் சில குறள்களில் வற்புறுத்துகிறார். ஆனாலும் இவற்றில் ஊழ் நேரே தலையிடுவதில்லை போலும். முயற்சி, சோம்பல் இவற்றுக்கு மறைமுகமாகக் காரணமாகி இவற்றை அது மயக்குகின்றதாம்.

ஆகூழால் தோன்றும் அசைவின்மை; கைப்பொருள்
போகூழால் தோன்றும் மடி. (குறள் 371)

பொருள் ஈட்டுவதற்கு அறிவும் தேவை; அதில் தலையிட்டு ஈட்டுதலை ஆக்கவும் அழிக்கவும் செய்கிறது ஊழ்:

---

6. மு. வ., பக். 410, திருவள்ளுவர்

பேதைப் படுக்கும் இழவூழ்; அறிவுஅகற்றும்
ஆகலூழ் உற்றக் கடை. (குறள் 372)

மக்கள், செல்வம் செயற்குப் பல முயற்சிகளில் ஈடுபடுகின்றனர்; ஈடுபட்டோரெல்லாம் ஈட்டி விடுவதில்லை. நாடியது ஒன்று; நடந்தது ஒன்ருக முடிகிறது; தீயவும் நல்லவும் மாறி மாறி வருகின்றன. முயற்சி மேற்கொண்டோர் கைப்பொருளும் இழந்து கலங்குகின்றனர். அவர்களால் ஆவது ஒன்றும் இல்லை. இங்கே எச்சரிக்கை தேவைப் படுகிறது. ஊழ்மேல் வைத்து அதனை உணர்த்துகிருர் வள்ளுவர்:

நல்லவை எல்லாம் தீயவாம்; தீயவும்
நல்லவாம் செல்வம் செயற்கு. (குறள் 375)

பொருளுடைமை வேறு; அறிவுடைமை வேறு என அவை பிரிந்திருப் பதற்கு ஊழ் காரணமாக விளங்குகிறது:

இருவேறு உலகத்து இயற்கை; திருவேறு;
தெள்ளியர் ஆதலும் வேறு. (குறள் 374)

இவை மட்டும் அல்ல; ஈட்டிய பொருளைத் துய்த்தலுக்கும் ஊழுக்கும் உறவுண்டு. துய்த்தலுக்கும் ஊழின் துணை வேண்டும். ஈட்டித் தொகுத்த அனைத்தையும் இடையூறின்றித் துய்க்க முடியாது.

வகுத்தான் வகுத்த வகையல்லால் கோடி
தொகுத்தார்க்கும் துய்த்தல் அரிது. (குறள் 377)

வள்ளுவர் ஊழால் உரைக்கும் விளக்கம் தான் என்ன? ஈட்டலும் துய்த்தலும் நாம் எண்ணியவாறு நடப்பதில்லை. இயற்கையின் அமைப்பே அவற்றை வரையறை செய்கிறது. செல்வத்தின்மீது கட்டற்றுப் பற்றுக் கொள்ளுவது செல்லாது. "இதை உணர்ந்தால் அறிவு ஒழுக்கம் முதலியவற்றைத் தேடி ஓயாமல் மக்கள் உழைக்க வேண்டும் என்பதும், செல்வத்தையும் நுகர்வையும் தேடி அளவு கடந்து அலையாமல் கடமையை மட்டும் செய்து அமைய வேண்டும் என்பதும் தெளிவாகும்".[7] எவ்வாறு அமைவது? இயற்கைச் சட்டம் இடந்தராதபோது ஈட்டியதை ஈகை செய்யலாம்; துறத்தலும்துணை. அது உலகிற்கும் நன்மை; உடையவனுக்கும் நன்மை.

வள்ளுவர் காட்டும் இவ்வழியால் பொருள் வாழ்வில் ஏற்பட்ட தீமைகள் தீரும் என்பதே இங்கு மனங்கொள்ளத்தக்கது.

---

7. மு. வ., பக். 414, திருவள்ளுவர்

## 2. 10. செல்வம் நிலையாமை

இந்த அண்டத்தில் மண்ணும் விண்ணும் பரல் வெளியும் என்று முதல் இயங்குகின்றன? அவை நிலைபேறுடையவையா? அவற்றின் இயல்பு யாது? இக்கருத்துக்கள் மக்கள் வாழ்வுக்கும் அப்பாற்பட்டவை. ஆனால் நம் வாழ்வும் நம் வளமும் நிலையாமை யுடையவை என்பதை நேரில் அறிகிறோம். செல்வத்தின் இயல்போ செல்வதுதான் என்கின்றனர் பெரியோர். 'உருண்டோடிடும் பணங் காசுகளால்' ஆனது செல்வம். அத்தகைய செல்வத்தை எந்த அளவு நம்பி எந்த அளவு செல்வது? நில்லாத செல்வத்தை விட நிலைபேறுடைய பிற உயர்ந்தவை அல்லவா? ஆகவே மக்கள் முயற்சிகளில் ஓரளவை – பேரளவு கூட – நிலைபேறுடையவற்றைத் தேடுதலில் ஈடுபடுத்த வேண்டாமா? நில்லாத செல்வத்தைக் கொண்டு நிலைபேறுடையவற்றைத் தேட முயலலாமல்லவா? செல்வம் நிலையாமை என்ற கருத்து பெருஞ்செல்வம் குவிப்பதைக் குறையக்காணுகிறது. பெருஞ்செல்வம் ஒருபுறம் பெருவறுமையைத் தோற்றுவிக்கலாம். இன்றைய உலகின் பூசல்களுக்கெல்லாம் இதுவே காரணம். இத்தீமைக்கு உரிய தீர்வு நிலையாமை உணர்வில் உண்டு என்கிறார் திருவள்ளுவர் தீமை தீர்ந்தால் மட்டும் போதாது; நன்மை விளைய வேண்டும். பெருஞ் செல்வம் ஈட்டாது சிறுசெல்வம் ஈட்டினாலும் நிலைபேறுடைய பணிகளைச் செய்க என்கின்றார் அவர். இதனால் நன்மை விளைகிறது. பொருளியல் தான்தோற்றுவித்த பொருளால் தோன்றும் நோய்க்குத் தானே மருந்தும் தருதல் வேண்டும். ஆனால் இன்று அது தருவதில்லை அதனை வள்ளுவர் போன்ற சான்றோர்தான் தருகின்றனர். காரணத்தோடு கட்டளை இடுகிறார் அவர்:

கூத்தாட்டு அவைக்குழாத்து அற்றே பெருஞ்செல்வம்;
போக்கும் அதுவிளிந் தற்று. (குறள் 332)

அற்கா இயல்பிற்றுச் செல்வம்; அது பெற்றால்
அற்குப ஆங்கே செயல். (குறள் 333)

## 2. 11. இல்லும் துறவும்

மக்கள் வாழ்வு நூறாண்டு என்பர். அது பிறப்பும் பிள்ளைமையும் இளமையும் முதுமையுமாகக் கழிகிறது. பெற்றோர்க்குப் பிள்ளையாய்ப் பிள்ளைகட்குப் பெற்றோராய்க் குடும்பத்துக்குத் தலைவராய்

நாட்டிற்குக் குடிகளாய்த் தன் வாழ்வும் தன் குடும்ப வாழ்வும் நாட்டு வாழ்வுமாய் மக்கள் வாழுகின்றனர். இந்த வாழ்வை இந்திய மரபு நான்கு படியாய்ப் பகுக்கிறது. **பிரமசரியம், கிருஹஸ்தம், வானப்பிரஸ்தம், சந்நியாசம்** என்பன அவை. வள்ளுவர் இவற்றை முழுவதும் உடன்படுவதாகத் தெரியவில்லை. இல்வாழ்க்கை, துறவு முதலிய அதிகாரங்கள் குறளில் உண்டு. பாயிரம் நீக்கிப் பார்த்தால் திருக்குறளே இல்வாழ்க்கையில் தொடங்குகிறது எனலாம். இல்வாழ்க்கை, அன்புடைமை, புகழ், தவம், துறவு, மெய்யுணர்தல், அவாவறுத்தல் என அறத்துப்பாலின் அதிகாரங்கள் செல்லுகின்றன. இது வள்ளுவர் கருதியவாறு செல்லும் வாழ்க்கைப் போக்குப் போலும்.[8]

இத்தகைய வாழ்க்கைப் போக்கின் பல்வேறு ஒழுகலாறுகளின்மீது கொண்ட நம்பிக்கையின் வன்மை- மென்மைகளுக்கு ஏற்ப ஒருவரின் பொருள்வாழ்வு அமையும் என்று எதிர்பார்க்கலாம். பொருள்வாழ்வை ஆற்றுப்படுத்தும் முறையில் இல்வாழ்க்கையில் வளத்தக்க வாழ்வு, நடுவு நிலைமை, அடக்கமுடைமை முதலியன வள்ளுவரால் வற்புறுத்தப்படுகின்றன.

மனைத்தக்க மாண்புடையள் ஆகித்தற் கொண்டான்
**வளத்தக்காள்** வாழ்க்கைத் துணை. (குறள் 51)

என்ற குறள் வருவாய்க்குத்தக்க வாழ்க்கையின் மாண்பினைக் குறித்துப் பேசுகிறது; சிக்கனம் வேண்டும் என அறிவுறுத்துகிறது.

நடுவுநிலைமை என்பது ஓரதிகாரம். நிதியீட்டலில் நடுவுநிலை வேண்டும் என அது வற்புறுத்துகிறது. எவ்வழியாயினும் செல்வம் தேடி ஏற்றம் பெற வேண்டும் என்று பேராசை கொண்டு அலையும் மக்கள் இன்று மலிந்துள்ளனர். பொருளீட்டலில் மக்கள் மேற்கொள்ள வேண்டிய ஒழுக்கங்கள் பற்றி இன்றைய பொருளியல் பேசுவதில்லை. அவ்வாறு பேசாமையால் வரும் அல்லல்கள் பல. இன்றைய தொழில் வணிகங்களில் நடைபெறும் வஞ்சகம், பொய், புரட்டு, சூது, வாது ஆகியவை பற்றி அடிக்கடி பேசப்படுகிறது. இதனால் வருந்துவோர், வஞ்சிக்கப்படுவோர் பலர். இத்தீமைகளைப் போக்க நெறிமுறைகள்

8. **இல்லறவியல்**, துறவறவியல் என உரையாசிரியர்கள் அறத்துப் பாலைப் பகுத்தது எந்த அளவு பொருந்தும் என்பது ஆராய்தற் குரியது

தேவை. பொருளீட்டலில் நடுவுநிலைமை ஒரு நன்னெறி. வஞ்சனை செய்தும் வளம் அடையலாம். ஆனால் அது ஆகாது.

நன்றே தரினும் நடுவிகந்தாம் ஆக்கத்தை
அன்றே ஒழிய விடல். (குறள் 113

வாழலாம்; அல்லது வாடலாம்; பொருள் சேரலாம் அல்லது தீரலாம். இது உலக இயற்கை. இது வணிகரும் தொழிலரும் அறிந்த ஒருண்மை. இவற்றால் சிறப்பும் சிறுமையும் ஏற்படுவதில்லை. ஆனால் மக்களை உயர்த்தி மாண்புடையராக்குவது நெஞ்சத்துக் கோடாமையாகிய நடுவுநிலைமை:

கேடும் பெருக்கமும் இல்லல்ல; நெஞ்சத்துக்
கோடாமை சான்றோர்க்கு அணி. (குறள் 115)

பொருளுடைமை எல்லார்க்கும் பொதுவுரிமை. அவரவர்க்கு உரியது என்பது உண்டு. ஒருவர்க்கு உரியதை ஒருவர் கவருதல் என்பது கொடுமை. தன்னது போன்றே பிறரதும் என்னும் மனப்பாங்கு இன்றைய பொருள்வாழ்வுக்கு இன்றியமையாதது இதனால் கொடுமைகள் குறையும். வாணிகத்துக்கு இத்தகைய நடுவுநிலை வேண்டும் என்கிறார் வள்ளுவர்:

வாணிகம் செய்வார்க்கு வாணிகம் பேணிப்
பிறவும் தமபோற் செயின். (குறள் 120)

செல்வமுடைமைக்கும் செப்பமுடைமை வேண்டும் என்கிறார் முப்பாலாசிரியர். அத்தகைய செல்வமே சிதைவின்றி நிற்கும்; பின்னரும் பயன்படும்:

செப்பம் உடையவன் ஆக்கம் சிதைவின்றி
எச்சத்திற்கு ஏமாப்பு உடைத்து. (குறள் 112)

நீதியோடு நிதி தேடிய பின் துய்த்தல் வேண்டும் என்பதே திருவள்ளுவர் திட்டம். துய்த்தலுக்கு எல்லை எது? **தேவைக்குத் துய்த்தல்** எங்கும் உண்டு. நலத்துக்குத் **துய்த்தலும்** உண்டு; அது தேவையின் அளவு கடந்தது. **இன்பத்துக்குத் துய்த்தலும்** உண்டு; அது எல்லை கடந்தது.[9] இன்றைய உலகில் தேவைக்கே அலைந்து தேடி அகப்படாது அல்லலுறுவோர் எண்ணிறந்தோர். இன்பத்தில்

9. இவற்றை இன்றைய பொருளியல் முறையே necessaries, comforts, and luxuries என வழங்குகிறது.

புரளுவோரும் ஏராளம். இந்தக் கருமை வெண்மையளவு வேறுபாடு இன்றைய உலகை வாட்டி வருகிறது. இன்பத்துக்குத் துய்த்தலில் தான் எல்லை ஏது? அது முடிவிலாத் தொடர் கதை. வள்ளுவர் இங்கெல்லாம் அடக்கம் வேண்டும் என அறிவுறுத்துகிறார் ஐம்புலனால் நுகர்ந்து மக்கள் ஆரத்துய்க்கின்றனர். அதற்கே வரையறை கோலுகிறார் அவர்:

ஒருமையுள் ஆமைபோல் ஐந்தடக்கல் ஆற்றின்
எழுமையும் ஏமாப்பு உடைத்து. (குறள் 126)

ஐந்தடக்கல் அறிவின் துணைக்கொண்டுதான் அமையும். ஆகவே பொருளொடு அறிவும் இணைந்து செல்லவேண்டும். உரன் என்னும் தோட்டியான் ஓரைந்தும்' (குறள் 24) காத்தலே உயர்நெறி. இந்நெறி, பொருள்வாழ்வில் வளர்ச்சியைக் குறைக்கலாம்; ஆனால் அதேபோது கொடுமைகளையும் குறைக்கிறது. வளம் இல்லாது போனாலும் வாட்டம் இல்லாது இருக்க வேண்டும் என்றே இன்றைய இன்னல் உலகம் ஏங்குகிறது. வள்ளுவர் இதற்கு ஒருவழி கூறினார்.

இல்லறம் நடத்தித் துய்க்க வேண்டுவனவற்றைத் துய்த்து, வாழவேண்டிய முறையில் வாழ்ந்த பின்னர் ஒருநிறைவு தோன்றும். அன்பும் அருளும் பழுக்கும். தன்னல மனம் தாழ்ந்து பிறர்நலம் பேணும் பெருந்தன்மை தோன்றும். உலகத்தின்மீது பற்றுப் படிப் படியே நீங்கும். ஆசைகள் அறும். இத்தகைய முதிர்ந்த பருவத்தில் கொல்லாமை துறவு மெய்யுணர்தல் அவாவறுத்தல் முதலிய ஒழுகலாறுகள் உயர் பொருள்களாகக் காட்சி தருகின்றன. இந்நிலையில் பொருள்மீது பற்றும் பொருள்வாழ்வில் அக்கரையும் தேய்ந்துபோகும். இதுவே பருவத்துக் கேற்ற பக்குவம். இந்தப் பக்குவம் பொருளியலையும் பக்குவப்படுத்தும்.

இன்றைய பொருளியலுக்கு எதுவும் தொழில்; எதுவும் வணிகம். செல்வம் தருவதெல்லாம் செல்லத்தக்க வழி என்றே இன்றைய மக்கள் கருதுகின்றனர். ஒருகாலத்தில் அடிமை வணிகமும் நடைபெற்றது! பரத்தைமையும் ஒருதொழில்! மான் தோலும் யானைக் கொம்பும் வணிகப் பண்டங்கள். வள்ளுவர் எல்லா வணிகத்தையும் உடன்படுவதில்லை; எல்லாத் தொழில்களையும் உடன் படுவதில்லை. அவருக்கு இவ்வகையில் செய்யத்தக்கவை இவை' செய்யத் தகாதவை இவை; நல்லவை இவை; தீயவை இவை என்ற வரையறை உண்டு. வள்ளுவர் கண்ட பொருள்வாழ்வில் மீன் பிடிக்கும்

தொழிலுக்கு இடமில்லை; புலால் உணவு விடுதிகளுக்கு இடமில்லை. வள்ளுவர் **கொல்லாமை** (அதி. 33) போற்றும் சான்றோர். ஆகவே உயிர்களைக் கொன்று வணிகம் செய்தலைக் கடிகிறார்.

*தின்றற்பொருட்டால் கொல்லாது உலகுஎனின் யாரும்*
*விலைப்பொருட்டால் ஊன்தருவார் இல்.* (குறள் 256)

இன்றைய உலகம் வள்ளுவர் கொள்கையை உடன்படவில்லை; கொலைக்கென்றே கால்நடை வளர்ப்பு என இன்றைய உயிர்களை வளர்க்கிறது. எத்தனை ஆயிரம் மக்கள் அதில் ஈடுபட்டுள்ளனர்? வள்ளுவர் அளவு இவ்வுலகம் இன்னும் உயரவில்லை.

வள்ளுவர் மக்கள் வாழ்வின் முடிவாக வற்புறுத்துவது கொல்லாமையும் தவமும் மேற்கொண்டு, துறவு பூண்டு, புலனடக்கிப், பற்று விட்டு, மெய்யுணர்ந்து பிறப்பறுத்து, இறைவனடி சேர்தல் எனத் தெரிகிறது.

*அடல்வேண்டும் ஐந்தன் புலத்தை; விடல்வேண்டும்*
*வேண்டிய எல்லாம் ஒருங்கு.* (குறள் 343)

*இயல்பாகும் நோன்பிற்குஒன்று இன்மை;* **உடைமை**
**மயல்ஆகும்** *மற்றும் பெயர்த்து.* (குறள் 344)

*யான்* **எனது என்னும் செருக்குஅறுப்பான்** *வானோர்க்கு*
*உயர்ந்த உலகம் புகும்.* (குறள் 346)

எல்லை மீறிய செல்வம் சுரண்டலால் விளைகிறது. அதன் இயல்பு ஒரு சிலர்க்கே உரிமையாதலையுடையது. இதனால் சமூகத்தில் உறுபசியும் ஓவாப் பிணியும் செறுபகையும் சேர்கின்றன. அரசு வரிவாங்க இறங்குகிறது. அரசுடனும் பூசல் தோன்றுகிறது. எல்லாப் புறத்திலும் மனக்கசப்பும் வன்செயலும் பொறாமையும் பறிமுதலும் விளைகின்றன. இவற்றுக்கெல்லாம் மாற்றுக-மருந்தாக வள்ளுவர் கருத்துக்கள் பயன்படலாம். மெய்யுணர்ந்தோர் பிறர் நலம் பேணிப் பொருளைப் பயன்படுத்துவர். உலகின் பிணி போகும்.

தவமும் புலனடக்கமும் பற்றறுத்தலும் நிலையாமைக் கருத்தும் துறவும் மக்கள் உலக வாழ்விலேயே அக்கரையும் ஆர்வமும் கொள்ளுதலைத் தடுத்து இறுதியில் எல்லா முன்னேற்றத்தையும் சிதைத்து விடும் என்றும் சிலர் கருதக்கூடும். பல சமயங்களும் இந்த வரட்சி நிலையைத் தோற்றுவித்திருக்கின்றன என்பது ஓரளவு உண்மைதான். ஆனால் வள்ளுவர் இந்த உலக வாழ்க்கையை

அவ்வாறு வெறுக்கச்சொல்லவில்லை. அவருக்கு இம்மை வாழ்க்கையும் இல்வாழ்க்கையும் பொருள்வாழ்வும் போற்றத்தக்கவையே. இவற்றை வற்புறுத்திப் பல அதிகாரங்கள் இயற்றியுள்ளார் அவர். 'பொருளாட்சி போற்ருதார்க்கு இல்லை'' 'பொருளில்லார்க்கு இவ்வுலகம் இல்' என்னும் அவர் கருத்துக்கள் இவ்வுலக வாழ்வை வற்புறுத்தி ஆக்கமும் ஊக்கமும் தருகின்றன. இம்முன்னைக் கருத்துக்களோடு அவர் பின்னைக் கருத்துக்களை இணைத்துவைத்துக் காண வேண்டும். அப்போதுதான் அவர் கண்ட வாழ்வின் முழுமை தோன்றும். அவர், பொருள் வாழ்வைப் போற்றி அதனுல் விளையக் கூடிய தீமைகளையே தூற்றுகிருர் என்பதே கொள்ளத்தக்க முடிவு.

## 2. 12. செல்வம் யாது?

வள்ளுவர் பொருளைப் போற்றினுர்; பொருளைவிட மக்கட் பண்புகளைப் பெரிதும் போற்றினுர். அன்பு, செய்நன்றி, அடக்கம், ஒழுக்கம், ஒப்புரவு, ஈகை, புகழ், வாய்மை, கல்வி, கேள்வி, அறிவு, கண்ணேட்டம், நட்பு, குடிமை, மானம், சான்ருண்மை முதலியவை அம்மக்கட் பண்புகள். இவை உடைமையே உண்மையில் உடைமை என வள்ளுவர் கருதுகிருர். செல்வமுடைமை உடைமையாக அவருக் குத் தோன்றவில்லை. அறமுரைக்க வந்த முப்பால் இவ்வாறுரைத்தல் வியப்பல்ல. வெல்படை வேந்தர்க்குச் செல்வம் எனப்படுகிறது.

*கேடுஇல் விழுச்செல்வம் கல்வி.* [குறள் 400]

*செல்வத்துட் செல்வம் செவிச் செல்வம்; அச்செல்வம்*
*செல்வத்துள் எல்லாம் தலை.* [குறள் 411]

*தம்பொருள் என்பதம் மக்கள்.* [குறள் 63]

*வேண்டாமை அன்ன விழுச்செல்வம்.* [குறள் 363]

*திறன்அறிந்து சொல்லுக சொல்லை; அறனும்*
*பொருளும் அதனினூஉங்கு இல்.* [குறள் 644]

*அருட்செல்வம் செல்வத்துட் செல்வம்.* [குறள் 241]

*அறிவுடையார் எல்லாம் உடையார்.* [குறள் 430]

*உள்ளம் உடைமை உடைமை.* [குறள் 592]

*அறத்தினூஉங்கு ஆக்கமும் இல்லை.* [குறள 32]

*காக்க பொருளா அடக்கத்தை; ஆக்கம்*
*அதனினூஉங்கு இல்லை உயிர்க்கு.* [குறள் 122]

*மனநலம் மன்னுயிர்க்கு ஆக்கம்.* [குறள் 457]

*உறுப்புஅமைந்து ஊறுஅஞ்சா வெல்படை வேந்தன்*
*வெறுக்கையுள் எல்லாம்தலை.* [குறள் 761]

உடைமை, செல்வம், ஆக்கம், வெறுக்கை, திரு, பொருள்—இவை எல்லாம் குறளில் ஒரு பொருளுடைய சொற்கள். இப்பண்புச் செல்வங்கள் எல்லாம் அழியா நிலைபேறுடையவை; பொருட்செல்வம் நிலைபேறு இல்லாதது. நிலையா உலகில் அழியாப் பொருள்கள் போற்றுதற்கு உரியவை தானே:

*உள்ளம் உடைமை உடைமை; பொருளுடைமை*
*நில்லாது நீங்கி விடும்.* (குறள் 592)

உடையவர்கள் உடல் இழந்தாலும் பண்புச் செல்வங்கள் தொடர்ந்து வாழ்கின்றன; உடையவர்களையும் நினைவுபடுத்திக் கொண்டு வாழுகின்றன. செல்வம் சென்று விட்டால் தேடிக்கொள்ளலாம். ஆனால் அருள் முதலான செல்வங்கள் அழியுமானால் ஆக்கிக் கொள்ளுதல் அரிது; அரிதினும் அரிது. ஆகவே இவையெல்லாம் அரும்பொருள்கள்; பொருட்செல்வம் வெறும் பொருள். இதனை இயம்புகிறார் வள்ளுவர்:

*பொருள்அற்றார் பூப்பர் ஒருகால்; அருள்அற்றார்*
*அற்றார்;மற்று ஆதல் அரிது.* (குறள் 248)

அருள் முதலிய செல்வங்களை ஆன்றோரிடத்துமட்டுமே காண முடியும். இது அழகுக்கு அழகு ஊட்டியது போலாம்; இனம் இனத்தோடு சேரும் என்பது போலாம். ஆனால் பொருட் செல்வம் தக்கார் தகவிலர் எனப் பாராது எல்லாரிடமும் குடி கொள்ளுகிறது. இது பொருட் செல்வத்துக்கு உரிய ஒரு குறை:

*........ ......... ......... பொருட்செல்வம்*
*பூரியார் கண்ணும் உள.* (குறள் 241)

இன்றைய உலகின் பொருள்வாழ்வில் தோன்றியுள்ள தொல்லைகள் பலவற்றுக்குக் காரணம் பொருள் பொருந்தாதாரிடம் பொருந்துவதுதான். நல்லோர் கைப்பட்ட செல்வம் நன்மை நல்கும். தீயோர் கைப்பட்ட செல்வம் தீமையே தரும். பெற்றபொருளை அழிவுப் படைக்குப் பயன்படுத்தும் நாடுகள் இன்று பல இருக்கின்றன. நாடுகள் மட்டுமல்ல; வீடுகளும் பல உண்டு. செல்வம் பெற்றதால் சீரழிந்தோர் வரலாறுகள் கதைகளாகவும் காவியங்களாகவும் வழங்கு

கின்றன. பெற்ற செல்வத்தைப் பெருக்கிப் பெருக்கித் தனியாட்சி யுரிமை (Monopoly) நாட்டி, நாட்டை நலிவு செய்தல் இன்றைய பொருள்வாழ்வில் ஒருபெருந்தலைவலி. பல்வேறு நாடுகளின் அரசு களும் இதனைத் தவிர்க்கப் பல்வேறு முயற்சிகளை மேற்கொள்ளு கின்றன. இவற்றுக்கெல்லாம் எதிராகத்தான் வள்ளுவர் 'பொருட் செல்வம் பூரியார் கண்ணும் உள' என எச்சரிக்கை தருகிறார்:

நல்லார்கண் பட்ட வறுமையின் இன்னாதே
கல்லார்கண் பட்ட திரு. (குறள் 408)

## 2. 13. வறுமை யாது?

வள்ளுவர் பண்புச் செல்வங்களையே செல்வமுடைமையாகக் கருதுவதால் பொருட்செல்வம் இன்மையை வறுமையாகக் கருதுவதும் இல்லை. அதேபோது அப்பண்புகள் இன்மையே அவருக்கு வறுமை எனப்படுவது.

நயனுடையான் நல்கூர்ந்தான் ஆதல் செயும்நீர
செய்யாது அமைகலா வாறு. (குறள் 219)

......... ......... ......... அறிவிலார்
என்உடைய ரேனும் இலர், (குறள் 430)

இன்மையுள் இன்மை விருந்தொரால்... (குறள் 153)

உடைமையுள் இன்மை விருந்துஓம்பல் ஓம்பா
மடமை.............. (குறள் 89)

துன்புறூஉம் துவ்வாமை இல்லாகும் யார்மாட்டும்
இன்புறூஉம் இன்சொ லவர்க்கு. (குறள் 94)

கெடுவாக வையாது உலகு நடுவாக
நன்றிக்கண் தங்கியான் தாழ்வு. (குறள் 117)

'சிந்தையின் நிறைவே செல்வம்' என்பர் பிற்கால அறிஞர்; 'சிந்தையின் செம்மையே செல்வம்' என்பது வள்ளுவர் உள்ளம். இன்றைய உலகின் பொருள்வாழ்வில் பூசலுக்கும் போராட்டத்துக்கும் ஒரு காரணம் செல்வத்தில் உயர்ந்தோரைக் கண்டு செல்வத்தில் தாழ்ந் தோர் அழுக்காறு கொள்ளுதல். 'செல்வர், சுரண்டுவோர்' என்றும் 'வறியர், வஞ்சிக்கப்பட்டோர்' என்றும் பொதுவாகக் கருதப்படுகிறது. இக்கூற்றுக்களில் உண்மை இல்லாமல் இல்லை. இவற்றுக்கு மருந்தாக வரி என்றும், வரையறை என்றும், பறிமுதல் என்றும் பல வழிகள் இன்று மேற்கொள்ளப்படுகின்றன. இவ்வழிகளில் வன்மையும் உண்டு;

மென்மையும் உண்டு; அழுகையும்உண்டு. வள்ளுவரும் இவற்றுக்கு மாற்றுக்கூருமல் இல்லை. வள்ளுவர் பண்புகளையே செல்வம் என்று கருதிப் பொருளைப் பொருட்டாக மதியாமையால் அவர் நோக்கில் பொருளுடையோர்மீது பொருமை கொள்ளுவதற்கு வாய்ப்பில்லை. அவற்றைப் பொருளாகக் கொண்டால் அல்லவோ பொருமை கொள்ள முடியும்? ஆகவே வள்ளுவர் கண்ட வாழ்வில் பொருட் செல்வம் அற்ருேர் பூசலிட இடம் இல்லை. ஆனுல் அல்லல்கள் அகன்று விடுமோ? வள்ளுவரின் அடுத்த மருந்து, குவிந்த செல்வத்தைக் கொடையால் பெற்று வழங்குவது. உலகத்தின் தீமைகளுக்கு நன்னடையும் நன்கொடையுமே வள்ளுவர் வழங்கும் வழிகள்.

வள்ளுவர்க்குப் பண்பே செல்வமாதலால் அவர் பணம் காசுகளைப் போற்றவில்லை என்பது மேலே எடுத்துக் காட்டப்பட்டது. ஆகவே அவை பற்றிய கணக்கு வழக்குக்களையும் அவற்றை ஈட்டிக்காக்கும் வகைகளையும் வள்ளுவர் தம் நூலில் எங்கும் வரையறுத்துப் பேசவில்லை. இன்றைய பொருளியலின் கவலை-யெல்லாம் இவை பற்றியே. வள்ளுவர் அரசியலைப் பேசுகிருர். ஆனுல் பொருள்நூல்கள் - எடுத்துக் காட்டாக அர்த்த சாஸ்திரம் -- பேசுவது போன்று அரசின் வருவாய்களை அவர் எங்கும் தொகுத்துத்தரவில்லை; சிலவருவாய்கள் அறம் சார்ந்தவையா இல்லையா என்று மட்டும் ஆராய்கிருர். அரசுக்கு உரிய இறை பற்றிய ஒரு குறிப்பை ஓரிடத்தில் வள்ளுவர் கூறுகிருர். ஆனுல் அன்று அரசு வாங்கிய வரிகள் எவை எவை என அனைத்தும் பற்றி அறிய அவர் நூலில் வாய்ப்பில்லை. வள்ளுவர் காலத்தில் நாணயம் வழக்கிலிருந்திருக்கிறது. காசு, காணம், கழஞ்சு, பொன் முதலியவை செல்வத்தின் அளவைகளாக (Money) அன்று வழங்கின. ஆனுல் இவை பற்றிய ஒரு குறிப்பும் வள்ளுவர் குறளில் இடம்பெறவில்லை. அன்று எண்ணற்ற தொழில்கள் நடைபெற்றிருக்கின்றன எனச் சிலப்பதிகாரத்தால் அறிகிருேம். ஆனுல் உழவு ஒன்றையே குறளிலிருந்து அறிய முடிகிறது. 'விலைப் பொருட்டால் ஊன் தருதல்' ஓரிடத்தில் பேசப்படுகிறது. வேறு தொழில்கள் பற்றிய குறிப்புக்கள் குறளில் இல்லை. தமிழரது கடல் வணிகம் உலகப் புகழ் பெற்றது. உள் நாட்டு வணிகமும் அயல் நாட்டு வணிகமும் அன்று செழித்திருந்தன. ஆனுல் வணிகம் நடுவுநிலையுடன் நடைபெற வேண்டும் என்ற ஒரு குறிப்புத் தவிர வேருென்றும் அது பற்றிக்

குறளில் இல்லை. இதனால் ஒன்று தெளிவாகிறது. வள்ளுவர்க்குப் பொருளியலைத் தருவது நோக்கம் அல்ல; அக்கரையும் இல்லை. மக்கள் பொருள்வாழ்வை அறம் கொண்டு நெறிப்படுத்தலே அவர் நோக்கம்.

## 2. 14. ஈட்டும்நெறி

வள்ளுவர், பண்புகளையே போற்றுவதால் அப்பண்புகள் அழியாதுநின்று நிலைபெற வேண்டும் என்பதில் அக்கரை கொண்டிருக்கிறார். பொருளில்லார்க்கு இவ்வுலகமில்லை என்பதால் பொருளை ஈட்டியே தீர வேண்டும். இவ்வாறு ஈட்ட வேண்டிய பொருளுக்கும் காக்க வேண்டிய பண்புகளுக்கும் இடையே அமைந்த உறவு எத்தகையது என்ற கேள்வி இந்நிலையில் எழுகிறது. பண்பும் பொருளும் ஒருங்கு இயைந்து நடைபெற வேண்டும்; பண்பு கெடாது பொருளீட்டவேண்டும் என்கிறார் வள்ளுவர். பண்பு கெடுத்துப் பொருள் ஈட்டுதலால் மக்களுக்குத் துயரங்கள் தான் தோன்றும். துயரம் தரும் பொருள் நிலைபெறவும் முடியாது. இதுவே வள்ளுவர் முடிவு.

*அடுக்கிய கோடி பெறினும் குடிப்பிறந்தார்*
*குன்றுவ செய்தல் இலர்.* (குறள் 954)

*நன்றே தரினும் நடுவிகந்துஆம் ஆக்கத்தை*
*அன்றே ஒழிய விடல்.* (குறள் 113)

*செப்பம் உடையவன்ஆக்கம் சிதைவு இன்றி*
*எச்சத்திற்கு ஏமாப்பு உடைத்து.* (குறள் 112)

பொருளீட்டலில் நடுவுநிலைமை போற்றப்படவேண்டும் என்கின்றன இக்குறள்கள். குறிப்பாக வணிகத்தின்வழிப் பொருளீட்டும் பொழுது இந்நடுவு நிலைமை சிதைதல் கூடாது என்று ஒருகுறள் குறிப்பிடுகிறது:

*வாணிகம் செய்வார்க்கு வாணிகம், பேணிப்*
*பிறவும் தமபோற் செயின்.* (குறள் 120)

பண்பற்றுப் பெற்ற செல்வம் பயன்படாது என்கிறார் வள்ளுவர். கெட்ட பண்பே பெருஞ்செல்வமேயாயினும் அதைக் கெடுக்குமாம்:

பண்பிலான் பெற்ற பெருஞ்செல்வம் நன்பால்
கலந்தீமையான் திரிந் தற்று (குறள் 1000)

வழியற்ற வறியவர்கள் என்ன செய்வது? பொல்லாத வழியால் பொருளீட்டும் உரிமை ஏழைகளாயினும் அவர்களுக்கும் இல்லை. துன்பந்தரும் வழியால் பசித்துன்பத்தைப் போக்கிக்கொள்ளுதல் முடியாதாம்:

இலன்என்று தீயவை செய்யற்க; செய்யின்
இலனாகும் மற்றும் பெயர்த்து. (குறள் 205)

தீய வழியில் பொருளிட்டினால் பொருள் சேரலாம். ஆனால் அது அனுபவிக்கும் அளவு நிலைபேறுடையது அல்ல என அவர் எச்சரிக்கிறார்.

அன்புஒரீஇத் தற்செற்று அறம்நோக்காது ஈட்டிய
ஒண்பொருள் கொள்வர் பிறர். (குறள் 1009)

சட்டத்தை மீறிக் கள்ளக்கையெழுத்திட்டு வரி ஏய்த்து வஞ்சனை செய்வோர்தம் வழக்குக்கள் வழக்கு மன்றங்களில் எல்லாம் மலிந்து கிடக்கின்றன. இவற்றுக்கு வழக்கு மன்றங்களில் தண்டனையும் உண்டு; மக்கள் மன்றங்களில் தூற்றுதலும் உண்டு. தீய வழிகளில் ஈட்டிய பொருளைப் பலர் அறிய நுகரவும் முடியாது. இதனால் கள்ளப் பணமும் கறுப்புப் பணமும் குவிகின்றன. இவை அரசின் பொருள் வாழ்வையும் மக்கள் பொருள்வாழ்வையும் சீரழிக்கின்றன. இப்பேச்சு இன்று எங்கும் பேசப்படுகிறது. நல்வழியில் ஈட்டிய பணமே வெள்ளைப் பணம்; தூயபணம். தீய பணத்தை ஒழிக்க அரசுகள் இன்று தீவிரமாக முயலுகின்றன. இது வந்த பின் காத்தல்; வள்ளுவர் வழங்கும் அறிவுரை வருமுன் காத்தல்.

இங்கு எடுத்துக்காட்டப்பட்ட பண்புடைமை எல்லாம் மக்களுக்கு வேண்டியவை இவற்றை "அறத்துப்பாலிலும் பொருட் பாலின் குடியியலிலும் வள்ளுவர் குறிப்பிடுகிறார். அரசு வருவாயின் தூய்மை பற்றியும் தீமை பற்றியும் அரசியலிலும் பிற இயல்களிலும் இவ்வாறே அவர் குறிப்பிடுகின்றார். அவை பற்றிப் பின்னர்க் காணலாம்.

## 2. 15. துயர் துடைக்கும் வழிகள்:

'பொருள் இல்லார்க்கு இவ்வுலகம் இல்லை' ஆதலால் எல்லோரும் பொருளீட்டுகின்றனர். உலகின் இயல்போ 'கேடும் பெருக்கமும் இல்லல்ல' என இருக்கின்றது. மக்கள் முயற்சியும் ஒருசீராக இருப்பதில்லை; செல்வம் சேர்தலும் ஒருசீராக இல்லை. முயற்சி மட்டும் பொருளீட்டலுக்குப் போதுவதில்லை, வாய்ப்புக்களும் தேவை, வாய்ப்பையும் படைக்கலாம்; ஆனால் வாய்ப்புக்களும் வாய்க்க வேண்டும் முதலும் தேவை; 'முதலில்லார்க்கும் ஊதியம் இல்லை' இக்காரணங்களாலும் இன்னோரன்ன காரணங்களாலும் மக்கள் பொருள்வாழ்வில் ஏற்றத் தாழ்வுகள் ஏற்படுகின்றன; மேடு பள்ளங்கள் ஏராளம்; மலைகளும் உண்டு; மடுக்களும் உண்டு. இவற்றைத் தொடர்ந்து மனக்கசப்பும், அழுக்காறும், பூசலும் தோன்றுகின்றன.

இன்றைப் பொருளியல் பெற்ற தலைப்பிள்ளை தான் முதல் ஆட்சி செய்யும் **முதலாண்மை.**(Capitalism). இதுவே தலைமைப் பிள்ளை எனவும் கூறலாம். அதனை அது பெற்றெடுத்த இடம் **விற்பனைக்களம்** (Market). இப்பொருளியல் தொடக்க காலத்தில் சில கோட்பாடுகளை வகுத்துக் கொண்டு வளர்ந்தது. அதிலே ஒன்று பொருளியற் செயல்களை விற்பனைக் களமே உருவாக்கி நெறிப்படுத்தும் என்பது. மற்றொன்று அரசு முதலியவற்றின் தலையீடு இல்லாதிருக்குமானால் பொருள்வாழ்வு தானே சீராக நடைபெறும் என்பது. பிறிதொன்று பொருளியற் செயல்களால் தோற்றுவிக்கப்படும் செல்வம் விற்பனைக்களத்தின் பணியால் தக்கார்க்குத் தக்க முறையில் பங்கிடப்படும் என்பது. இவைகள் எல்லாம் அதன் நோக்கில் உண்மையாக இருக்கலாம். ஆனால் இவை கொண்டுவந்து சேர்த்த விளைவுகள் கொடுமைகளாக அமைந்து விட்டன. இக்கோட்பாடுகளில் மக்கட்பண்புகளுக்குச் சிறப்பும் இல்லை; மக்களுயிர்க்கு மதிப்பும் இல்லை. ஏற்றத் தாழ்வுகள் பெருகின. செல்வர் மேலும் பெருஞ் செல்வராயினர்; வறியவர் மேலும் வறியவராயினர். உடையார் முன் இல்லார் என இருபேரினங்கள் திரண்டன. துன்பத்திற்கு ஓரினம்; இன்பத்திற்கு ஓரினம் என்ற நிலை வந்தது. வள்ளுவர் வெறுத்த 'உறுபசியும் ஓவாப்பிணியும் செறு பகையும்' சேர்ந்தன.

இந்நோய்களுக்கு மருந்து யாது ?

பொருளியலிலேயே பின்னர்ப் புதிய சிந்தனைகள் தோன்றின. முதலாட்சியை வைத்துக்கொண்டே மருந்து கூறினர் சிலர். தனிப்பட்டோர் தொழிலார்வமும் ஊக்கமும் சிதையாதவாறும் குடிமக்கள் உரிமை கெடாதவாறும் மருந்துகள் அமைய வேண்டும் என்றனர் அவர்கள். அவர்கள் தந்த மருந்து வரி விதித்தல். இதன்படி வருமானவரி, இறப்புவரி; உடைமைவரி, கொடை வரி முதலான வரிகளால் செல்வர்களிடம் குவிந்த எல்லை மீறிய செல்வத்தை அரசு பெற்றுச் சமூகப் பணிகள் என்ற பெயரில் வறியோர்க்கு வழங்குகிறது. முதலாண்மை நாடுகளில் நடைபெறும் அரசுகள் இவ்வாறுதான் செய்கின்றன. அரசு எவ்வளவுதான் தலையிட்டு எவ்வளவுதான் வரியாக வாங்கினாலும் அதனால் மேடு பள்ளங்களைச் சீராக்க முடியவில்லை. மேடுபள்ளங்கள் தோன்றிக்கொண்டே இருக்கின்றன. முதலாட்சி நடைபெறுகின்ற வரையில் வறுமையாட்சியும் தலைவிரித்தாடும்.

**காரல் மார்க்சு** (Karl Marx)போன்ற பொதுவுடைமைச் சிந்தனையாளர்கள் மற்றொரு மருந்து தந்தனர். பொருளாக்கத்துக்கு வேண்டிய நிலம், தொழில், வணிகம் முதலான கருவி காரணிகளையெல்லாம் நாட்டுடைமையாக்க வேண்டும் என்பதே அவர்கள் கருத்து. அவ்வாறானால் இவற்றால் படைக்கப்படும் செல்வம் எல்லாம் நாட்டு மக்கள் அனைவர்க்கும் உரிமையாகும். திட்டமிட்டுத் தக்க முறையில் செல்வம் வேண்டியவர்க்கு வேண்டிய முறையில் பகிர்ந்தளிக்கப்படலாம். இதனால் பொருள்வாழ்வில் சமநிலை தோன்றலாம். தோன்றவே போட்டிக்கும் பொறாமைக்கும் பூசலுக்கும் சமூகத்தில் இடம் இல்லாது போகலாம். இதுவே மார்க்சு கண்ட **பொதுவுடைமையாட்சி.**

பொதுவுடைமைச் சமூகத்தின் பொருள் வாழ்வில் சமநிலை ஏற்படுகிறது என்பது உண்மையாகலாம்; ஆனால் அதற்குச் சமூகம் தரும் விலை பெரிதாக இருக்கிறதே என அறிஞர்கள் அஞ்சுகின்றனர். குடிமக்கள் உரிமைகள் பலவற்றை விலையாகத் தந்துவிட்டே பொருட் சமநிலையை ஓரளவு பெறுகின்றனர். அறமும் பொருளும் பொருந்திச் செல்லுமாறு சமவாய்ப்புச் சமூகத்தை அமைக்க இன்று அறிஞர்கள் முயன்று வருகின்றனர்.

**காந்தியடிகள்** மற்றொரு வழி கூறினர். 'பெருஞ்செல்வம் திரட்டிய செல்வர்கள் - தம் தேவைக்குமேல் ஈட்டிய செல்வர்கள் - தம் தேவைக்குப்போக எஞ்சியவற்றைச் சமூகத்தின் நன்மைக்காக வறியவரின் வாழ்வுக்காகத் - தாமே முன் வந்து செலவிட வேண்டும்; இதுவே அவர்கள் செய்யத்தக்க அறம்' என்று அவர்கள் கருதினர். இவ்வறத்திற்கு அவர்கள் **நம்பிக்கைப் பொறுப்பாண்மை (Trusteeship)** எனப் பெயரிட்டனர். இது செல்வர்களின் நற்பண்புகள் மீது நம்பிக்கை கொண்டு வேண்டும் ஒருசீர்திருத்தம். இதில் அன்பும் பண்புமே உண்டு. தனியுடைமையை அடிப்படையாகக் கொண்ட முதலாண்மைக்கும் பொதுவுடைமையை அடிப்படையாகக் கொண்ட பொதுமையாண்மைக்கும் மாறகவும் அவற்றின் தீமைகளுக்கு மருந்தாகவுமே இந்நம்பிக்கைப் பொறுப்பாண்மை வகுக்கப்பட்டுள்ளது. இதன் வெற்றியும் தோல்வியும் செல்வக்குடி மக்களைப் பொறுத்தே உள்ளன.

## 2. 16. வள்ளுவர் வகுத்தவழி: பகுத்துண்ணல்

சமூகத்தின் பொருள்வாழ்வில் அமைந்த மேடு பள்ளங்களின் தீமைகளையும் கொடுமைகளையும் களையக் காந்தியடிகளைப் போன்றே வள்ளுவரும் ஒரு வழியைத் தந்துள்ளார். அதுதான் வளமுடையவர்கள் வாய்ப்பற்றோருக்கு வழங்கல் — **பகுத்துண்ணல்.** இவ்வறப்பணியை வள்ளுவர் **விருந்தோம்பல், ஈகை, ஒப்புரவு, நன்றி, சுற்றந்தழால், வேளாண்மை** எனப் பல பெயர் சூட்டிப் பாராட்டுகிறர். வள்ளுவரது குறளில் விருந்தோம்பல் 9-ஆம் அதிகாரமாகவும் ஒப்புரவறிதல் 22-ஆம் அதிகாரமாகவும் ஈகை 23-ஆம் அதிகாரமாகவும் அமைந்திருக்கின்றன. இம்மூன்று அதிகாரங்களும் இல்வாழ்வார்க்கு உரியன என்பர் பரிமேலழகர். நன்றியில் செல்வம் என்னும் ஓரதிகாரம் பொருட்பாலில் 101-ஆவதாக அமைந்திருக்கிறது. இவ்வதிகாரம் குடிமக்களுக்குரியது என அறிஞர் கருதுவர். இதிலும் வள்ளுவர் பொருள் வழங்கலையே வற்புறுத்துகிறர். இவ்வாறே **இரவு** (அதி. 106), **இரவச்சம்** (அதி 107) என்னும் இரண்டதிகாரங்களும் ஈகையின் சிறப்பையே எடுத்துப் பேசுகின்றன. அரசியலிலுள்ள சுற்றந்தழாலும் பகுத்துண்ணலே

பேசுகிறது. ஆகவே விருந்தோம்பல், ஒப்புரவறிதல், ஈகை, சுற்றந்தழால், நன்றியில் செல்வம், இரவு, இரவச்சம் என்னும் ஏழு அதிகாரங்களில் வள்ளுவர் இவ்வறப்பணி பற்றிப் பேசுவதால் அதற்கு அவர் பொருள்வாழ்வில் தரும் சிறப்பிடம் புலப்படும்.

சான்ருேர் கண்ட ஒழுகலாறுகளிலெல்லாம் தன் மாட்-டுள்ளதைப் பகுத்துப் பிறரோடு உண்ணுதல் தான் தலையானது என எடுத்துப் பேசுவார் வள்ளுவர்.

பகுத்துண்டு பல்லுயிர் ஓம்புதல் நூலோர்
தொகுத்தவற்றுள் எல்லாம் தலை. (குறள் 322)

இது கொல்லாமை என்னும் அதிகாரத்தில் கூறப்படும் அறம், இங்கே பகுத்துண்ணல், அறம் காரணமாக அமையவேண்டும் என்பது பெறப்படுகிறது. உழைப்பதும் ஊதியம் தேடுவதும், தான் உண்பதற்கும் உடுப்பதற்கும் உறைவதற்கும் என்றுதான் இன்றைய பொருளியல் பேசுகிறது; உலகமும் கருதுகிறது. வள்ளுவர் இக்கருத்தில் ஓரடிப்படை மாற்றம் செய்கிருர். அவர் இங்குத் **தான்** என்னும் கருத்துக்கு மாற்ருகத் **தக்கபிறர்** என்னும் கருத்தை அமைக்கிருர். இச்சிறு மாற்றம் பொருளியலிலும் பொதுவாழ்விலும் பெருமாற்றம் செய்யும் எனலாம்:

தாளாற்றித் தந்த பொருளெல்லாம் தக்கார்க்கு
வேளாண்மை செய்தற் பொருட்டு. (குறள் 212)

வள்ளுவர் வழங்கல் பற்றிச் சொல்ல வந்த கருத்துக்களையெல்லாம் தேக்கிவைத்தது போன்று இக்குறள் விளங்குகிறது.

**பாத்தூணுக்கு உரியார்**

இக்குறள் தக்கார்க்கு வேளாண்மை செய்தலைக் குறிப்-பிடுகிறது. யார் யார் ஈகைக்கு உரியார் என்பதும் கருதத் தக்க ஒரு கருத்து. மேடு பள்ளங்களில் பள்ளத்துள் அழுந்தியோரே பரிவுக்கும் பாத்தூணுக்கும் உரியவர். 'தக்கார்க்குச் செய்தலை' ஒப்புரவறிதல் என்னும் அதிகாரத்தின் ஒரு குறள் குறிப்பிடுகிறது.

ஆனால் தக்கார் இன்னார் என்பதற்கான விளக்கம் அவ்வதிகாரத்தின் யாதோரிடத்திலும் காணக் கிடைக்கவில்லை. தக்கார் வறியராகவும் இருக்கலாம். ஈகை என்னும் அதிகாரத்தின் முதற்குறள்,

வறியார்க்குஒன்று ஈவதே ஈகை; மற்றெல்லாம்
குறியெதிர்ப்பை நீர துடைத்து. (குறள் 221)

என வரையறை செய்கிறது. 'அற்றார்க்கு ஒன்று ஆற்றுதல்' பற்றி 'நன்றியில் செல்வம்' பேசுகிறது. தக்கார் சுற்றத்தாராகவும் இருக்கலாம்.

காக்கை கரவா கரைந்துண்ணும் ஆக்கமும்
அன்ன நீரார்க்கே உள. (குறள் 527)

இக்குறள் அரசியலில் **சுற்றந்தழால்** என்னும் அதிகாரத்தில் (53) சுற்றந்தழுவி உண்ணுதலின் தேவையை வற்புறுத்துகிறது. செல்வம் பெற்றதன் பயனே சுற்றத்தார்க்கு வழங்குதலுக்குத்தான் என்கிறது இவ்வதிகாரத்தின் மற்றொரு குறள் :

சுற்றத்தால் சுற்றப் படஒழுகல் செல்வம்தான்
பெற்றத்தான் பெற்ற பயன். (குறள் 524)

இரவு, இரவச்சம் என்னும் அதிகாரங்கள் நல்கூர்ந்தார்க்கு நல்குதலைப் பற்றிப் பேசுகின்றன. **விருந்தோம்பல்** என்னும் அதிகாரம் (9) விருந்தாகிய புதியர்க்கு **வேளாண்மை** செய்தலைப் பேசுகிறது :

இருந்துஓம்பி இல்வாழ்வது எல்லாம் விருந்துஓம்பி
வேளாண்மை செய்தற் பொருட்டு. (குறள் 81)

இவற்றால் ஈட்டிய பொருளெல்லாம் ஈதலுக்கே என்றும் ஈகைக்குரியார் விருந்து, வறியர், தக்கார், சுற்றம் முதலானோர் என்றும் வள்ளுவரால் வற்புறுத்தப்படுகின்றன.

**ஈதல் எவ்வாறு** செய்வது? ஈதலுக்கு எல்லை இல்லை. வரையறையின்றி ஈதல், இல்லை என்னாது ஈதல், மாரியன்ன வண்கை என்றெல்லாம் இலக்கியங்களில் பேசப்படுவன. வள்ளுவர்க்கும் பொருந்தும் :

கைமாறு வேண்டா கடப்பாடு; மாரிமாட்டு
என்ஆற்றும் கொல்லோ உலகு? (குறள் 211)

மூன்று அழகிய குறள்களில் பகுத்துண்ணலுக்குக் கட்டுப்பாடு எத்திறத்திலும் இல்லை என்பதை வள்ளுவர் வற்புறுத்துகிறார்:

ஊருணி நீர்நிறைந் தற்றே உலகுஅவாம்
பேரறி வாளன் திரு. (குறள் 215)

பயன்மரம் உள்ளூர்ப் பழுத்தற்றால் செல்வம்
நயனுடை யான்கண் படின். (குறள் 216)

மருந்தாகித் தப்பா மரத்தற்றால் செல்வம்
பெருந்தகை யான்கண் படின். (குறள் 217)

பொருளைப் போற்றி வைத்தலுக்கு இடம் புதை குழியோ, குதிரோ, இரும்புப் பேழையோ அல்ல; அற்றாரின் அழிபசியைத் தீர்த்தல் தான் என்கிறது ஒரு குறள்:

அற்றார் அழிபசி தீர்த்தல் அஃதுஒருவன்
பெற்றான் பொருள்வைப் புழி. (குறள் 226)

பகுத்துண்ணலைப் பொருள்வாழ்வின் ஒரு கூறாகவே வகுத்துரைக்கும் திருவள்ளுவர் பகுத்துண்ணலால் வரும் நன்மையையும் பகுத்துண்ணாமையால் வரும் தீமையையும் எண்ணிப் பார்க்கிறார். பகுத்துண்ணலை வானளாவப் போற்றிப் பகுத்துண்போருக்கு வரம் தருகிறார். பகுத்துண்ணாமையைத் தூற்றிப் பகுத்துண்ணாதாரைச் சபிக்கிறார். பல குறள்களை இதற்கே செலவிடுகிறார் அவர்:

செல்விருந்து ஓம்பி வருவிருந்து பார்த்திருப்பான்
நல்விருந்து வானத் தவர்க்கு. (குறள் 86)

புத்தேள் உலகத்தும் ஈண்டும் பெறல்அரிதே
ஒப்புரவின் நல்ல பிற. (குறள் 213)

ஒத்தது அறிவான் உயிர்வாழ்வான் மற்றையான்
செத்தாருள் வைக்கப் படும். (குறள் 214)

சாதலின் இன்னாதது இல்லை; இனிது அதூஉம்
ஈதல் இயையாக் கடை. (குறள் 230)

ஈட்டம் இவறி இசைவேண்டா ஆடவர்
தோற்றம் நிலக்குப் பொறை. (குறள் 1003)

பகுத்துண்ணுதவனுடைய செல்வம், உடையவனாலும் உண்ணப்பயன்படாது; கள்வர் முதலாம் பிறரும் அதனைக் கொள்வர்: அது உலகுக்கும் கேடு:

*கொடுப்பதூஉம் துய்ப்பதூஉம் இல்லார்க்கு அடுக்கிய*
*கோடி உண்டாயினும் இல்.* (குறள் 1005)

*அற்ருர்க்கு ஒன்றுஆற்ருதான் செல்வம் மிக நலம்*
*பெற்ருள் தமியள் மூத்தற்று.* [குறள் 1007]

*பரிந்துஓம்பிப் பற்றற்றேம் என்பர் விருந்துஓம்பி*
*வேள்வி தலைப்படா தார்.* [குறள் 88]

*ஈத்துஉவக்கும் இன்பம் அறியார்கொல்? தாமுடைமை*
*வைத்துஇழக்கும் வன்க ணவர்.* [குறள் 218]

*நச்சப் படாவதன் செல்வம் நடுவூருள்*
*நச்சு மரம்பழுத் தற்று.* [குறள் 1007]

## இல்வாழ்வான் கடமைகள்

சமூகத்தில் அனைவரும் பகுத்துண்ணலை மேற்கொள்ள வேண்டும் என்பதே வள்ளுவர் கருத்து. அரசனே பெருஞ்செல்வன்; நாட்டின் தலைவன். அவனும் பகுத்துண்ணலைப் போற்ற வேண்டும் என விதிக்கிருர் வள்ளுவர். (இது பின்னர் விளக்கப்படும்). சமூகத்தில் ஒவ்வொரு படியினரது கடமையையும் வள்ளுவர் விளக்குகிருர். இல்லறத்தார் கடமைக்குள் பகுத்துண்ணலையும் ஒன்ருக அமைக்கிருர் அவர். துறவியர், வறியர் போன்ற பிறரைப் பேணுதல் அவ்வில்லறத்தார் பொறுப்பு:

*இல்வாழ்வான் என்பான் இயல்புடைய மூவர்க்கும்*
*நல்லாற்றின் நின்ற துணை.* [குறள் 41]

*துறந்தார்க்கும் துவ்வா தவர்க்கும் இறந்தார்க்கும்*
*இல்வாழ்வான் என்பான் துணை.* [குறள் 42]

*தென்புலத்தார் தெய்வம் விருந்து ஒக்கல்தான் எனருங்கு*
*ஐம்புலத்து ஆறு ஓம்பல் தலை.* [குறள் 43]

*பழி அஞ்சிப் பாத்தூண் உடைத்தாயின் வாழ்க்கை*
*வழிஎஞ்சல் எஞ்ஞான்றும் இல்.* [குறள் 44]

இல்வாழ்வான் என்பான், **இயல்புடைய மூவர், துறந்தார், துவ்வாதார், விருந்து, ஒக்கல்** என்பாரிடையே பகுத்துண்ணல் வேண்டும் என்பது இவற்ருல் தெளிவாகிறது. இயல்புடைய

மூவராவார் பிரம்சாரி, வானப்பிரத்தன், சந்நியாசி என உரையாசிரியர்கள் கொள்ளுகின்றனர். மேலே கண்ட கருத்துக்களுக்கு இவை ஒத்து வருகின்றமை குறிக்கத்தக்கது. தக்கார் என ஒப்புரவறிதலில் கூறப்படுவோரே இயல்புடைய மூவராக இருக்கலாமோ என்ற எண்ணமும் எழுகிறது. தென்புலத்தார், தெய்வம், இறந்தார் என்பார்க்கு வழங்குதல் இல்வாழ்வான் நடத்தும் சமயச் சடங்குகள் போலும். ஒப்புரவு, ஈகை, விருந்தோம்பல் ஆகியவை அறவுரைகளும் அறிவுரைகளும் ஆகும். இங்கு இல்வாழ்வானுக்குக் கூறப்படுபவை கடமைகள் ஆகும்; கடமைகள் கட்டாயம் செய்து தீரவேண்டியவை. காந்தியடிகள் நம்பிக்கைப்பொறுப்பாண்மையை மக்களுக்குக் கடமையாக்கவே கருதினர். அதற்குச் சட்டத்தின் துணையையும் நாடலாம் என்றூர் இவர்.[10]

வள்ளுவர் வகுத்த அறிவுரைகளும் கடமைகளும் நடைமுறையில் இயங்குமானல் இன்றுள்ள இன்னல்கள் இல்லையாகும் என நம்பலாம். வள்ளுவர் கண்ட இல்வாழ்வில் வன்முறை இல்லை என்பது குறிப்பிடத்தக்கது. கடமையுணர்ச்சி மட்டுமே உண்டு. எல்லாம் அறவுணர்வால் அன்பாடும் அருளோடும் நடைபெற வேண்டியவை.

இந்தியப் பண்பாடு ஈகையில் எல்லை கடந்து சென்றுள்ளது என உலக அறிஞர்கள் கருதுகின்றனர். தமிழகத்தைப் பொறுத்த வரை வள்ளுவர் இதற்குப் பெரும்பொறுப்பு ஏற்கிருர் எனலாம். ஈகை தொல்பழங்காலத் தொட்டே தமிழர் வாழ்வோடு இயைந்தது. பண்டை இலக்கியங்கள் இதனை அங்கை நெல்லி எனத் தெளிவுபடுத்துகின்றன.

---

10. '(Trusteeship) It does not exclude legislative regulation of the ownership and use of wealth. Thus, under stateregulated trusteeship, an individual will not be free to hold or use his wealth for selfish satisfaction or in disregard of the intetrest of society' (Found in the draft on Trusteeship approved by Gandhiji)-p. 179, RGE.

செல்வத்துப் பயனே ஈதல்;
துய்ப்பேம் எனினே தப்புந பலவே [புறம் 139:7-8]

கேளிர்கள் நெஞ்சு அழுங்கக்கொழுவுற்ற செல்வங்கள்
தான்இலான் குடியேபோல் தமியயே தேயுமால்.
[கலி 149:8,9]
ஆர்வுற்று

இரந்தோர்க்கு ஈயாது ஈட்டியோன் பொருள்போல்
பரந்து வெளிப்படா தாகி வருந்துக. [அகம் 266: 12-15]

பழந்தமிழ்த் தொகைநூல்களில் இவை சில துளிகள். இப்பண்பாட்டின் தொடர்ச்சியே வள்ளுவம் என எளிதில் உணரலாம். இக்கருத்துக்களை அறம் 'பொருள் இன்பமுறைக்கும் முப்பாலின் பகுதியாக்கி நல்லுருவம் கொடுத்த சிறப்பு வள்ளுவர்க்கு உண்டு.

## 2. 17. இன்மையும் இரவும் ஈகையும்

இரப்போர் செய்யும் இரவு இருந்தால்தான் ஈகலார் செய்யும் ஈகையும் இருக்கும். ஈகையை எல்லையில்லாது வற்புறுத்துகின்ற காரணத்தால் வள்ளுவர் இரவையும் உடன்படுகிறார் என்று சொல்வதற்கு இல்லை. இரவையும் அதற்குக் காரணமாக ஏழ்மையையும் அவர் ஒன்றுசேரக் கடிந்துரைக்கிறார். இங்கு அவர் கடிந்துரைத்தலில் எல்லை இல்லை. அவர் வறுமையின்மீது கொண்ட வரையறையற்ற வெறுப்புக் காரணமாகத்தான் அதற்கு மாற்றாக ஈகையை வற்புறுத்துகிறார். 'அன்போடியைந்த வழக்கு என்ப ஆருயிர்க்கு என்போடியைந்த தொடர்பு' (குறள் 73) என உலகில் உயிர்வாழ்வே அன்பின் அடிப்படையில் அமைந்தது எனக் கருதும் வள்ளுவர் காண விழையும் உலகில் இல்லாமைக்கும் இரவுக்கும் இடம் எவ்வாறு இருக்கும்? கடவுள் வாழ்த்துப் பாடிய வள்ளுவர் இல்லாமை காரணமாக இறைவனுடன் பூசலிடுகிறார். வறுமையின் கொடுமைதனை வெளிப்படுத்த அவர் **நல்குரவு** என ஓரதிகாரமே (105) அமைத்துத் தந்துள்ளார்.

இன்மையின் இன்னாது யாதெனின் இன்மையின்
இன்மையே இன்னா தது. [குறள் 1041]

ஏழ்மை என்பது எல்லையற்ற கொடுமை எனப் பழிக்கிறது இக்குறள். இதற்கு அவர் தரும் மறு பெயர்: **இன்மை என ஒரு பாவி** (குறள் 1042). அன்பிற்கு எல்லையாக விளங்கும் அன்னையும்

வறியவனை வெறுப்பாள் என்கிறார் வள்ளுவர் (குறள் **1047**). 'வறுமையை எல்லோரும் வெறுக்க வேண்டும்; அதனை ஒழிப்பதற்கு அது ஒரு வழி' என்கின்றார் பெர்னார்ட்ஷா என்ற சிந்தனையாளர். வள்ளுவர் நோக்கமும் அதுவே. வறுமையை வெறுத்த கடுமொழிகளாலேயே இரவையும் அவர் இகழ்கிறார்; இதன் பொருட்டே **இரவச்சம்** என்னும் அதிகாரம் (107) இயற்றியுள்ளார்.

*கரவாது உவந்துஈயும் கண்அன்னார் கண்ணும்*
*இரவாமை கோடி உறும்.* (குறள் 1061)

*ஆவிற்கு நீர்என்று இரப்பினும் நாவிற்கு*
*இரவின் இளிவந்தது இல்.* (குறள் 1066)

சமூகத்தில் இரவும் உள்ளமையால் உலகை இயற்றியவனோடும் அவர் போரிடுகிறார்.

*இரந்தும் உயிர்வாழ்தல் வேண்டின் பரந்து*
*கெடுக உலகியற்றி யான்.* (குறள் 1062)

இதனைப் புரட்சியின் எல்லை என்றே கொள்ளலாம்.

ஆனால் வறியவர்க்கு வழிதான் என்ன? வறுமைக்கு வழி இரவு அல்ல என்பதை மட்டும் வள்ளுவர் வற்புறுத்திக் கூறிவிடுகிறார்.

*இன்மை இடும்பை இரந்துதீர் வாம்என்னும்*
*வன்மையின் வன்பாட்டது இல்.* (குறள் 1063)

இரவால் உண்மையின் பயனும் கிடைக்காதாம். 'இரவு என்னும் ஏமாப்புஇல் தோணி' என அதன் பயனின்மையையும் சுட்டிக் காட்டுகிறார் அவர்:

*இரவுஎன்னும் ஏமாப்புஇல் தோணி கரவுஎன்னும்*
*பார்தாக்கப் பக்கு விடும்.* (குறள் 1068)

வறுமைக்கு வள்ளுவர் கூறும் வழி உழைப்புத்தான். உழைப்பால் உண்பதே இனியது என அதைப் போற்றிப் புகழவும் செய்கிறார் அவர்:

*தெண்ணீர் அடுபுற்கை யாயினும் தாள்தந்தது*
*உண்ணலி னூங்குஇனியது இல்.* (குறள் 1065)

உழைத்துப் பெற்றது கூழேயாயினும் குடி என வள்ளுவர் இங்கு வற்புறுத்துவது தெரிகிறது. **தால்ஸ்தாய்** என்ற அறிஞரும்

**காந்தியடிகளும்** எல்லோரும் உடலுழைப்பு மேற்கொள்ள வேண்டும்; உணவுக்கு உழைப்பு வேண்டும் என வற்புறுத்துகின்றனர். இவ்வுழைப்பை அவர்கள் bread labour எனப் போற்றுகின்றனர். வள்ளுவர் கருத்தின் எதிரொலி போன்று இவர்கள் கூற்று அமைந்திருக்கிறது. 'தகுதியுள்ளோரெல்லாம் உழைத்தல் வேண்டும்; தகுதி இழந்தோரை ஈகையாளர் பகுத்துண்டு தாங்குவர்'. இதுவே வள்ளுவர் கண்ட பொருள்வாழ்வின் அடித்தளம்.

இங்கே மூன்று பொருள்களைக் காணுகின்றோம்: வறுமை, இரவச்சம், ஈகை. இரவச்சத்துள் உழைப்பு அடங்குகிறது. இக்காரணங்கள் பற்றித்தான் வள்ளுவர் பொருட்பாலில் நல்குரவு, இரவு, இரவச்சம் என்னும் மூன்று அதிகாரங்களை அடுத்தடுத்து வைத்துள்ளார். இரவு என்னும் அதிகாரத்தில் அன்பின் அடிப்படையில் அவர் ஈகையையே வற்புறுத்துகிறார். ஈரம் தோன்ற இரவு தேவை என்பது அவர் கருத்து:

*இரப்பாரை இல்லாயின் ஈர்ங்கண்மா ஞாலம்*
*மரப்பாவை சென்றுவந் தற்று.* (குறள் 1058)

சுருக்கமாகச் சொன்னால் புறநானூற்றுச் சான்றோர் **கழைதின் யானையார்** தரும் பொன்மொழிதான் வள்ளுவர் தரும் பொருள் மொழியுமாகும்:

*ஈஎன இரத்தல் இழிந்தன்று; அதன்எதிர்*
*ஈயேன் என்றல் அதனினும் இழிந்தன்று;*
*கொள்எனக் கொடுத்தல் உயர்ந்தன்று; அதன்எதிர்*
*கொள்ளேன் என்றல் அதனினும் உயர்ந்தன்று.*
(புறம் 204 : 1-4)

## 2. 18. வள்ளுவத்தின் சிறப்பியல்பு

இன்று மக்களது பொருள்வாழ்வில் தோன்றிய இன்னல்களுக்கும் துயரங்களுக்கும் மாற்றாகச் சான்றோர்களும் அறிஞர்களும் தந்த கருத்துக்கள் இதுவரை விளக்கப்பட்டன. இறுதியில் வள்ளுவர் காட்டிய வழியும் விளக்கப்பட்டது. முன்னை அறிஞர்களுக்கும் வள்ளுவர்க்கும் இடையே ஒருபெருவேறுபாடுண்டு. இவ்வின்னல்களும் துயரங்களும் இரண்டு மூன்று நூற்றாண்டுகளாக வளர்ந்த பொருளியலாலும் முதலாண்மையாலும் விளைந்தவையே. இவற்றின் சமூகம் பெருவளர்ச்சி பெற்றுப் பெருஞ்சிக்கலுடையதாகி

இயங்கி வருகிறது. இச்சமூகத்தின் துன்பங்களுக்கே அவ்வறிஞர்கள் விடை கூறினர். முதலாட்சிச் சமூகத்திலிருந்து சமவுடைமைச் சமூகம் மலர வேண்டும் என்றனர் ஒரு சாரார். சர்வோதயச்சமூகம் மலர வேண்டும் என்றார் காந்தியடிகள். அவரும் தனியுடைமை, சமவுடைமை, பொதுவுடைமை ஆகியவற்றுக்கு மாற்றாக, அவற்றின் மீது வெறுப்புக்கொண்டுதான் சர்வோதயத்தை வகுத்தார்.[11] ஆகவே இவ்வெல்லாச்சிந்தனைகளுமே முதலாண்மையால் தோற்றம் பெற்றவையே. ஆனால் வள்ளுவர் சிந்தனை அத்தகையதல்ல. அன்று இன்றைய பொருளியலும் இல்லை; முதலாண்மையும் இல்லை. ஆனாலும் காந்தியடிகள் கண்ட சர்வோதயம் போன்று வள்ளுவர் வழி விளங்குகிறது. இதன் சிறப்புக் குறிக்கத்தக்கது.

மேலும் இன்றைய சமூகத்தில் பொருள்வாழ்வின் மேடு பள்ளங்கள் மிக உயர்ந்து ஆழ்ந்துள்ளன. ஆனால் இவ்வளவு பெரு வேறுபாடுகள் வள்ளுவர் காலத்துச் சமூகத்தில் இருந்ததில்லை எனலாம். காரணம் அன்று பெருந் தொழில்கள் தோன்றவில்லை. இருந்தும் வள்ளுவர் பகுத்துண்ணலை வற்புறுத்திப் பன்னிப்பன்னிப் பேசுகிறார். வள்ளுவர் உள்ளந்தான் என்ன ?

இன்றைய அறிஞர்கள் முதலாண்மைச் சமூகம் தோற்றுவித்த வறுமைப் பிணிக்கு மட்டுமே மாற்று மருந்து காண விழைந்தனர். தொழிலாளர் துயரங்களும் வறுமையாளரின் வாட்டமும் மட்டுமே அவர்கள் கருத்தில் இடம் பெற்றன. ஆனால் வள்ளுவர் நிலை வேறு. வறுமை, மக்கட் பண்புகள், அறம், இன்பம், ஒழுக்கம் ஆகிய மக்கள் வாழ்வின் அனைத்து இயல்புகளும் வள்ளுவர் சிந்தனையில் இடம் பெற்றிருக்கின்றன. இது வள்ளுவர் சிந்தனையின் சிறப்பு.

வள்ளுவர் பகுத்துண்ணலை வற்புறுத்துவதற்குப் பல காரணங்கள் உண்டு. பகுத்துண்ணல் அறிவுடைமையாகும் (குறள் 215). விருந்தோம்பாமை மடமை (குறள் 89). ஒப்புரவு செய்தலே உலக இயல்பினை அறிந்து ஒழுகல் (குறள் 214). அதுவே நல்லது (குறள் 213). ஒப்புரவுதான் நயனுடைமை (குறள் 216); பெருந்தகைமை (குறள் 217); கடமை (குறள் 218); குலனுடைமை (குறள் 223).

---

11. See "Gandhian Concept of Socialism" in 'Relevauce of Gandhian Economics' by Shriman Narayan.

பொருள் நிலையில்லாதது. அதனை வைத்து எல்லாம் ஆகும் என்று எண்ணித் தானே துய்ப்பது ஒரு மயக்கம். ஆகவே ஈதல் வேண்டும் (குறள் 1002).

பொருளெல்லாம் விளை பொருள்கள்; விரைவில் அழிபவை; ஆகவே அதனைப்பிறர்க்கு ஈந்து பின்னர் அவர்கள் உதவி பெறலாம். இதுவே பொருள் போற்றும் நெறி (குறள் 226). இத்தகைய பொருளை ஈயாது போனால் அதனை இழக்கும் வன்கண்மைக்கு ஆளாக நேரும் (குறள் 228).

ஈத்துவக்கும் இன்பம் உண்டு (குறள் 228). ஈதலால் ஒருவனுக்குப் புகழ் சேரும் (குறள் 1003) இரத்தலும் ஈதலும் அழகும் ஆகும் (குறள் 1053). ஈதல்தான் மக்கள் உயிர்க்கே அறிகுறி (குறள் 1058). ஆகவே ஈயாமை குற்றம் (குறள் 1006).

இவ்வளவுக்கும் மேல் பகுத்துண்ணும் ஈகை உலகின் வறுமையைப் போக்குகிறது (குறள் 221).

இக்கருத்துக்கள் எல்லாம் மேலே எடுத்துக்காட்டப்பட்ட குறள்கள் தரும் குறிப்புக்கள். இவற்றிலிருந்து, வள்ளுவர் மருந்-தாகத் தரும் பகுத்துண்ணலுக்கு அடிப்படை, மக்கட்பண்புகள் அறம் வறுமைபோக்கல் என்பவையே என்பதும் வள்ளுவர் கண்ட பொருள்வாழ்வும் இவற்றின் அடிப்படையிலேயே அமைந்தது என்பதும் தெளிவு படுகின்றன. இவ்வியல் முழுதும் விளக்கப்பட்ட கருத்து இதுவே யாகும்.

## இயல் 3

# அரசும் பொருளும்

### 3. 1. இன்றைப் பொதுநிதியியல்

மனிதன் தானும் தன் குடும்பமுமாக வாழ்கின்றான்; இது ஒரு நிலை. தான் புறவுலகிற் சென்று பொருள் ஈட்டித் தன் தேவைகளையும் தன் குடும்பத்தின் தேவைகளையும் நிறைவேற்றிக் கொள்ளுகின்றான்; இது மற்றொரு நிலை; இவ்விரண்டாம் நிலையே அவன் பொருள்வாழ்வு எனப்படுகிறது; அவனும் அவன் குடும்பமும் அரசுடன் கூடிய ஒரு நாட்டில் அந்நாட்டின் குடிமக்களாக வாழுகின்றனர்; இது பிறிதொரு நிலை. இம்மூன்றும் நிலையே அவன் அரசியல் வாழ்வு எனப்படுகிறது. இந்த அரசியலையுடைய அரசுக்கும் தனிமனிதனது பொருள்வாழ்வுபோன்றே ஒரு பொருள்வாழ்வும் உண்டு. அதன் தேவைகளை நிறைவேற்றுவதும் அதற்கான பொருளையும் பயன்பாட்டையும் (Utilities) ஈட்டுவதும் செலவு செய்வதும் பற்றியதே அரசின் பொருள்வாழ்வு. தனி மனிதனைப் போன்றே அரசும், வரவும் செலவும் பார்த்து முதலும் ஊதியமும் கணக்கிட்டு வாழ வேண்டும். அது மட்டுமல்லாது மக்கள் பொருள் வாழ்வினை அது நெறிப்படுத்தியும் செல்கிறது; அது அதன் கடமையுங்கூட ஆகும். தனிமனிதன் பொருள்வாழ்வுக்கும் அரசின் பொருள்வாழ்வுக்கும் நெருங்கிய உறவுண்டு. எல்லாம் முடிவில் மக்கள் வாழ்வாகவே முடிகின்றன; எல்லாம் மக்களுக்குத்தான் என்பதன்றி வேறில்லை. அரசு மக்களுக்கெல்லாம் பொது; அது நடத்தும் பொருள்வாழ்வும் எல்லாருக்கும் உரியதும் உறவுடையதும் ஆகும். ஆகவே அரசின் பொருள்வாழ்வு (Economics of Government) **பொது நிதியியல்** (Public Finance) எனவும் பெயர் பெறுகிறது.

கடந்த கால அரசுகளைப் போலல்லாமல் இன்றைய அரசுகள் தம் பொருள்வாழ்வையும் பெருக்கிக் கொண்டிருக்கின்றன; மக்களது பொருள்வாழ்விலும் பல்வகையிலும் தலையிடுகின்றன. ஒரு காலத்தில் சமூகத்தின் பொருள் வாழ்விலே அரசுகள் தலையிடுதல் கூடாது என அறிஞர்கள் வற்புறுத்தினர்; அரசுகளும் **தலையிடாக் கொள்கையை** (Laissez-faire) மேற்கொண்டு வந்தன. ஆனால் நாள் செல்லச் செல்ல அரசுகள் சமவுடைமை (Socialism)க் கொள்கைகளை மேற்கொண்டு தம் பொருள்வாழ்வினைப் பெருக்கிக் கொண்டன. இன்று நாடுகளே **பொருளியல் திட்டங்கள்** வகுத்துச் செயற்படுத்தும் பணிகளை மேற்கொண்டுள்ளன. போர்க்காலங்களில் நாடுகளின் பொருள்வாழ்வு சிக்கலுடையது ஆகிவிடுகின்றது. இக்காரணங்களால் ஓரரசு மக்களுக்கு ஆற்ற வேண்டிய கடமைகளும் பொறுப்புக்களும் பலவாகிவிட்டன. ஆகவே பொதுநிதியியல் வளர்ந்து தனித்துறையாகிச் சிறப்புறுகிறது. சுருங்கச் சொன்னால் ஓரரசின் வரவு செலவுகளையும் அவற்றிடையே அமைந்த உறவு-களையும் சொல்வது தான் பொதுநிதியியல்.[1] இன்றைய நூல்கள் பொதுநிதியியலை **வரவு** (Public Income or Revenue), **செலவு** (Public Expenditure), கடன் (Public Credit or Debt), **நிதியாட்சி** (Financial Management or Administration) என நான்காக வகுத்து ஆராய்கின்றன. அரசின் **வருவாய்த் துறைகள், வரிகள், வரிக்கொள்கைகள், அரசின் தலையீட்டு எல்லையும் இயல்பும், அரசின் நலப்பணிகள், செலவுகள், கடன்கள், ஆண்டு நிதி நிலையறிக்கைகள்** ஆகியவை பொதுநிதியியலில் பேசப்படுகின்றன.

இன்றைய அரசுகள் பெரும்பேரளவில் அரக்கத்தோற்றமும் அசுர வலிமையும் கொண்டு விளங்குகின்றன. இவ்வியல்புடைய அரசினை 'Leviathan' என அறிஞர்கள் கடிந்துரைக்கின்றனர்.[2] இவ்வரசுகளுக்கே மேல் விளக்கிய பொதுநிதியியல் பொருந்தும். **ஆனால் பண்டை அரசுகள் அளவிலும் ஆற்றலிலும் சிறியவை.**

---

1 'Public finance is concerned with 'income and expenditure of public authorities, and with the adjustment of the one to the other'.' — 'Principles of Public Finance' by H. Dalton.

2. **The Leviathan** (1651 A. D.) by Hobbes.

அவற்றின் பொருள்வாழ்வு எளியதாகவே இருந்திருக்க வேண்டும். இத்தகைய ஓரரசே வள்ளுவர் கண்ட அரசு.[3] அரசனே அங்கு அரசு எனலாம். வள்ளுவர் வகுத்த பொருட்பாலுக்குச் **சமுதாய வாழ்வு** எனவே பலர் பொருள் கொள்ளுகின்றனர். அந்தச் சமுதாய வாழ்வில் அடிப்படையாகவும் நடுவணதாகவும் விளங்குவது அரசியல். அரசின் பல்வேறு உறுப்புக்களாகிய 'படை குடி கூழ் அமைச்சு நட்பு அரண்' ஆகியவற்றை விளக்குகிறது பொருட்பால். அரசு நடத்தலுக்குச் செல்வம் இன்றியமையாது வேண்டப்படும். ஆகவே இதுவும் அரசுறுப்புக்களுள் ஒன்று.

## 3. 2. செல்வத்தின் சிறப்பும் தேவையும்

திருவள்ளுவர் கண்ட அரசியலில் பொருள் இன்றியமையாதது. அரசனுடைய பெரும்பணியும் தலையான பணியும் நாடு காவல். நாடு காவலுக்குப் படையும் அரணும் தேவை. இவற்றுக்கு ஏராளமான செல்வம் வேண்டும். அரசன் 'கொடை அளி செங்கோல்' உடையவனாகிக் 'குடிதழீஇக் கோலோச்ச' வேணடும். இதற்கும் பொருள் தேவை. நாட்டில் 'வாரி பெருக்கி வளம் படுக்க' வேண்டும். இதற்கும் பொருள் தேவை. அரசன் அரண்மனை வாழ்க்கைக்கும் இன்ப வாழ்வுக்கும் பெரும்பொருள் செலவிட்டுக் கொள்ளுகிறான். இச்செலவினங்களால் அரசனுக்கு வருவாய், வருகை தந்து கொண்டிருக்க வேண்டும். ஆகவே தான் வள்ளுவர் அரசை வகுத்துரைக்கும் தோற்றுவாயில்

> படைகுடி கூழ்அமைச்சு நட்புஅரண் ஆறும்
> உடையான் அரசருள் ஏறு. (குறள் 381)

எனக் கூழையும் ஒருறுப்பாகக் கணக்கிடுகிறார். **கூழ்** என்பது செல்வத்தைக் குறிக்கும்.

இக்கூழாகிய செல்வத்தின் சிறப்பினை எடுத்துக் காட்ட வள்ளுவர் **பொருள் செயல் வகை** என ஓர் அதிகாரம் (76) இயற்றியுள்ளார். இது 'பொருளைச் செய்தலின் திறம்' கூறுவதாக அவ்வதிகாரத்தின் முன்னுரையில் பரிமேலழகர் குறிப்பிடுகிறார். இன்ன பொருளை, இன்ன இன்ன வழிகளில் ஈட்டலாம் எனப் பொருளியல்

---

3. 'Compared with modern times, the Sangam economy was simple and in fact mostly self-sufficing.'-P. 219, SP.

நோக்கத்தில் ஒரு கருத்தையும் இவ்வதிகாரம் பேசவில்லை. பொருளின் பெருமையையும் அதன் பயனையும் அதனை ஈட்டுதலில் அறநெறி சார்ந்திருக்க வேண்டும் என்பதையும்தான் இவ்வதிகாரம் பேசுகிறது. ஆகவே இவ்வதிகாரத்துக்குப் 'பொருளானது செய்யும் திறங்கள்' எனப் பொருள் கொள்வது பொருத்தம் போலும். பரிமேலழகரே, 'பொருளது சிறப்பு', 'அஃது ஈட்டும் நெறி', 'அதனான் வரும் பயன்' கூறப்பட்டன எனக் குறள்களிடையே குறிப்பிடல் கருதத் தக்கது.

ஏதொன்றுக்கும் தகுதியற்றவர்கள் எனப்படுவோரையும் - மதிப்பற்றவரையும் - மதிக்கத் தக்கவராகச் செய்வது பொருள்தான். வேறு எதனாலும் அம்மதிப்பு மக்கட்குக் கிடைக்காது எனச் சொல்லழகு பட வள்ளுவர் கட்டுரைக்கின்றார்:

பொருள்அல் லவரைப் பொருள்ஆகச் செய்யும்
பொருள்அல்லது இல்லை பொருள். (குறள் 751)

பொருளுடையவர்களையே உலகம் போற்றும்; அற்றவரை அது தூற்றும்; 'செல்வர்க்கே சிறப்புச் செய்யும்; நல்கூர்ந்தார்க்குச் சுற்றமும் இல்லை,' என்பதுதான் உலகநடை. இதனை உணர்த்துகிறார் வள்ளுவர்:

இல்லாரை எல்லாரும் எள்ளுவர்; செல்வரை
எல்லாரும் செய்வர் சிறப்பு. (குறள் 752)

பொருள், விளக்குப் போன்றது. விளக்கு, ஒளி தந்து இருளை ஓட்டுவது போன்று பொருள், வறுமையையும் வாட்டத்தையும் ஓட்டும்; இடையூறுகளை இடறும். இவ்வகையில் செல்வத்தின் ஆற்றல் தப்பாது. மன்னர் கையில் பொருள் இருக்குமானால் அது மாற்றாரிடை நட்பினை வளர்க்கும்; பகையை அறுக்கும். மாற்றாரின் மாற்றாருக்குத் துணை போதலுக்கோ மாற்றார் நாட்டில் கீழறுத்தலுக்கோ பொருள்தான் வேண்டும். ஆகவே மன்னர் செல்வம் கண்டு மாற்றார் செருக்குச் சிதையும். இவ்வாறு அறிவுறுத்துகிறார் திருவள்ளுவர்:

பொருள்என்னும் பொய்யா விளக்கம் இருள்அறுக்கும்
எண்ணிய தேயத்துச் சென்று. (குறள் 753)

செய்க பொருளைச் செறுநர் செருக்கறுக்கும்
எஃகுஅதனின் கூரியது இல். (குறள் 759)

அரசன் ஒரு வினையைத் தொடங்கியபோது தனக்கும் துன்பமில்லாது தொடங்கப்பட்ட வினைக்கும் இடையறவு இல்லாது

அது இனிது முடிய வேண்டுமானால் அவன் தன் கை நிறையப் பொருளைத் தொகுத்து வைத்துக் கொண்டு அதனைத் தொடங்க வேண்டும். கொலை வினை மிக்க யானைப் போரைக் குன்றேறி நின்று காண்பது போன்று அது தொல்லையின்றி இனிது முடியும். இது வள்ளுவர் அறிவுரை:

குன்றேறி யானைப்போர் கண்டற்றால் தன்கைத்துஒன்று
உண்டாகச் செய்வான் வினை. (குறள் 758)

'பொருளில்லார்க்கு இவ்வுலகம் இல்' என்று பொதுவாக வள்ளுவர் குறிப்பிட்டது மன்னர்க்கே முற்றிலும் பொருந்தும். பொருளில்லா அரசர்க்கு அவர் நாடு இல்லையாகி விடும் என்றே இதற்குப் பொருள் சொல்லிவிடலாம்.

## 3 3. வள்ளுவர் காட்டும் பொதுநிதியியல்

இத்தகைய செல்வத்தை அன்றைய அரசு எவ்வெவ் வழிகளில் ஈட்டியது? எவ்வாறு காத்தது? எவ்வாறு போற்றியது? எவ்வாறு செலவிட்டது? என்பன போன்ற கேள்விகள் பொறுப்புள்ள அரசியலில் கேட்கப்பட வேண்டியவை. வள்ளுவரும் இவை பற்றிச் சிந்தனை செய்துள்ளார். இன்றைய பொருளியலறிஞர்கள் பொதுநிதியியலைப் பகுத்துக் காண்பதே போன்று வள்ளுவரும் பகுத்துக் கண்டிருக்கிறார். மன்னரின் மாட்சி கூறும் முதல் அதிகாரத்திலேயே (39) வள்ளுவர் திட்டம் வெளிப்படுகிறது:

**இயற்றலும் ஈட்டலும் காத்தலும்** காத்த
**வகுத்தலும்** வல்லது அரசு. (குறள் 385)

அரசாது பொருள்வாழ்வினைத் தொகுத்துச் சுட்டும் இந்தக் குறளுக்குப் பரிமேலழகர் தந்த பொருள் இது:

'தனக்குப் பொருள்கள் வரும் வழிகளை மேன்மேல் **உளவாக்கலும்,** அங்ஙனம் வந்தவற்றை ஒரு வழித் **தொகுத்தலும்** தொகுத்தவற்றைப் பிறர் கொள்ளாமல் **காத்தலும்** காத்தவற்றை அறம் பொருள் இன்பங்களின் பொருட்டு **விடுத்தலும்** வல்லவனே அரசன்'

---

4. நாமக்கல் கவிஞர் உரை. இயற்றல் என்பதற்கு அரசியற்றலுக்கு முதற்கடமையான நீதிபரிபாலனத்தை நடத்துதல்' எனப் பொருள் கூறுகிறது.

இந்தக் குறள் அரசனது பொருள்வாழ்வு பற்றிக் கூறுகிறது என்பதே பலர் கருத்து. பொதுப்படப் பேசுகிறது என்பாரும் உண்டு.[4] இன்றைய பொது நிதியியலில் கண்டவாறு

இயற்றல் — வருவாய் (Revenue)

ஈட்டல்<br>காத்தல் } — நிதியாட்சி (Financial Administration)

வகுத்தல் — செலவு (Expenditure)

என வள்ளுவர் திட்டத்தை இவ்வாறு காணலாம்.

இனி இவை ஒவ்வொன்று பற்றியும் வள்ளுவர் கூறும் கருத்துக்களை ஆராயலாம்.

## 3. 4. இயற்றல்: உரை வேறுபாடு

வேந்தனது பொருள்வாழ்வில் இயற்றலே முதலாவதும் முதன்மையாவதும் ஆகும். இயற்றியதையே காத்தல் கூடும்; இயற்றியதையே வகுத்தல் கூடும். அரசர்க்கு உரிய இயற்றலைக் கருதி உரையாசிரியர்களை நாடுகிறபோது அவர்கள் பல்வேறு உரைகளைத் தருகின்றனர். பொதுவாகத் **'தனக்குப் பொருள் வரும் வழிகளை மேன் மேல் உளவாக்கல்'** எனப் பரிமேலழகர் உரை வகுப்பது பெரும்பாலும் எல்லோருக்கும் பொருந்துகிறது. வழிகள் இன்ன இன்ன எனச் சுட்டுகின்றபோதுதான் அவர்கள் வேறுபடுகின்றனர். அவர்கள் பல்வேறு வழிகளைச் சுட்டிக்காட்டுகின்றனர். பரிமேலழகர் இந்தக் குறள் உரையில் மூன்று வழிகளைச் சுட்டி 'முதலாயின' என முடிக்கிறார். பின்னர் மற்றொரு குறளுரையில் மேலும் மூன்றைத் தந்து மூன் மூன்றோடு அவற்றை இணைக்கிறார். இவை மட்டுமல்லாது இன்றையறிஞர்கள் இயற்றலுக்குப் புதுப்புதுப் பொருள் தந்து பார்க்கின்றனர்.[5] இந்நிலையில் வள்ளுவர் உள்ளம் யாதோ எனக் கேள்வி பிறக்கிறது.

வள்ளுவரே இயற்றல் பற்றி - பொருள் வரும் வழிகள் பற்றி - என்ன கூறுகிறார் என ஆராய்ந்து பார்க்கலாம். ஆனால்

5. தெ. பொ. மீ. அவர்கள் Factors of production இயற்றலில் அடங்கும் எனக் கருதுகிறார். —'பொருள் நூற்கருத்துக்கள்' —'திருக்குறள் கனிகள்' காண்க.

இன்றைய பொருளியல் நூல்களைப் போல அரசுக்கு வேண்டிய வருவாய்கள் அனைத்தையும் தொகுத்துத் தரும் குறள் ஒன்றும் திருக்குறளில் காணப்படவில்லை. அவற்றை முறைப்படி தொகுத்துச் சுட்ட வேண்டும் என்ற எண்ணம் கூடத் திருவள்ளுவருக்கு இருப்பதாகத் தெரியவில்லை. இயற்றலைப்பற்றிக்கூட அவர் அரசின் பொருள் வாழ்வைப்பற்றி உரைக்க வேண்டும் என்ற திட்டத்தில் பேசியதாகவும் கொள்ள முடியவில்லை. அந்த எண்ணம் இருக்குமானால் 'பொருள் செயல் வகை' என்ற அதிகாரத்தில் இதனைக் கூறியிருக்கலாம். ஆனால் அரசனுடைய - இயல்புகளைக்கூட அல்ல - மாண்புகளைப் பேசி வருங்கால் அவன் வல்லமையை விளக்குகின்றபோதே இயற்றல் பற்றிக் குறிப்பிடுகின்றார்.

> இயற்றலும் ஈட்டலும் காத்தலும் காத்த
> வகுத்தலும் **வல்லது அரசு**

என்ற குறளின் நடையில் அரசின் வன்மைக்கே அழுத்தம் தரப்பட்டுள்ளதைக் காணலாம். 'இயற்றல் முதலிய தவறுமற் செய்தல் அரிதாகலின் வல்லது என்றார்' எனப் பரிமேலழகரும் இதனைச் சுட்டிக் காட்டுகிறார்.

அரசர் இயற்றும் வருவாய் வழிகள் பற்றிக் குறளில் குறிப்புக்கள் இல்லாமல் இல்லை. 'பொருள் செயல் வகை' என்னும் அதிகாரத்தில் இக்குறள் உள்ளது:

> உறுபொருளும் உல்கு பொருளும்தன் ஒன்னார்த்
> தெறுபொருளும் வேந்தன் பொருள். (குறள் 756)

இக்குறள் மூன்று வழிகளைச் சுட்டிக் காட்டுகிறது. இக்குறள் ஒன்றே அரசனுக்கு உரிய வருவாய் வழிகள் அனைத்தையும் தொகுத்துணர்க்கின்றது என அறிஞர் பலர் கருதுகின்றனர்;[6] அதுமட்டுமல்லாது

---

6. 'அரசுக்குப் பொருள் மூன்று வழிகளில் வரும் என்று வள்ளுவர் வகுக்கின்றார். அவை: உறுபொருள், உல்குபொருள், தெறுபொருள்'— டாக்டர் மா. நடராஜனார், வ த பொ., பக். 64.

'அரசனுக்கு உரிய உரிமைப் பொருளாக வள்ளுவர் மூன்றினைக் குறிப்பிடுகின்றார்....... வள்ளுவர், இந்த மூன்று வருவாய்களும் அரசுக்கு உரியன என்பதை. உறுபொருளும் உல்குபொருளும் ஒன்னார்த் தெறுபொருளும் வேந்தன் பொருள் என்று கூறுகிறார். பேர். அ. அருணசலம் வ வ பொ வா.., பக் 79 - 80.

தெ. பொ. மீ. அவர்களும் இவ்வாறே கருதுவதாகத் தெரிகிறது. திருக்குறள் கனிகள்' என்ற நூலில் 'பொருள் நூற்கருத்துக்கள்' என்னும் அவர் கட்டுரை காண்க. பக். 189—191.

இக்குறளின் 'உறுபொருள்' என்னும் தொடருக்குப் பல்வேறு உரைகளும் சொல்லுகின்றனர். இதனால் இக்கருத்துக்களின் வன்மை மென்மைகளையும் இக்குறளின் நோக்கத்தையும் ஆராயவேண்டி அரசின் வருவாய்களைத் தனித்தனியே சுட்டிச் சொல்வது நேர்கிறது. அரசின் வருவாய்களைத் தனித்தனியே சுட்டிச் சொல்வதுபோன்ற குறள் இது ஒன்றுதான். ஆகவே இதனை முழுமையாக நோக்க வேண்டியதும் தேவையாகிறது.

## 3. 5. 0. பண்டையரசு வருவாய்

உறுபொருளும் உல்குபொருளும் தெறுபொருளும் இன்னவை என அறிந்து இயற்றல் பற்றி வள்ளுவருடைய கருத்துக்களைத் தொகுத்துக் காண்பதற்கு அவர் காலத்து அரசுகளின் வருவாய் பற்றியும் கருத்துக்களை அறிய வேண்டும். வள்ளுவர் கருத்துக்களில் விளக்கம் வேண்டுகின்றபோது அவர் கால வரலாற்றின் துணையைத் தான் நாட வேண்டும். அதனை இனிக் காணலாம்.

அரசர் வருவாயைத் தொகுத்துக் கூறும் பொருள்நூல் ஒன்றும் அன்று தமிழில் இல்லை. திருக்குறளின் பொருட்பாலே இவ்வகையில் முதலாவதாகவும் தலையானதாகவும் உள்ளது. வருவாய் பற்றி இலக்கண இலக்கியங்களிடையே அங்கும் இங்குமாகக் கிடக்கும் கருத்துக்களைத் தொகுக்க வேண்டியிருக்கிறது.

## 3. 5. 1. நச்சினார்க்கினியர் தொகுத்துத் தந்தவை

இவர் பல்வேறு கலைகளை அறிந்த ஓரறிஞர். இவர் தொல்காப்பியத்துப் பொருளதிகாரப் புறத்திணையில் இருபதாம் நூற்பாவின் 'ஐவகை மரபின் அரசர் பக்கமும்' என்னும் தொடருக்கு உரையெழுதுகின்றபோது அரசர் வருவாய் வழிகளை முறையாகத் தொகுத்துரைக்கின்றார். "வகை என்றதனானே

1) களவு செய்தோர் கையிற் பொருள் கோடலும்
2) ஆறில் ஒன்று கோடலும்
3) சுங்கம் கோடலும்
4) அந்தணர்க்கு இறையிலி கொடுக்குங்கால் இத்துணைப் பொருள் நும்மிடத்து யான் கொள்வல் எனக் கூறிக் கொண்டு அது கோடலும்

5) மறம் பொருளாகப் பகைவர் நாடு கோடலும்

6) தமரும் அந்தணரும் இல்வழிப் பிறன் தாயம் கோடலும்

7) பொருள் இல்வழி வாணிகம் செய்து கோடலும்

8) அறத்தின் திரிந்தாரைத் தண்டத்தின் தகுமாறு பொருள் கோடலும் போல்வன கொள்க'

என எழுதுகிறார், நச்சினார்க்கினியர். கி. பி. 15 அல்லது 16-ஆம் நூற்றாண்டளவுக்குப் பிற்பட்டவர் இவர். இவர் கண்ட கருத்துக்கள் இவர் காலத்துக்கு ஏற்றகருத்துக்களாக இருக்கலாம்; முன்னை வழக்கத்தையும் சுட்டலாம்.

## 3. 5. 2. இன்னிலை தந்தவை

நச்சினார்க்கினியருக்கு முன்னர் இன்னிலை இத்தகைய ஒரு கருத்தை மொழிகிறது:

கால் கலத்தால் சேர்பொருளும் கண்ணற்றார் தேர்பொருளும்
நாலிரண்டால் கூடும் நலப்பொருளும் – கோல்தாங்கிக்
கோடும் அரசிற்கு உரியாமே தொல்புவிக்கீழ்
ஆடும் பொருளோடு அணைந்து. (இன்னிலை 17)

இப்பாடல் தொகுத்துச் சொல்லும் வருவாய்கள் :

1) கால் கலத்தால் சேர் பொருள் — சுங்கம்.

2) கண்ணற்றார் தேர் பொருள் — பகைவரது பொருள்.

3) நாலிரண்டால் (1/6) கூடும் நலப்பொருள் – 1/6 ஆகிய நிலவரி (இறை).

4) தொல்புவிக்கீழ் ஆடும் பொருள் — புதை பொருள். [6அ]

---

6அ. இவ்வின்னிலைப் பாடலுக்குத் திரு. சங்குப்புலவர் எழுதிய உரை வருமாறு:

வண்டியாலும் கப்பலாலும் வந்துசேர்கின்ற சுங்கப்பொருளும், அறிவில்லாதவர் தேடிய பொருளும், வருவாயில் ஆறில் ஒருபங்காகக் கொடுக்கும் நலமான பொருளும், பழைமையான புவிக்கீழ் அசைகின்ற பொருளாகிய புதையலுடன் சேர்ந்து, செங்கோல் தாங்கி நீதி தவறி நடக்கும் அரசுக்கு உரியனவாமோ? (உரியனவாகா; செங்கோலரசர்க்கே யுரியனவாம்.)

'கண்ணுற்றார்', 'அரசிற்குறியாமே' எனவும் பாடம் உண்டு: கண்ணற்றார் என்பதற்கு அறிவற்றார் (பைத்தியக்காரர்?) எனப் பொருள் சொல்லுவதைக் காட்டிலும் 'அன்பற்ற பகைவர்' எனப் பொருள் சொல்லுதல் பொருத்தமாகத் தெரிகிறது. 'கண்ணுறுதல்' என்பதற்குச் சென்னைப் பல்கலைக்கழகத் தமிழ்ப்பேரகராதி 'நட்புக்குலைதல்' எனப் பொருள் சொல்லிச் சிந்தாமணி அடி ஒன்றையும் சான்றுகாட்டுகிறது. இவ்வாறு கொள்ளாது போனால் அரசர்க்கு முக்கிய வருவாயாகிய திறைப் பொருள் இல்லையாகிவிடும்.

நச்சினார்க்கினியர் புதைபொருளைக் குறிப்பிடவில்லை. மற்ற மூன்றும் அவர் குறிப்பிட்டவை. இன்னிலையின் காலத்துக்கு மூந்தியது குறள். வள்ளுவர் காலத்தை அடுத்துத் தமிழகத்து அரசுகள் பெற்று வந்த வருவாயை இன்னிலைப் பாடல் ஓரளவு சுட்டுகிறது எனலாம்.

## 3. 5. 3. பரிமேலழகர் தொகுத்துத் தந்தவை

குறளுக்கு உரை வகுத்த ஆசிரியர்களுக்குள் **பரிமேலழகரே** கருத்துக்களை முழுமையாகவும் ஆழமாகவும் கூறிச் செல்லுகிறார். அவர் அரசின் வருவாய் பற்றி ஆங்காங்கே பல கருத்துக்களைக் கூறிச் செல்லுகிறார். அவர் கருத்துக்கள் அவர் காலத்தை ஒட்டினவாக இருக்கலாம். இருந்தாலும் வள்ளுவர் கருத்தை அறிய நல்ல முயற்சியே அவர் மேற்கொண்டுள்ளார். அவர் கருத்துக்களும் இங்குக் கருதத்தக்கன. அவர் 'இயற்றலும்' என்ற சொல்லுக்கு விளக்கம் தருகின்றபோது பொருள் "வரும் வழிகளாவன

1) பகைவரை அழித்தலும்

2) திறை கோடலும்

3) தன் நாடு தலையளித்தலும் முதலாயின"

என்கிறார். மேலும் அவரே 'வாரி பெருக்கி' (குறள் 512) என்னும் தொடரை விளக்குகின்றபோது "பொருள் வரு வாயில்களாவன மேல் இறை மாட்சியுள் இயற்றலும் என்புழி உரைத்தனவும்

4) உழவு

4) பசுக்காவல்

6) வாணிகம் என்னும் வார்த்தையுமாம்"

என மூன்றைக் கூட்டி எழுதுகிறார். இவை யல்லாமல் மேலும் சில வருவாய்கள் உண்டு. 'உறுபொருள்' என்னும் குறட்பகுதிக்கு

"7) உடையார் இன்மையின் தானே வந்துற்ற பொருளும்

8) வைத்தார் இறந்து போக நெடுங்காலம் நிலத்தின் கட் கிடந்து பின் கண்டெடுத்ததூஉம்

9) தாயத்தார் பெறுததூஉம் ஆம்"

என உரை விளக்கம் தருகிறார் அவர்; இவற்றோடு உல்கு பொருளைச்

" 10) சுங்கமாகிய பொருள்"

எனவும் சுட்டிக் காட்டுகிறார்; நிலவரியையும் வேறொரு குறள் (755) உரையில் நுழைத்துக் காட்டுகிறார். அருளொடும் அன்பொடும் "கூடி வருதலாவது

11) ஆறில் ஒன்றாய் வருதல்"

என்பது அவர் விளக்கம். இவ்வாறு தன் உரையில் அவர் ஆங்காங்கே பதினோராசுவருவாய்களைச் சுட்டிக் காட்டுகிறார். ஒரு சில தவிர மற்றவை குறள் மொழியில் இடம் பெற்றவை அல்ல. அவருடைய கருத்துக்கள் வள்ளுவர் கருத்துக்களாக இருக்க வேண்டிய கட்டாயம் இல்லை. அவரே புலமையால் கண்ட கருத்துக்களாக இருக்கலாம். வள்ளுவர் கால இலக்கியமே அவர் கருத்தை அறியத் துணை செய்யும். இனி அவற்றைக் காணலாம்.

## 3. 5. 4. இலக்கியம் தந்தவை

1) **கறை**. வள்ளுவர் காலத்தை ஒட்டி எழுந்ததாகக் கொள்ளத்தக்க **சிலப்பதிகாரம், கறை** என்னும் வருவாய் பற்றிப் பேசுகிறது.

**கறை**கெழு நாடு **கறை**வீடு செய்ம். (சிலம்பு 28 :204)

**கறைப்படு மாக்கள் கறை**வீடு செய்மின். (சிலம்பு 23 :127)

**மணிமேகலையும்** கறை பற்றிப் பேசுகிறது :

**கறை**யோர் இல்லாச் சிறையோர் கோட்டம்.
(மணி. 19 :161)

இங்கெல்லாம் 'கறை' என்றால் வரி என்றும் 'கறைப்படு மாக்கள்' என்றால் 'வரி செலுத்துவோர்' என்றும் பொருள். 'கறை' என்பது இன்னவரி, இன்ன அளவினது என்பது தெளிவாகவில்லை.

2) **இறை**. இது அரசருக்கு ஒரு வகை வருவாய். இதனைச் **சிலம்பும் புறமும்** குறிக்கின்றன :

*மாநீர் வேலி வச்சிர நன்னாட்டுக்*
*கோன்* **இறை** *கொடுத்த கொற்றப் பந்தரும்.* (சிலம்பு 5: 99-100)

இங்கே இறை என்பதற்குக் **கப்பப் பொருள்** என்றோ **பரிசுப் பொருள்** என்றோ பொருள் கொள்ள வேண்டிநேர்கிறது. (வச்சிர நாட்டுக்கோன் பகையும் நட்பு மில்லா அயலான் எனக் கருதுகிறார் உரையாசிரியர் ந. மு. வே. நாட்டார் )[7]

விருந்து **இறை** நல்கும் நாடன் எம்கோன்

(புறம் 374; 15)

மலைவாணர் பொருநர்க்கு நல்கும் விருந்து இங்கு இறை எனப் படுகிறது.

'இறை' என்னும் சொல் சங்க காலத்தில் மன்னர்க்குச் செலுத்தப்படும் வரியையும் கப்பத்தையும் குறித்தது. செலுத்துதல், வழங்குதல் என்னும் பொருளுடைய **இறு** என்னும் வினையடியாகப் பிறந்தது இச்சொல். ஆகவே தொடக்கத்தில் பொதுவாக அரசர்க்கு வழங்கப்படும் அனைத்தையும் இது குறித்திருக்கலாம். உல்குபொருள் கூட இறை என வழங்கப்படுகிறது. 'சுங்கம் கலத்தினும் காலினும் வரும் பண்டங்கட்கு இறையாயது' எனப் பரிமேலழகர் எழுதுவது இதனை வலியுறுத்துகிறது. இடைக்காலத்தில் வரியை (அதுவும் குறிப்பாக நிலவரியை) உணர்த்தும் சொல்லாக அது நிலை பெற்றிருக்கலாம். 'இறையிலி நிலம்' என்னும் தொடர் இதனைச் சுட்டுகிறது. ஆனால் எட்டுத்தொகை பத்துப்பாட்டுக்களில் 'நிலவரி' என்ற கருத்தில் இச்சொல் எங்கும் வழங்கப்படவில்லை.

3) **திறை.** பழங்காலத்திலேயே அரசர்க்கு உரிய வருவாய் வழியாகத் **திறை** என்பதும் இருந்தது. வென்ற வேந்தர்க்குத் தோற்ற மன்னர் செலுத்தும் தொகையே இது. இது பொன்னும் மணியுமாகவோ களிறும் பிறவுமாகவோ இருக்கலாம். அரசர்க்குப் பொருள் தேவைப்படும்போது மாற்றார் மீது படையெடுத்துச் சென்று அவர்களைத் தோற்கடித்துப் பொருள் கவர்தலும் திறை கொள்ளுதலும் உண்டு. சங்க இலக்கியங்களில் பல இடங்களில் இது பற்றிய குறிப்புக்கள் கிடைக்கின்றன.

நன்னகர் மரந்தை முற்றத்து ஒன்னார்
பணி**திறை** தந்த பாடுசால் நன்கலம்
பொன்செய் பாவை வயிரமொடு ஆம்பல்
ஒன்றுவாய் நிறையக் குவைஇ அன்றுஅவன்
நிலம்தினத் துறந்த நிதியத்து......

(அகம் 127:6-10)

---

7. ந. மு. வே. நாட்டார் உரை காண்க.

திருந்துஎழிற் பலபகடு
பகைப்பல மன்னர் பணிதிறை தந்துநின்
நகைப்புல வாணர் நல்குரவு அகற்றி
மிகப் பொலியர் தன் சேவடி.
(புறம் 387 : 11 - 14)

அளந்துகடை அறியா அருங்கலம் சுமந்து
வளந்தலை மயங்கிய வஞ்சி முற்றத்து
இறைமகன் செவ்வி யாங்கணும் பெறாது
திறை சுமந்து நிற்கும் தெவ்வர்......
(சிலம்பு 25 :36 - 39)

இதனால் பண்டைக்காலத்தில் மன்னர் பெற்ற திறைப் பொருள்களின் அளவும் பயனும் புலப்படும். அடங்கிய அரசர்கள் வென்ற வேந்தர்க்கு முறைப்படி குறிப்பிட்ட காலத்தில் குறிப்பிட்ட வாறு திறை செலுத்தி வந்திருக்கின்றனர். இதனைச் **சிலம்பு** புலப் படுத்துகிறது.

ஞாலம் காவலர் **நாள்திறை பயிரும்**
**காலை முரசம்** கடைமுகத்து எழுதலும்.
(சிலம்பு 26 : 52 – 53)

திறை, அன்று பெருவேந்தர்க்கு ஒருபெருவருவாயாகவே இருந்திருக்கலாம். நச்சினார்க்கினியர் குறித்த எட்டிலே திறையும் ஒன்று.

4) **கொண்டி**. திறை, அடங்கிய அரசர்கள் முறைப்படி தருவது. வேந்தர்கள் போரில் வெற்றியுற்றவுடன் பகைவர் நாட்டில் நுழைந்து கொள்ளையிடுதல் உண்டு; கண்ட பொருள்களைக் கவர்தல் உண்டு. அந்தப்புரம் முதற்கொண்டு அரண்மனை முழுவதும் அதனுள் அடங்கிய செல்வங்கள் உட்படக் கைக்கொள்ளப்படும். உடையோர் செல்வமும் பகிர்ந்து கொள்ளப்படும். இவ்வாறு வென்ற வேந்தனால் கொள்ளப்பட்ட மாற்றார் செல்வங்கள் **கொள்ளை** அல்லது **கொண்டி** என வழங்கப்பட்டன. கொண்டிப் பொருளை மனத்திற் கொண்டே மன்னர் படையெடுப்புக்கள் நடந்திருக்கலாம். **நிரை கவர்தல்** என்னும் வெட்சித்திணைப் போர் இதற்கு நல்லசான்று.

..............................சினப்போர் வழுதி
தண்டமிழ் பொதுவெனப் பொறாஅன் போரெதிர்ந்து
**கொண்டி** வேண்டுவன் ஆயின் கொள்க எனக்
கொடுத்த மன்னர் நடுக்குஅற் றனரே.
(புறம் 51: 4-7)

.......................................பகைவர்
ஊர்சுடு விளக்கத்து அழுவிளிக் கம்பலைக்
**கொள்ளை** மேவலை.
(புறம் 7 : 9)

கடிபுலம் கவர்ந்த கன்றுடைக் **கொள்ளையர்**
இனந்தலை பெயர்க்கும் நனந்தலைப் பெருங்காடு
(அகம் 101 : 10-11)

இத்தகைய கொண்டி அன்று ஓரரசுக்கு எந்த அளவு இருந்திருக்கலாம் என்று கணக்கிடுதல் அரிது. எவ்வளவு இருந்தாலும் அது நிலையானது அல்ல. மேலும் அது பெருவேந்தர்க்கோ ஆற்றலரசுக்கோ மட்டும் முடியக்கூடியது. எவ்வாறாயினும் திறையோடு கொண்டியும் பகைவர் உடைமை என்ற அளவில் ஒருங்கு வைத்துக் கருதத்தக்கது. பரிமேலழகர் அரசு வருவாய்களைக் குறிப்பிடும்போது **'பகைவரை யழித்தலும் திறை கோடலும்** தன் நாடு தலையளித்தலும்' எனக் குறிப்பிடுகிறார். இதனால் பகைவரையழித்தல் திறைகோடலிலிருந்து வேறுப்பட்டது என அவர் கருதுகிறார் எனலாம். பகைவரை அழித்தலால் வருவன கொண்டியும் கொள்ளையும். முறையாகத் தரப்படும் திறை இவ்வற்றிலிருந்து வேறுபட்டது தான்.

5) **இடுபொருளும் படு பொருளும்**. பண்டையிலக்கியங்கள் 'இடுபொருள்' 'படுபொருள்' என இருவகைப்பொருள் வருவாய்களைப் பற்றிப் பேசுகின்றன.

கொடிது கடிந்து கோல் திருத்திப்
**படுவது** உண்டு பகல் ஆற்றி
முழுது ஆண்டோர் வழிகாவல! (புறம் 17 : 5-8)

படுவதையே அரசன் பயன்படுத்துகிறான் என்பது இதனால் விளங்குகிறது.

**இடுபொருள்** ஆயினும் **படுபொருள்** ஆயினும்
உற்றவர்க்கும் உறுதி பெற்றவர்க்கும் ஆம் .. .. ...
(சிலம்பு 23 : 166—167)

அரசன் தண்ணளி செய்தல் இது. தனக்கு உரிய இடுபொருளையும் படுபொருளையும் உற்றவரும் பெற்றவருமே கொள்க என இங்கு அரசன் ஆணையிடுகின்றான். இடுபொருள் **பரிசுப்பொருள்** எனக் கருதப்படுகிறது. படுபொருள் **புதைபொருள்** எனக் கருதப்படுகிறது. இறை, சுங்கம், திறை போன்று இவை வருவாய்ப் பெயர்களாகத் தோன்றவில்லை; விளக்கமுரைக்கும் தொடர்களாகவே தென்படுகின்றன. இடுபொருள் படுபொருள் இரண்டுமே உறுபொருள் என்பதனோடு பொருள் ஒற்றுமை கொண்டு உறுபொருள் போன்றே வினைத் தொகைகளாக விளங்குகின்றன.

இடுபொருள் அரசனுக்கு வரும் பரிசுப் பொருளாம் என்பது மேலே சுட்டப்பட்டது. அரசனைக் காண வரும் அவன் குடிகளும், செல்வர்களும் நொதுமலரசர்களும் அரசர்க்குப் பரிசுப்பொருள் கொடுத்தலுண்டு. சேரன் செங்குட்டுவனுக்கு 'மாநீர் வேலி வச்சிர நன்னாட்டுக்கோன் இறை கொடுத்த கொற்றப் பந்தர்' இத்தகைய பரிசு எனவே கொள்ளப்படுகிறது[7]. சேரன் செங்குட்டுவன் மலைவளங்காணச் சென்றபோது மலைமிசை மாக்கள் தலைமிசைக் கொண்டு வந்து அவனுக்குத் தந்த 22 மலைபடுபொருள்களையும் பரிசுப்பொருள்களாகவே கொள்ளவேண்டும்[8].

இவ்வாறே மலைபடுகடாத்தில் நன்னனது அரண்மனை வாயிலில் அவனது காட்சியைக் கருதி நிற்பார் கொண்டு வந்த 22 கையுறை வகைகளும் 'பரிசுப்பொருள்களே[8அ] இவையெல்லாம் மலைபடு வளங்கள். எனினும் இத்தகைய பரிசுப்பொருள்கள் அரசனுடைய பெருவருவாயாகக் கருதப்படமுடியாது. அதுமட்டுமல்ல ; இது நிலையானதும் ஆகாது.

படுபொருளைச் சிலப்பதிகார உரையாசிரியர்கள் புதை பொருள் என்றே கொள்ளுகின்றனர். ஆனால் புறம், 'படுவது உண்டு

---

7. ந. மு. வே. நாட்டார் உரை காண்க.

8. யானைவெண் கோடும் அகிலின் குப்பையும்
மான்மயிர்க் கவரியும் மதுவின் குடங்களும்
சந்தனக் குறையும் சிந்தூரக் கட்டியும்
அஞ்சனத் திரளும் அணியரி தாரமும்
ஏல வல்லியும் இருங்கறி வல்லியும்
கூவை நூறும் கொழுங்கொடிக் கவலையும்
தெங்கின் பழனும் தேமாங் கனியும்
பைங்கொடிப் படலையும் பலவின் பழங்களும்
காயமும் கரும்பும் பூமலி கொடியும்
கொழுந்தாட் கமுகின் செழுங்குலைத் தாறும்
பெருங்குலை வாழையின் இருங்கனித் தாறும்
ஆளியின் அணங்கும் அரியின் குருளையும்
வாள்வரிப் பறழும் மதகரிக் களபமும்
குரங்கின் குட்டியும் குடாவடி உளியமும்
வரையாடு வருடையும் மடமான் மறியும்
காசறைக் கருவும் மாசறு நகுலமும்
பீலி மஞ்ஞையும் நாவியின் பிள்ளையும்
கானக் கோழியும் தேன்மொழிக் கிள்ளையும்
மலைமிசை மாக்கள் தலைமிசைக் கொண்டாங்கு
(சிலம்பு 25 : 37—55)

8அ. மலைபடுகடாம் 448—526.

ஆண்டு' வருதலைக் குறிப்பிடுவதால்–அது ஒன்றையே குறிப்பிடுவதால் –அது புதைபொருள் வருவாயாக இருந்தால் அரசுக்குப் போதாது. உண்மையில் அது விளைபொருளாகத்தான் இருக்கவேண்டும். (புறநானூற்றின் பழைய உரைகாரர் **'ஆறில் ஒன்றாகிய இறையை உண்டு'** என உரை தருகிறார். இறையை உண்டு என்பதை விட **விளைவை உண்டு** என்பது உண்ணுதல் தொழிலுக்கு ஏற்ற பொருளாக இருக்கிறது.) புதைபொருளை ஒருநிலையான வருவாயாக எவ்வாறு கொள்ள முடியும்? ஓர் அரசே இதனால் நடக்க முடியுமா?

பரிமேலழகர் பொருள் வரு வழிகளில் **தன் நாடு தலையளித்தலும்** ஒன்றாகக் குறிப்பிடுகிறார். (குறள் 385). அன்புகொண்டு குடிகளைக் காத்தல் என்பதுதான் இதன் பொருள். ஓரரசன் தன் குடிகளை அன்புடன் போற்றிப் பாதுகாத்தால் இடுபொருளும் படுபொருளும் மிகக் கிடைக்கும் என்பது இதன் பொருளாக இருக்குமா என்பது ஆராய்தற்கு உரியது.

6) **வார்த்தை.** முன்னரே சுட்டிக் காட்டியது போன்று பரிமேலழகர் அரசின் வருவாய் வழிகளாக மிக முக்கியமான மூன்றை எடுத்துக் காட்டுகிறார். 'வாரி பெருக்கி வளம்படுத்து....' (குறள் 512) என்னும் இடத்துப் 'பொருள் வருவாயில்களை விரியச் செய்து....' என உரை வகுத்து "வாயில்களாவன மேல் இறை மாட்சியுள் 'இயற்றலும்' என்புழி உரைத்தனவும், **"உழவு பசுக்காவல், வாணிகம் என்னும் வார்த்தையுமாம்"**என விளக்கமும் தருகிறார். வடநூல்களில் பேசப்படும் **வார்த்தா** சாஸ்திரத்தைத் தந்துரைக்கிறார், பரிமேலழகர். அவர் இங்கு இவற்றைத் தருகின்ற காரணத்தால் இம்மூன்றையும் தமிழக அரசர் நேரே புரிந்தனர் என்றாகும். ஆனால் சங்க இலக்கியத்தில் அரசர் நேரே உழவு செய்தனர் என்பதற்கும் பசுக்காவல் புரிந்தனர் என்பதற்கும் வணிகம் செய்தனர் என்பதற்கும் சான்று இருப்பதாகத் தெரியவில்லை. இம்மூன்றும் வைசியர்க்கு உரியன எனவே வடமொழி நூல்கள் பேசுகின்றன.

**உழவு.** தமிழகத்து அரசர்கள் நிலத்துக்கு இறைவாங்கினர். இந் நிலங்கள் பிறர்க்கு உரிமையுடையன. அரசர்கள் புலவர்க்கும் பிறர்க்கும் நிலம் வழங்கினர்; பரிசாகத் தந்தனர். இங்கு அரசர்கள் தமக்கு உரிய நிலத்தை வழங்கினரா அல்லது இறை வாங்கும் உரிமையைப் புலவர்க்கும் பிறர்க்கும் நல்கினரா என்பது ஆராய்தற்கு உரியது. 'வேளிர்' என்பது நிலமுடையோரைக் குறிப்பதாகத் தெரிகிறது. அரசர்கள்

'காடு கெடுத்து நாடாக்கு' கிறபோது அந்த நாடு அரசர்க்காஎன்பதும் ஆராயப்பட வேண்டுவது. 'படுவது உண்டு' எனப் புறமும் கூறுவதுஉழவுத்தொழிலைச் சுட்டுமா என்பதும் சிந்திக்க வேண்டுவது

**'பசுக்காவல்'** எனத் தருகிறார் பரிமேலழகர். **'ஆவோம்பல்'** எனவும் இது வழங்கப்படுகிறது. வெறும்பசுக்களை மட்டும் ஓம்பும் புனிதப் பணியாக இதனைக் கருதினால் இது அரசின் பொருள் வாழ்வுக்குப் பயன்படாது. ஆடு மாடு எருமை முதலிய இனங்கள் கொண்ட கால்நடை வளர்ப்பாகத்தான் இதனைக் கொள்ளவேண்டும். 'பசுக்காவல்' என அது குன்றக் கூறலாக மாறியது பசுவின் புனிதத் தன்மை வற்புறுத்தப்பட்ட இடைக்காலத்திலாகலாம். அரசன் நேராகக் கால்நடை வளர்ப்பில் ஈடுபட்டிருந்தானா என்பது தெரியவில்லை. **நிரை கவர்தல், நிரை மீட்டல்** ஆகிய போர் முறைகளில் அரசன் பங்கு உண்டு. ஆனால் இது எந்த அளவு உரிமை பற்றியது என்பது விளங்க வில்லை. நாட்டிலுள்ள கால்நடையால் அரசனுக்கு வருவாயுண்டு. உழவர்கள், மேதக்காராகி நிரைகாத்து அரசர்க்கு நிதி தந்தனர் எனப் பழம் பாடல் ஒன்றால் அறிய முடிகிறது:

*போர்வாகை வாய்த்த புரவலரின் மேதக்கார்*
*ஏர்வாழ்நர் என்பதற்கு ஏதுவாம்—சீர்சால்*
*உரைகாக்கும் மன்னர்க்கு ஒளி பெருகத் தாம்தம்*
*நிரைகாத்துத் தந்த நிதி.*

நிரைகாத்துத் தந்த நிதி உரிமையா, இறையா, கொடையா என்பது புலப்படவில்லை. வேளாண்மை மிக்க நாட்டில் இதன்வழி வருவாய் குறிப்பிடத்தக்க அளவு பெரிதாக இருக்கலாம்.

**வணிகம்.** தமிழகத்து அரசர்கள் நேரே வணிகம் செய்தனரா என்பது தெரியவில்லை. வைசியர்க்கு உரியது சத்திரியருக்கும் உண்டு என வடமொழி அருத்த சாஸ்திரங்கள் வற்புறுத்துகின்றன. ஒரு சில வணிகப் பண்டங்களின்மீது அரசனுக்குத் தனியாட்சியுரிமை (Monopoly) இருந்திருக்கலாம். ஆனால் அது இன்னின்ன பண்டங்களின்மீது இன்ன அளவு என்ற செய்தி தமிழில் இல்லை. பரிமேலழகர் வார்த்தைபற்றி உரைக்குங்கால் நடைமுறை நோக்காது வடநூல்களைக் கண்மூடிப் பின்பற்றிச் சொன்னாரா என்பதும் கருதத்தக்கது.

7) **தண்டப்பொருள்.** காவலன் மாற்றாரிடமிருந்து மட்டும் நாட்டைக் காப்பதில்லை; தன் நாட்டில் கொடியோர் தீயோரிடமிருந்தும் மக்களைக் காக்கக் கடமைப்பட்டவன். கொடுமையும் தீமை

யும் புரிவோரை அரசன் தண்டிக்கிறான். அவர்களிடமிருந்து தண்டமாகப் பொருளும் வாங்குகிறான். நல்லறங்காவலுக்கு அவன் பெறும் நன்றி அது. இதனாலும் அரசன் வருவாய் கூடுகிறது. இதன்வழி அரசுக்குப் பெருவருவாய் வந்தது எனக் கொள்ள முடியாது. அவ்வாறு பெருவருவாய் வருமானால் நாட்டில் குற்றவாளிகள் குவிந்திருக்கிறார்கள் என்று பொருள்படும்! அது உண்மையும் அல்ல; நன்மையும் அல்ல. குற்றத்துக்குத் தண்டனையாக அரசன் பொருள் பெற்றான் என்பதற்கும் சிலபோது அப்பொருள் வியக்கும் அளவு பெரும்பொருளாக இருந்திருக்கிறது என்பதற்கும் சங்கப் பாடல் ஒன்று சான்றாக நிற்கிறது:

மண்ணிய சென்ற ஒள்-நுதல் அரிவை
புனல்தரு பசுங்காய் தின்றதன் **தப்பற்கு**
**ஒன்பதிற்று ஒன்பது களிற்றொடு அவள்நிறை**
**பொன்செய் பாவை கொடுப்பவும்** கொள்ளான்
பெண் கொலை புரிந்த நன்னன்......

(குறுந்தொகை 292)

களிறும் பொன்னும் கருதத்தக்க அளவு சிறப்புடையன. நன்னன் செய்தது கொடுமையானாலும் இந்த நிகழ்ச்சி அன்றைய மரபினைச் சுட்டிக்காட்டுகிறது என்ற அளவில் இதைக் கொள்ளலாம்.

8) **உல்கு. உல்கு** என்னும் ஒரு வருவாய்பற்றிச் சங்க இலக்கியங்களால் அறிய முடிகிறது. 'காலினும் கலத்தினும் வரும் பண்டங்கட்கு இறையாயது' இது எனப் பரிமேலழகர் விளக்குகிறார் (குறளுரை 756). [இதனை அவர் **சுங்கம்** என்கிறார். சங்க காலத்தை அடுத்த இடைக்காலத்தில் இவ் உல்கு, சுங்கம் என வழங்கியது.] இதனால் இது உள்நாட்டு வெளி நாட்டுப் பண்டங்களுக்கு ஒருங்கு விதிக்கப்படுவது என்பதும் தெளிவாகிறது. புகார் நகரில் அரசர் பணியாட்கள் இரவு பகலாக வணிகப் பண்டங்களுக்கு உல்கு வாங்கினமையைப் பட்டினப்பாலை பேசுகிறது:

வேலாழி வியல்தெருவின்
நல்லிறைவன் பொருள் காக்கும்
தொல்லிசைத் தொழில்மாக்கள்
காய்சினத்த கதிர்ச்செல்வன்
தேர்பூண்ட மாஅபோல
வைகல்தொறும் அசைவின்றி
**உல்கு**செயக் குறைபடாத

......................................

அளந்தறியாப் பலபண்டம்

......................................

புலிபொறித்துப் புறம்போக்கி
மதிநிறைந்த மலிபண்டம் (பட்டினப்பாலை 119-136)

உல்கு செய்யும் அளவு, உல்கு செய்வோர், உல்கு செய்யும் காலம், பண்டங்கட்குப் புலிப்பொறியிடல் ஆகிய செய்திகள் இவ்வடிகளால் புலனுகின்றன. புகார்த் துறையில் இது நடைபெறுவதால் இறக்குமதியாகிய வெளிநாட்டுப் பண்டங்களும் ஏற்றுமதியாக வந்த உள்நாட்டுப் பண்டங்களும் உல்கு செய்ய உரியவை என்பது விளங்குகிறது. பெரும்பாணாற்றுப் படை உள்நாட்டுப் பெருவழிகளில் உள்நாட்டுப் பண்டங்கட்கு உல்கு செய்தலைக் குறிப்பிடுகிறது:

அணர்ச்செவிக் கழுதைச் சாத்தொடு வழங்கும்
உல்குடைப் பெருவழி ......... .........
(பெரும்பாணாற்றுப் படை 80 - 81)

இதே கருத்தை 'ஆற்றச் சுரம்போக்கி **உல்கு கொண்டார்** இல்லை' எனப் பேசுகிறது பழமொழி[9] என்னும் நீதிநூல். உல்கு என்பதே **ஆயம்**[10] எனவும் **தீர்வை** எனவும் வழங்கப்படுகிறது. இவ்வாயத்தை முறைப்படி வாங்கிப்போற்றி வைப்பதற்கு **ஆயக்கணக்கர்** என்பார் அன்று அரசனல் அமர்த்தப்பட்டிருந்தனர். கறை வீடு செய்வதற்கு ஒருமுறை இவ்வாயக்கணக்கர் செங்குட்டுவனுல் ஏவப் பட்டதைச் சிலப்பதிகாரம் குறிப்பிடுகிறது:

சிறையோர் கூட்டம் சிமின்; யாங்கணும்
கறைகெழுநாடு கறைவிடு செய்ம்'என
அழும்பில் வேளொடு **ஆயக் கணக்கரை**
முழங்குநீர் வேலி மூதூர் ஏவி
(சிலம்பு 28 : 203 - 206)

பண்டைத் தமிழகத்தில் உள்நாட்டு வெளிநாட்டு வணிகம் செழித்தோங்கி வளர்ந்திருந்ததால் உல்கின்வழியாக அன்றையரசுகளுக்குப் பெருவருவாய் வந்திருக்க வேண்டும். இன்றைய பொருளியல், இறக்குமதிப் பண்டங்களுக்கு விதிக்கப்படும் உல்கினை
Customs

---

9. பழமொழி 1

10. ஆயம் முதலில் வருவாய் என்ற பொருளிலும் (பொருளாயம் போஒய்ப் புறமே படும் குறள் 933). பினர்ப் பொதுவாக வரி என்ற பொருளிலும் பின்னர் உல்கு என்ற பொருளிலும் வழங்கியிருக்கலாம்.

அல்லது **Import Duty** என வழங்குகிறது. பட்டினப்பாலை குறிப்பிடும் உல்கு இதுவாக இருக்கலாம். இன்றைய பொருளியல், பாதை பாலம் ஆகியவற்றைப் பயன்படுத்தியதன் பொருட்டுப் பண்டங்கட்கு வாங்கப்படும் உல்கினை **Toll** என வழங்குகிறது. பெரும்பாணாற்றுப் படையும் பழமொழியும் குறிப்பிடும் உல்கு இதுவாகலாம்.

9) **இரவு.** இத்தகைய வருவாய்கள் மட்டும் அல்லாது கொடுங்கோலரசர் குடிகளை அலைத்துப் பெறும் பொருளும் அன்று இருந்து இருக்கலாம். வள்ளுவரே இது பற்றிய குறிப்பு ஒன்றைத் தருகிறார்.

> வேலொடு நின்றான் 'இடு'என் றதுபோலும்
> கோலொடு நின்றான் **இரவு** (குறள் 552)

இவ்வாறு கொடுங்கோலொடு நின்ற அரசர்கள் பெறும் **இரவு** முறையற்றது; அழிவிலேயே கொண்டு சேர்க்கும்.

## 3. 5. 5. வரலாற்றறிஞர் தந்தவை

இவ்வாறு இலக்கிய வழிகளில் கண்ட பல்வேறு அரசு வருவாய்கள் வரலாற்றாசிரியர்க்கும் உடன்பாடே. டாக்டர் என். சுப்பிரமணியம், தமிழகத்தரசர் வருவாய்களைத் தொகுத்துரைக்கிறார்:

'Though it might be supposed that normally the revenue derived by a Sangam king under the various heads of (1) **land revenue,** (2) **tolls and duties,** (3) **treasure troves and escheats,** (4) **tributes and** (5) **presents** must have sufficed for his expenses, it may be admitted that abnormal kings or abnormal times were also possible; and 'extra-revenue' came to be demanded.' — (Sangam Polity, P. 206)

பண்டைக்காலத்தில் தமிழக அரசர்களை விட வடஇந்திய அரசுகள் பேரரசுகளாக விளங்கின. அவற்றின் ஆட்சியின் பரப்பும் நுட்பமும் விரிந்தவை. ஆகவே அங்கு அரசியலாராய்ச்சியும் ஆழமானது. அரசு வருவாய்கள் அங்கு விரிவாக ஆராயப்பட்டுள்

ளன.[11] வடநாடுகளில் நடைமுறையில் இருந்த முக்கியமான

11. அக்கருத்துக்கள் இங்குக் கருதத் தக்கன பண்டை இந்திய அரசுகளின் வருவாய்வழிகள் பற்றி ஜான் டபிள்யூ. ஸ்பெல்மன் (John W. Spellman) என்ற அறிஞர் இவ்வாறு கூறுகிறார்:

"The **booty of war**, as distinct from **tribute**, could have produced only a small amount for **the** state, since much of it was shared among the warriors. We have also seen that from earliest times the treasury of the king was helped by the **tribute** brought from conquered nations. The King also received the **fines** levied against all grades of criminal and civil offenders.

One of the largest sources of income for the king was '**Sulka or tolls and Customs duties** imposed on sellers and buyers of goods brought into or carried out of the country, by land or water .... .... .... ....

Salt deposits were the property of the state and a tax was levied on those individuals who were given licences to work the salt mines .... .... ....

The king was also considered to be the owner of the various other types of mines and minerals in the earth, although some sources allow him only share upto one half of the product mined.

........the king collected revenue from the gambling halls.

The king also received revenue from various other state monopolies such as saffron, silk, wool, horses, pearls and jewels.

Prostitution appears to have been legalized, and once again the king had his share .... .... ....

Cultivators had to pay one-fourth of their grain, one-sixth of forest produce and various sums on cotton, wax, fabrics, flowers, fruits and vegetables. The tax on ivory and animal skins was one half of the value and it was necessary to obtain a licence from the king before trading in these commodities. P. T. O.

வருவாய் வழிகள் திறை, கொண்டி, குற்றவாளிகள் தண்டனைப் பொருள், சுங்கம், புதையல், காலற்றுர் பொருள், கனிவள உரிமையால் வரும் வருவாய், வணிகத்தால் வரும் வருவாய், வணிகவரி, தொழில் வரி, உப்புவரி, கூளிப்பாட்டவரி, கால்நடை கானகம் உட்பட்ட நிலவரி முதலியவை என அறிகிறோம். இவை பற்றிய கருத்துக்கள் வடநாட்டு மொழிகளின் அறநூல் பொருள்நூல்களில் கிடக்கின்றன. இவை ஓரளவு பண்டைத் தமிழகத்துக்கும் பொருந்தலாம். நச்சினார்க்கினியர் பரிமேலழகர் முதலான உரையாசிரியர்கள் இக்கருத்துக்களைத் தமிழகத்துக்கு 'இறக்குமதி' செய்திருக்கலாம். வள்ளுவர் கருத்தை அறிந்து கொள்ளுவதற்கு வேண்டிய அளவே இவற்றின் துணையை நாம் நாடலாம்.

### 3. 5. 6. தொகுப்புரை

இலக்கியங்களின் அகச்சான்றுகளோடும் உரையாசிரியர்கள் துணைக் கொண்டும் இதுகாறும் ஆராய்ந்த பண்டை அரசுக்கு உரிய வருவாய் வழிகளை இப்போது இங்குத் தொகுத்துக் காணலாம்.

1) **நிலவரி.** இதுவே பெரும்பாலும் இறை என வழங்கப் படுவது. கால்நடைகள்வரி, கானகவரி, நீர்வரி முதலியவை இதில் அடங்கும். 'விளைவில் ஆறில் ஒன்று அரசர்க்கு' என இது கொடுக்கப் பட்டிருக்கலாம். ஆனல் ஆறில் ஒன்று என்ற குறிப்புச் சங்க காலத்

---

Merchants had to pay taxes on all precious stones and minerals, horses and elephants, clothes, metals, medicines, liquor, glass, wood, and various food-stuffs.

Herdsmen who had fowl and pigs must give the Government half, .... .... All classes who kept prostitutes were required to pay a tax. - "pp. 190-193, PTAI.

தில் இல்லை.[12] பரிமேலழகர் உள்ளிட்ட பல திருக்குறள் உரையாசிரியர்களும் இன்னிலையாசிரியரும் நச்சினார்க்கினியரும் இந்நிலவரியைக் குறிக்கின்றனர். நச்சினார்க்கினியர், அந்தணர்க்குத் தரப்படும் எனக் குறிக்கும் 'இறையிலியின்' 'இறை'யும் நிலவரியாகத்தான் கருதப்பட வேண்டும்.

2) **சுங்கவரி.** இதுவே உல்கு எனப்படுவது; உள்நாட்டு வெளிநாட்டு வணிகப்பண்டங்கள்மீது விதிக்கப்படுவது. திருக்குறள் உரையாசிரியர்களும் நச்சினார்க்கினியரும் இன்னிலையாசிரியரும் இதனைக் குறிப்பிடுகின்றனர்.

3) **திறையும் கொண்டியும்.** எல்லோரும் இதனை உடன்பட்டுக் குறிப்பிடுகின்றனர்.

4) **புதையற் பொருள்** பரிமேலழகரும் நச்சினார்க்கினியரும் இன்னிலையாசிரியரும் இதனைக் குறிப்பிடுகின்றனர்.

5) **தாயத்தார் அற்றோர் பொருள்.** பரிமேலழகரும் பரிப்பெருமாளும் நச்சினார்க்கினியரும் மட்டுமே இதுபற்றிக் குறிப்பிடுகின்றனர். ('பிறன் தாயம் கோடல்' என்ற நச்சினார்க்கினியர் தொடருக்கு இதுவே பொருளாகலாம்.)

6) **குற்றவாளிகள் தண்டனைப் பொருள்** நீதி நிலை நிறுத்தல் அரசன் பொறுப்பு. கொடியாரை ஒறுத்தலால் இப்பொருள் கிடைக்கிறது. நச்சினார்க்கினியர் ஒருவர் மட்டுமே இதனைச் சுட்டிக்காட்டுகிறார்.

---

12. 'It is regularly mentioned in the commentaries to the Sangam texts that the rate of land revenue was 1/6 of the produce of the land. It is notale that the earliest Tamil work which mentions this rate is the Purapporul Venba Malai.' – P. 200, SP.

'But one searches in vain for a plain reference to the 1/6 rate or any other rate in Sangam literature. Probably later writers and commentators were thinking of contemporary or recent practices or of the rate suggested by Manu'. – P. 201, SP.

'நாலிரண்டால் கூடும் நலப்பொருள்' என்று கூறும் இன்னிலையும் சங்ககாலத்துக்கு உரியது அல்ல.

7) **களவுப் பொருள்.** நச்சினார்க்கினியர் இதனைத் தெளிவாகக் கூறுகிறார். பரிமேலழகர் தரும் 'உடையார் இன்மையின் தானே வந்துற்ற பொருள்' இதுவாக இருக்கலாம்.

8) **வணிகத்தின் வழி ஈட்டும் பொருள்.** நச்சினார்க்கினியரும் பரிமேலழகரும் இதனைக் குறிப்பிடுகின்றனர்.

9) **கால் நடை வளர்ப்பின்வழிப் பொருள்.** பரிமேலழகர் மட்டுமே இதனைக் குறிப்பிடுகிறார்.

10) **உழவின்வழிப் பொருள்.** பரிமேலழகர் மட்டுமே இதனையும் குறிப்பிடுகிறார். 'படுவது உண்டான்' என்னும் புறநானூறு இதற்குச் சான்றாகுமா?

11) **பரிசுப் பொருள்கள்.** சிலப்பதிகாரத்தால் மட்டுமே இது புலப்படுகிறது. புதையற் பொருள் முதலாக உழவின்வழிப் பொருள் ஈறாகச் சொல்லப்பட்ட வழிகள் சங்ககாலத்தரசர்களுக்கு வருவாய்வழி களாக இருந்தனவா என்பது தெளிவாகப் புலப்படவில்லை. இந்த நோக்கத்தோடு சங்ககால அரசியல் இனி ஆராயப்பட வேண்டும்.

## 3. 6. திருக்குறள் தந்தவை

பிற இலக்கியங்களிற் போன்றே திருக்குறளிலும் அரசு வருவாய்கள்பற்றிச் சில கருத்துக்கள் கிடைக்கின்றன. இதுவரை கண்ட கருத்துக்களின் துணைக்கொண்டு திருக்குறளில் அரசு வருவாய் களாகக் கிடக்கும் கருத்துக்களை இனி ஆராய்ந்து காணலாம்.

**நிலவரி என்னும் இறை.** வள்ளுவர் இதனைக் குறிப்பிடுகிறார். நாடு என்னும் அதிகாரத்தில் நாட்டின் இலக்கணமாக வருகிறது இக்குறள் :

பொறைஒருங்கு மேல்வருங்கால் தாங்கி இறைவற்கு
**இறை**ஒருங்கு நேர்வது நாடு. (குறள் 733)

இறை என்பதற்குப் பரிமேலழகர் **இறைப்பொருள்** எனவும் மணக்குடவரும் பரிப்பெருமாளும் **நிச்சயித்த கடமை** எனவும் பரிதியார் **இறைக்கடமை** எனவும் காளிங்கர் **அரசற்கு ஆறில் ஒன்றாக என்றும் இறுத்தற்கு உரிய இறை** எனவும் பொருள் தருகின்றனர். தமிழிலக்கியங்களிலேயே இறை என்னும் சொல் இப்பொருளில் முதன் முதலாக இக்குறளில்தான் ஆளப்பட்டிருக்கிறது. எட்டுத்தொகை

பத்துப் பாட்டுக்களில் இச்சொல்லுக்கு இப்பொருள் இல்லை. இதுவே நிலத்தின் விளைவில் ஆறில் ஒன்றாக (இன்று அரசினர் நிலவரி வாங்குவது போன்று) வாங்கப்பட்டிருக்கலாம். **இறையிலிநிலம்** என்னும் தொடர் நெடுங்காலமாக வழங்கி வருதலால் இச்சொல்லை இப்பொருளில் கொள்ளுவது பொருத்தம்தான்.

'இறை ஒருங்கு **நேர்வது** நாடு' என்பதில் **நேர்வது** என்ற ஆட்சி சில கருத்துக்களைத் தரலாம். '...... தானே கொடுப்பது என்பார், இறை ஒருங்கு நேர்வது என்றார்' எனப் பரிமேலழகர் எழுதுகிறார். ஆகவே பரிமேலழகர் உரை கண்டவாறு 'உடம்பட்டுக்' கொடுக்கப்படும் பரிசுப்பொருள் இதனுள் அடங்கலாம். உல்கு பொருள் அடங்குமா என்பது ஆராயப்பட வேண்டும். ஆனால் மேலே தொகுத்துரைத்த பதினொன்றுள் இவை தவிரப்பிற இறை என்னும் வரையறையுள் அடங்கமாட்டா என உறுதியாகக் கூறலாம். காரணம் அவை எல்லாம் யாராலும் உடம்பட்டுக் கொடுக்கப்படுபவை அல்ல.

இந்தக் குறளின் நோக்கத்தை இங்கு எண்ணிப்பார்ப்பது இன்றியமையாதது. 'இவை ஆறு பாட்டாலும் நாட்டது இலக்கணம் கூறப்பட்டது' எனப் பரிமேலழகர் குறிப்பிடும் ஆறு பாட்டுக்களில் இதுவும் ஒன்று. இக்குறளுக்கு அரசு வருவாய்களைத் தொகுத்துக் கூறும் நோக்கம் இல்லை வள்ளுவர்க்கு எங்குமே அந்த நோக்கம் இருப்பதாகத் தெரியவில்லை. அரசு வருவாய்களை வள்ளுவர் முறையாக வகுத்துரைத்திருப்பார் என்னும் நோக்கத்தோடு வள்ளுவரின் அரசியலாராய்ச்சியை நாடுவோர்க்கு இது ஓர் ஏமாற்றமாகும்.

அரசின் பிற வருவாய்களைக் குறிப்பிடுவதாகத் திருக்குறளில் மற்றொரு குறளும் உண்டு:

உறுபொருளும் உல்கு பொருளும் தன் ஒன்னார்த்
தெறுபொருளும் வேந்தன் பொருள். (குறள் 756)

அரசின் வருவாய் அனைத்தும் பற்றி இந்தக்குறளே தொகுத்துப் பேசுகிறது என அறிஞர் பலரும் கருதுகின்றனர்.

1) உறுபொருள்
2) உல்கு பொருள்
3) ஒன்னார்த் தெறு பொருள்

என மூன்று வருவாய்கள் இக்குறளில் குறிக்கப்படுகின்றன. இவை பற்றித் தெளிவு பெற வேண்டும்

**உல்குபொருள்** என்ற தொடருக்குப் பரிமேலழகர் 'சுங்கமாகிய பொருள்' எனவும் 'சுங்கம் கலத்தினும் காலினும் வரும் பண்டங்கட்கு இறையாயது' எனவும் எழுதுகிறார். இவ்வுரையில் கருத்துவேறுபாடு ஏதும் இல்லை. உல்கும் சுங்கமும் ஒன்று- என்பது பரிமேலழகர் உரையாலும் உறுதிபெறுகிறது.

உல்கு என்னும் சொல் சங்க காலத்திற்குப் பின்னர்ச் **சுங்கம்** என வழங்கியது. வடமொழியின் Shulka என்னும் சொல்லின் தமிழ் வழக்கே இது; முதல் நிலைச்சகரம் கெட்டுத் தமிழில் வழங்கியது. இது பழந்தமிழகத்தின் நிலை.[13] Shulka என்னும் வடசொல்லே பிராகிருதத்தில் Shunka என வழங்கியது. அதுவே சங்க காலத்தை அடுத்துத் தமிழில் **சுங்கம்** என வழங்கத் தலைப்பட்டது. இவ்வரிமுறை வடக்கே இருந்து தெற்கே போந்ததோ என ஒருகால் கருதவும் இக்கடன் சொல் இடந்தருகிறது.

உல்கு பண்டைத் தமிழரசர்க்கு ஒரு பெருவருவாயாக இருந்திருக்க வேண்டும் என்பதை இலக்கியங்கள் எடுத்துக் காட்டுகின்றன. இத் தமிழ் வரலாற்றை ஒட்டியே வள்ளுவர் இதனைத் தன் பொருட்பாலில் தந்துள்ளார் எனலாம்.

தெறுபொருள் என்பது பகைவரை அழித்தலால் வரும் கொண்டிப் பொருள் எனவே எல்லோரும் கொள்கின்றனர். மாற்றாரைப் போரில் தோற்கடித்து அவன் உடைமைகளை எல்லாம் அப்போதே கவர்தல் உண்டு. இவையே கொண்டிப் பொருள் எனவும் கொள்ளைப்பொருள் எனவும் வழங்கப்படும். அடங்கிய அரசர், பெருவேந்தர்க்கு முறையாகக் கப்பம் கட்டி வருவர். இது திறை எனப்படும். இக்கருத்துக்கள் இலக்கியச் சான்றுகளோடு முன்னரும் விளக்கப்பட்டன. (காண்க 3 5. 4)

திறையாக வேண்டும் அளவு அரசர் செல்வம் பெற முடியும். சிற்றரசர் அஞ்சிக் கொண்டு பேரரசர் கேட்டதைத் தர வேண்டி நேரும்.

---

13. 'Dravidian Studies VI: The Loss of initial C/S in South Dravidian' by Prof. T. Burrow in **'Collected Papers on Dravidian Linguistics'.**

அருந்திறை கொடுப்பவும் கொள்ளான் வேந்தன் (அகம் 84:15)

என்பது போன்ற குறிப்புக்கள் பல சங்க இலக்கியத்தில் கிடைக்கின்றன. களிறு வேந்தர்க்கு உவப்பான திறை:

தொன்று திறை தந்த களிற்ரெடு (பதிற்றுப்பத்து 66;7)

என்ற அடி இதனை வெளியிடுகிறது. தன் சுற்றம் போற்றுவதற்கும் இரப்போரைப் புரப்பதற்கும் கூடத் தன்னிடத்துப் பொருள் இல்லாத போது அண்டை நாட்டு அரசரைத் தாக்கிக் கொண்டியும் திறையும் பெறுவர் மன்னர் எனப் பழம்பாடல்கள் உரைக்கின்றன.[14] பழந் தமிழகத்தில் பலரும் ஏற்றுக் கொண்டு பரவலாக வழக்கில் இருந்ததையே வள்ளுவர் இங்குப் பேசுகிருர் எனலாம்.

திறையும் கொண்டியும் தொடக்கத்தில் ஒன்ருகவே கருதப் பட்டிருக்கலாம். கொண்டி, தெறுதலால் வருவது. தெறுதல் என்பது அழித்தல். திறை என்னும் சொல்லிலேயே அழித்தல் என்னும் பொருள் தரும் தெறுதல் அடங்கியுள்ளது. தெறு என்னும் வினைப் பகுதி -ஐ என்னும் தொழிற்பெயர் விகுதி ஏற்றுத் திறை என வழங்குகின்றது. ஆகவே கொண்டி யுள்ளிட்ட திறைப் பொருளே தெறுபொருள் என அன்று வழங்கி யிருக்கவேண்டும்.[15] தெறுதல்

14. இவ்வியலின் அடிக்குறிப்பு 20 காண்க.

15. 'தெறுபொருள்: ஒன்ஞர் என்ருல் பகைவர் எனக் கொள்ளாது, நம்மோடு ஒரு நாடாக ஆகிவிடாது நிற்போர் என்று பொருள் கொள்ள வேண்டும். தெறுதல் என்பதற்கு ஆதிக்கம் என்றுபொருள் கொள்ளுதல் வேண்டும். ஆதிக்கம் நாளடைவில் கூட்டுறவாக மாறி இனிக்கும். எனவே வெளிநாட்டு உதவி என்ற பொருளில் சென்று 'தெறு-பொருள்' தான் முடியும். மற்ரென்றும் உண்டல்லவா? குற்ற-வாளிகளும் ஒருவகையில் நாட்டுப் பகைவர்களே. ஆதலால் அவர்களிடம் தண்டனையாகப் பெறும் பொருளும் 'ஒன்ஞர்த் தெறு பொருளே' ஆம். உலகம் முழுவதும் வாழவேண்டும் என்ற எண்ணத்தோடு வரும் வெளிநாட்டு உதவியில், அதை உதவும் நாடு, அதன் பகை நாடுகளின் ஆதிக்கத்தை அழிப்பதற்கு முயலும் நோக்கமும் உண்டு அல்லவா? ஆதலின், அதன் ஒன்ஞரைத் தெறு பொருளாக அந்த உதவி அமைவதைக் காண்கிருேம்?' — தெ. பொ. மீ., பொ. நூ. க., பக். 189.

'திருவள்ளுவர் எண்ணிஞரோ இல்லையோ? இவ்வளவும் எண்ண அங்கு இடம் உண்டு என்றே சொல்ல விரும்புகிருேம்?' (பாலில் பாய்தல், வள்ளுவர் கண்ட நாடும் - காமமும், பக.5) என்று கருதிச் சொல்லப் பட்டவைஇவை எனக்கொள்ளலாம். இவ்வாறில்லாமல் நாம் இங்கு வள்ளுவர் கருத்தையே அறிய முயலுகிருேம். மேலும் குற்றவாளிகளை ஒன்ஞர் என்று எங்கும் யாரும் குறித்ததாகத் தெரியவில்லை. தெறு' திறை ஆகும் விதியைப் பேராசிரியர் பரோ தன் கட்டுரை ஒன்றில் (Dravidian Studies II, 'Note on the intercharge of short o and e with i and u in South Dravidian') விளக்குகிருர். அடிக்குறிப்பு 13-இல் காட்டப்பட்ட நூல் காண்க.

செய்து 'கொள்' வது கொண்டி. கொள் + தி என்பதே 'கொண்டி'யாகி யிருக்கும்.

உல்கு பொருளும் தெறுபொருளும் போக இக்குறளில் வேந்தன் பொருளாகக் குறிக்கப்படுவது **உறுபொருள்.** இதற்கு **'உடையார் இன்மையின் தானே வந்துற்ற பொருளும்'** எனப் பரிமேலழகர் உரை தருகிறார். மேலும் அவரே **'உறுபொருள் - வைத்தார் இறந்துபோக நெடுங்காலம் நிலத்தின்கட் கிடந்து பின் கண்டெடுத்ததூஉம், தாயத்தார் பெறுததூஉம் ஆம்'** எனவும் எழுதுகிறார். அதாவது **புதை பொருளும் வாரிசற்றோரது பொருளும்** உறுபொருளில் அடங்குமாம். மணக்குடவரும் இவரே போன்று **'தானே வந்துற்ற பொருள்'** எனப் பொருள் தருகிறார்.

**பரிதியார்** என்னும் உரையாசிரியர் உறுபொருள் என்பது **குடிக்கடமை** என்கின்றார். அதாவது **கடமை** (Duty) என்னும் ஒருவரி என்பது இவர் கருத்து. **காளிங்கர்** என்னும் உரையாசிரியரும் இவ்வாறே **'நாடு இறுக்கும் முறைமையின் பெறும் பொருள்'** எனக் கருதுகிறார்.

**பரிப்பெருமாள்** என்னும் உரையாசிரியர், உறுபொருள் என்பது **கால் அற்றபொருள்** என்கிறார். இவர் கருத்துப் பரிமேலழகர் கருதும் தாயத்தார் பெறுதது என்பதுதான்.

உறுபொருள் என்பது மக்கள் அரசின் ஆணைப்படி செலுத்தும் நிலவரிதான் என்கின்றனர் இன்றையறிஞர்கள் சிலர்.[16] இது வழக்கமாக ஆறில் ஒன்றும். இதனை வற்புறுத்திப் பேசுகிறார் டாக்டர் பா. நடராசன். இந்திய மக்கள் நெடுங்காலம் தொட்டே உடன்பட்டுக் கொடுக்கும் **நிலவரி** பற்றிக் குறளில் ஒரு குறிப்பும் இல்லையே என அவர் குறிப்பிட்டுவிட்டு அது உறுபொருளாக

---

16. 'இந்திய அரசுகளில். முன்னாட்களில் விளையும் பொருளில் ஆறில் ஒன்று அரசனுக்கு நிலவரியாகக் கொடுக்கப்பட்டது ... ... ஒவ்வொரு குடிமகனும் செலுத்துவதைத் தனதுகடமையாகவே கருதியிருந்தான். ... ... அரசன் மக்களின் காவலன்; அவன் காப்புக்குக் கைம்மாருக மக்கள் பொருள் தந்தனர். ஆகவேதான் அது உறுபொருள் ஆயிற்று'. — டாக்டர் பா. நடராசனர், வ த பொ. பக் 65, 66.

'நாட்டின் விளைவில் ஒருபகுதி அரசினைச் சேர வேண்டும் ... ... நேர்முகமாக வருவாயில் ஒரு பகுதி கொள்வது பழைய காலத்திலிருந்து வரும் அரசு முறை. ''நிலத்தில் விளைவதில் ஆறில் ஒன்று அரசினைச் சேரும்'' என்பது பழமொழி .. இதனை 'உறுபொருள்' என்கிருர் வள்ளுவர்.' — தெ பொ. மீ., பொ நூ க. தி க., பக். 190.
'இறையாக வந்து சேரும் பொருள்,' - மு, வ., திருக்குறள் தெளிவுரை.

இருக்கலாமே என ஐயுறுகிறார்.[17] ஆனால் வள்ளுவர் 733-ஆம் குறளில் நிலவரியைக்—குடிக்கடமையை—இறை என்னும் சொல்லால் குறிப்பிடுகிறார் என்பது விளக்கப்பட்டது. ஆகவே பெருவழக்காக இருந்து வந்த நிலவரி பற்றி இக்குறளில்தான் கூறப்பட்டிருக்க வேண்டும் என இக் குறளை அணுகுவது தேவை இல்லை.

இறை என்ற சொல்லைத் திருவள்ளுவரே முன்னர் ஆண்டிருக்கிறார். அதுவும் நிலவரி என்னும் பொருளுடையதாகலாம். அவ்வாறு இருக்கின்றபோது இக்குறளில் நிலவரியைக் குறிப்பிடும் எண்ணம் அவருக்கு இருக்குமானால் இறை என்ற சொல்லையே பொருத்தமாகவும் தெளிவாகவும் இங்கும் ஆண்டிருக்கலாம். தெளிவில்லாத பொதுப் பொருள் தரும் 'உறுபொருள்' என்னும்தொடரை ஆண்டிருக்க வேண்டிய தேவை இல்லை.

அடுத்துத் திருவள்ளுவர்க்கு நிலத்துக்கான இறை போன்றவற்றை இக்குறளில் சொல்லவேண்டும் என்ற எண்ணம் இல்லை என உணரவேண்டும். 'ஆறில் ஒன்று ஒழியவும் உரியன கூறியவாறு' என இக்குறளின் நோக்கம் பற்றிப்பரிமேலழகர் எழுதுகிறார். நிலவிறை பற்றி இங்குக் கூறுதல் இயலாது என அவர் நினைக்கிறார். இக்குறளின் நோக்கம் பற்றி அவர் மேலும் 'இவை மூன்று பாட்டானும் அஃது ஈட்டும் நெறி கூறப்பட்டது' எனச் சுட்டிக்காட்டுகிறார். இதனால் இக் குறள் 'இன்ன பொருள்' ஈட்டவேண்டும் என்பதை விட அப்பொருளை 'இன்ன நெறியில்' ஈட்டவேண்டும் எனக் கூறுகிறது எனல் வேண்டும். ஆகவேதான் 'இவை மூன்று பாட்டானும்' என்பதற்கு உரிய மேல் இரண்டு பாட்டுக்களும் அரசன் தன்பொருளை 'இன்ன நெறியில் அற ஒழுக்கத்தோடு' ஈட்டவேண்டும் என வற்புறுத்திப் பேசுகின்றன:

> *அறனீனும் இன்பமும் ஈனும் திறனறிந்து*
> *தீதுஇன்றி வந்த பொருள்.* (குறள் 754)
>
> *அருளொடும் அன்பொடும் வாராப் பொருளாக்கம்*
> *புல்லார் புரள விடல்.* (குறள் 755)

'உறுபொருள்' எனத் தொடங்கும் குறளுக்கு முந்திய குறளான 755, பொருளாக்கத்துக்கு அருள் அன்பு இவற்றை வற்புறுத்துவதனை

17. The Sources of revenue according to Valluvam are three—escheats, customs, and tributes from vassal states. There is no mention of land revenue in Valluvam-a source of state revenue accepted by all writers on ancient Indian Polity. This departure of Tiruvalluvar requires to be pondered over.'—RVMPE.

இதனுடன் முந்திய அடிக்குறிப்புக்கள் காண்க.

யும் அது அரசர்க்கு ஆணையிடும் திறத்தையும் ஆழ்ந்து சிந்திக்க வேண்டும். அக்குறளின் தொடர்ச்சியே அடுத்தது என உணரவேண்டும். 'அருளொடும் அன்பொடும் வரும் பொருளாக்கமோ இவை?' என ஐயமுறத் தக்க பொருளாக்கங்களை ஐயம் தீர்த்தற் பொருட்டே இக் குறளில் தொகுத்துத் தருகிறார் வள்ளுவர் எனக் கருதலாம். இதனை நன்கு தெளிவுபடுத்துகிறார் பரிப்பெருமாள் என்னும் உரையாசிரியர்: "மேல் நியாயமாகத் தேடவேண்டும் என்றார்: இவை நியாயமோ என்று ஐயுற்றார்க்கு 'அரசர்க்கு நியாயம்' என்று கூறப்பட்டது." தெறுபொருளாகிய கொண்டியும் கொள்ளையும் திறையும் நியாயமோ என அறமுரைக்கும் குறள்படிப்பார்க்குக் கேள்வி எழலாம். உல்கு பொருளும் வள்ளுவர் காலத்தில் இத்தகைய கேள்விக்கு இடமாகியிருக் கலாம். காரணம் அது புதிதாக வடநாட்டரசுகளைப் பின்பற்றித் தென் னாட்டரசுகள் மேற்கொண்டிருந்ததாக இருக்கலாம். உல்கு என்னும் கடன்பட்ட சொல்லே இதனைக் குறிப்பாகச் சுட்டுகிறது. பிற உறு பொருள்களும் இத்தகைய கேள்விக்கு இலக்காயின என்பது தெளிவு. ஆனால் நிலத்திற்கு வாங்கப்படும் இறை இத்தகைய ஐயத்துக்கு இடமாகியிருக்காது. மக்களே மனம் உவந்து தருவது இது ஆதலால் அவ்வையத்துக்கு இடமேது?[18] ஆகவே பரிமேலழகர் கருதுகின்றபடி ஆறில் ஒன்று ஒழியக் கூறுவதே உறுபொருள் எனலாம்.

அவ்வாறானால் உறுபொருள் என்பதால் வள்ளுவர் எவற்றைக் குறிப்பிடுகிறார்? அவை 'நியாயமோ' என்ற ஐயத்துக்கு உரியவையாகி ஐயம் தீர்க்கப்படுகின்றனவா?

மேலும் உறுபொருள் என்னும் தொடரின் பொருட்போக்கும் கருதத்தக்கது. இது வினைத்தொகை. 'தானே வந்து உறும் பொருள்' எனப் பொருள் கொள்ளுதலே இங்குப் பொருத்தமாகத் தெரிகின்றது. பரிமேலழகரும் மணக்குடவரும் 'தானே வந்துற்ற பொருள்' எனவே உரைவகுக்கின்றனர். நிலவரி போன்றவை தானே வருகின்றவை

---

18. 'இந்திய அரசுகளில் முன்னாட்களில் விளையும் பொருளில் ஆறில் ஒன்று அரசனுக்கு நிலவரியாகக் கொடுக்கப்பட்டது. அந்நிலவரியே அரசின் பெருவருவாயாகவும் இருந்தது. தொன்றுதொட்டே வழக்கமாக வந்த வரியாக இருந்ததால், மக்கள் உள்ளத்தில் நிலைபெற்றுவிட்ட சட்டமாகவும் இருந்தது. ஒவ்வொரு குடிமகனும் அவ்வாறு செலுத்துவதைத் தனது 'கடமை' யாகவே கருதியிருந்தான். எனவே மக்களை வற்புறுத்தி இவ்வரியை அரசினர் பெற்றிலர். இயல்பாகவே அதனை மக்கள் அரசினருக்குத் தந்தனர். இயல்பில் செலுத்திவந்த வழக்கம் சட்டமாகவே நிலை பெற்றது'. — டாக்டர் பா நடராஜன், பக், 65, 66., வ. த. பொ.

அல்ல: அவை 'கடமை' எனத் தரப்படுபவை; அரசனுல்' நிச்சயிக்கப் படுபவை'. நிலவரியினை மணக்குடவரும் பரிப்பெருமாளும் 733-ஆம் குறளுரையில் **'நிச்சயித்த கடமை'** என உரைக்கின்றமையும் இங்குக் கருதத்தக்கது. எதிர்பாராத வகையில் முயற்சியின்றி இன்ன அளவினது என வரையறை செய்யக் கூடாது யாருக்குரியது என்ற ஐயப்பாட்டு நிலையில் அரசனுக்கு வந்து சேர்வதே இத்தகைய உறுபொருளாகலாம்.

மேல் பதினொருவருவாய்கள் எடுத்துக்காட்டப்பட்டன. அவற்றுள் நிலவரி உல்குபொருள் தெறுபொருள் ஆகியவை வள்ளுவரால் குறிப்பிடப்பட்டன என்பது முன்னர் விளக்கப்பட்டது. வார்த்தையாகிய உழவும் கால்நடையும் வணிகமும் 'வாரி பெருக்கலில்' வள்ளுவர் குறிப்பிடுவதாகப் பரிமேலழகர் கூறுகிறுர். அவை அரசன் முயற்சியால் வருகின்றவை. எஞ்சியவை உறுபொருளுக்கு உரியன எனக் கருதலாம். அவையே உறுபொருளின் பொருட்போக்கிற்கு ஏற்றவையாக இருக்கின்றன:

புதையற் பொருள்
தாயத்தார் அற்ருேர் பொருள்
குற்றவாளிகள் தண்டனைப் பொருள்
களவுப் பொருள்
பரிசுப் பொருள்

இத்தகைய பொருள்களை யார் மேற்கொள்வது? யாருக்கு உரிமை உண்டு? அரசன் மேற்கொள்ள உரிமை உண்டா? அது அறமாகுமா? என்றெல்லாம் கேள்விகள் அன்று கேட்கப்பட்டு வந்தன. இக்குறளில் இவை எல்லாம் வேந்தனுக்கு உரிய பொருள்தான் என உடன்பட்டு விளக்குகிறுர் வள்ளுவர்.

இவ்வாறு பொருள் கொள்ளுதல் பரிமேலழகர், மணக்குடவர் பரிப்பெருமாள் ஆகியோர் கண்ட உரையுடன் ஒத்துவருவதும் குறிக்கத்தக்கது.

மண்ணுலகம் எல்லாம் மன்னர்க்கே உரியது என்ற ஒரு கருத்து உண்டு. காரணம் அவனே இம்மண்ணின் காவலன். இதனுல் கனிவளமும் புதைபொருளும் கைமாருக மன்னர்க்கு உரியன வா கின்றன. மண் மட்டும் அரசனுக்கு உரியது என்பதல்ல. பிற செல்வங் களும் அவனுக்கு உரியன எனவே கருதப்படுகின்றன. ஆகவேதான் பிள்ளையும் உரிமையுடைய பிறரும் இல்லாதபோது செல்வம் அரசனைச்

சேர்கிறது. அரசன் குடிமக்களைக் காத்தோம்புகின்றபோது குற்றம் புரிவோரைத் தண்டிக்கிறான்; தண்டனையாக அவர்கள் உடைமைகளைப் பறிக்கிறான். இவ்வாறு வரும் பொருள்களும் அரசனுக்கே உரியவை ஆகின்றன. தன் நாடுகாவற் பணிக்காக அரசன் கொள்ளும் 'நன்றிப் பொருள்' என இவற்றைக் கொள்ளலாமா? நாட்டில் களவு போகாமற் காப்பதும் காவலன் கடமை. களவு போகுமானால் அதை மீட்டுத்தருவது அரசன் பொறுப்பு. மீட்க முடியாதபோதுதான் தன் உடைமையைத் தந்து அரசன் ஈடுகட்டவேண்டும். களவு போயின பொருள் கிடைத்தபோது அதற்கு உரியார் அகப்படாராயின் அப் பொருள் அரசனுக்கே உரியதாகிறது. களவுக்கு இழப்பீடு தருகின்ற காரணத்தால் உடையாரின்மையின் தானே வந்த பொருளை அரசன் உரிமையாக்கிக் கொள்ளுகின்றான்.

இத்தகைய உரிமைகள் கடமைகள் எல்லாம் சில தத்துவ உண்மைகளின் அடிப்படையிலும் அரசனுக்குக் கிடைக்கின்றன. தெய்வம் அனைத்தாற்றலும் கொண்டு அனைத்துரிமையும் பெற்ற பரம்பொருள்; அது உலகத்தைக் காத்தளிக்கிறது. அரசனும் அனைத் தாற்றலும் அனைத்துரிமையும் பெற்றுக் காத்தலும் அளித்தலும்ஆகிய கடமைகள் பூண்டவன். ஆகவே அவனும் தெய்வமாக மதிக்கப் படுகிறான். இச்சிறப்புக் காரணமாக அரசன் பல்பொருளும் பெறும் உரிமையும் உடையனாகிறான். தானே வந்துறும் பொருள்களை இத் தகைய அரசியல் உண்மைகளின் அடிப்படையில்தான் வள்ளுவர் வேந்தனுக்கு உரிமையாக்குகிறாரா என்பது அவர் நூலால் தெளிவுபட வில்லை. ஆனால் இத்தகைய உண்மைகள் இந்திய அரசியல் மரபில் வழங்கியவை.[19] வள்ளுவர் கண்ட அரசின் பொருள் வாழ்வுக்கு

---

19. 'Treasure trove was royal prerogative. There is no doubt that the king owned the treasure in the earth. The precise theory is not clear, but it seems to be that since the king was considered to be the protector of the earth the wealth in the earth was, as it were, his fee for protection. We have already seen that the king owned the mines and other mineral resources in the earth.'—P. 199, PTAI.

'Lost or stolen articles also became the property of the king, but the reasoning for that was different. The

[P. T. O.]

இவ்விந்திய மரபு எந்த அளவு உடன்படும் என இனித்தான் அனைத்திந்திய அரசியல் வரலாற்றுக் கண்கொண்டு ஆராய வேண்டும்.

## 3. 7. இயற்றல்

இதுவரை பண்டைத் தமிழக அரசுகளின் வருவாய்கள் பல்வேறு சான்றுகளின் துணைக்கொண்டு ஆராயப்பட்டன. இனி இயற்றல் என்பதால் வள்ளுவர் கருதிய வருவாய் எவை என ஆராயலாம்.

இயற்றல் என்பது பிறவினை. அரசன் முயற்சி மேற்கொண்டு தோற்றுவித்தலை இது குறித்து நிற்கிறது. ஆதலால் அரசனுக்குத் தானே வந்துறும் பொருள்கள் இவ்வியற்றலில் அடங்க மாட்டா. முன்னர்க் கண்டவாறு தானே வந்துறும் பொருள்களாவன:

1) உடையார் இன்மையின் தானே வந்துற்ற பொருள். இது களவுப் பொருளாகவும் இருக்கலாம்.
2) புதையற் பொருள்.
3) தாயத்தார் பெறுதது.

---

king was required by law to compensate for thefts committed within his kingdom. It was therefore reasonable that he should be in a position to return lost property should the owner come to claim it, but if compensation was already made the discovered stolen article should belong to the king.'—P. 200, PTAI.

'Another aspect of the extent of the king's ownership of land may be seen in discussing his authority to confiscate land and other property. In the case of criminal offences, the king was legally empowered to confiscate land as penalty....... The general doctrine seems to be that the king may confiscate the wealth only of individuals who are unrighteous,........'

'Another indication of the extent of the king's ownership of property may be seen from the fact that he inherited the estate of deceased citizens, except Brahmans on the failure of other heirs.'-PP. 200-201, PTAI.

4) பரிசுப் பொருள். இது தன் நாடு தலையளித்தலால் வருவதாகலாம்.

இவை போக எஞ்சியவை அரசன் முயற்சியால் வருகின்றவை:

1) திறையும் கொண்டியும்
2) உழவின்வழி வருவாய்
3) கால்நடை வளர்ப்பின்வழி வருவாய்
4) வணிகவழி வருவாய்
5) குற்றவாளிகள் தண்டனைப் பொருள்
6) நிலத்துக்கு உரிய இறை
7) உல்கு பொருள்

இறுதியில் உள்ள இரண்டும் அரசன் முயற்சியால் வருவனவா அல்லது தாமே வருவனவா என்பதில் கருத்து வேறுபாடு எழலாம். இறையை மக்கள் மனமுவந்து தம் கடமை எனக் கருதி அரசன் காவலுக்குக் கைமாருக இறையைத் தருகின்றனர் என்கின்றனர் அறிஞர். இன்றைய பொருளியலறிஞர் கருத்தின்படி இவ்விரண்டு துறைகளிலும் நன்முறையில் பொருள் வர அரசு தக்க சூழ்நிலைகளைப் படைத்துத்தக்க கொள்கைகளைக் கடைப்பிடிக்க வேண்டும். குற்றவாளிகள் தண்டனைப் பொருளைப் பொறுத்த வரை அரசன் குற்றவாளிகளைக் கண்டு பிடிப்பதிலும் அவர்களை ஒறுப்பதிலும் முயற்சி மேற்கொள்ள வேண்டும். 'கொலையிற் கொடியாரை வேந்து ஒறுத்தலை' (குறள் 550) வள்ளுவர் வற்புறுத்துகிறார். மேல் தொகுத்த பதினோரரசு வருவாய்களில் இன்ன இன்ன அரசன் முயற்சியால் இயற்றப்படும் பொருளாகக் கருதத் தக்கவை எனச் சிந்தித்துக் கூறப்பட்டவையே இவ்வேழும். உரையாசிரியர்கள் கருத்துக்களும் சிந்திக்கத் தக்கன.

பரிமேலழகர் 'இயற்றல்' என்பதற்குத் 'தனக்குப் பொருள் வரும் வழிகளை மேன்மேல் உளவாக்கல்' என உரை வகுக்கிறார். பின்னர் விளக்கமும் தருகிறார்:

'அவை வரும் வழிகளாவன

1) பகைவரை அழித்தலும்
2) திறை கோடலும்
3) தன் நாடு தலையளித்தலும் முதலாயின'

Kamesh

பகைவரை அழித்தலால் வருவன கொள்ளைப் பொருளும் கொண்டிப் பொருளும் ஆகும். இவற்றைத் திருவள்ளுவர் 'பொருள் செயல் வகை' என்னும் அதிகாரத்தில் உடன்படுகிறார். 'அருளொடும் அன்பொடும் வாராப் பொருளாக்கம் புல்லார் புரள விடல்' என்று கூறியதை அடுத்துத் தெறுபொருளும் வேந்தன் பொருளாதல் முறையே என்கிறார் அவர். அவர் அதற்குத் தந்த பெயர்தான் **தெறுபொருள்**. தெறுபொருள் அன்றைய சமூகத்தில் வேந்தர்க்குக் குறிப்பிடத்தக்க அளவில் பெருவருவாயாக இருந்திருக்கலாம். மன்னர்க்குப் பொருள் தேவைப்பட்ட போது மாற்றார் மண் நோக்கி அவர்கள் எழுந்தனர். இதற்குப் புறம் முதலான சங்க இலக்கியங்கள் சான்றாக நிற்கின்றன.[20]

பரிமேலழகர் 'தன் நாடு தலையளித்தலையும்' ஒருவருவாயாகக் குறிப்பிட்டிருப்பது புதுமையாக இருக்கிறது. 'அன்பு செய்து குடிகளைக் காத்தலால்' அரசருக்குச் செலவுதான் ஏற்படுமே ஒழிய வரவு எங்ஙனம் தோன்றும்? அரசன் குடிகள்மீது அன்பு செலுத்தினால் அவர்கள் மனம் மகிழ்ந்து அரசனுக்குப் பரிசுப் பொருள்கள் தரலாம் என முன்னர்ச் சுட்டிக் காட்டப்பட்டது. பரிமேலழகரே இதற்கு விளக்கமும் தருகிறார்.

> அருளொடும் அன்பொடும் வாராப் பொருளாக்கம்
> புல்லார் புரள விடல். (குறள் 755)

என்னும் குறளுக்கு அவர் உரை வகுக்கின்றபோது,

> 'தாம் குடிகள் மாட்டுச் செய்யும் அருளோடும் அவர் தம்மாட்டுச் செய்யும் அன்போடும் கூடி வாராத பொருளீட்டத்தை அரசர் பொருந்தாது கழிய விடுக என்றவாறு.
> அவற்றோடு கூடி வருதலாவது ஆறில் ஒன்றாய் வருதல்'

என எழுதுகிறார். இங்கு அரசன் குடிகள்மாட்டுச் செய்யும்

---

20. 'புலவர்கள் கொடை வேண்டி மண்ணாளும் மன்னரை நோக்கினர்; மன்னன் கொடுத்தலுக்குப் பொருள் வேண்டி மாற்றரசர் மண்நோக்கிப் படைகொண்டு எழுந்தான்' எனக் கிள்ளிவளவனை இடைக்காடனார் போற்றும் பாடல் இது:

> மலையின் இழிந்து மாக்கடல் நோக்கி
> நிலவரை இழிதரும் பல்யாறு போலப்
> புலவர் எல்லாம் நின்நோக் கினரே:
> நீயே, மருந்துஇல் கணிச்சி வருந்த வட்டித்துக்
> கூற்று வெகுண்டன்ன முன்பொடு
> மாற்றுஇரு வேந்தர் மண்நோக் கினையே. (புறம் 42: 19-24)

அருளொடு ஆறில் ஒன்ருய் வரும் இறையை உறவுபடுத்துகிருர் பரிமேலழகர். வள்ளுவரும் வினைத்தூய்மை என்னும் அதிகாரத்தில் **'சலத்தால் பொருள் செய்து ஏமார்த்தலைக்'** கடிகிருர். சலத்தால் என்பதற்குத் 'தீய வினைகளால்' எனவே பரிமேலழகர் உரை எழுது கிருர். தீய வினைகள் 'அருளும் அன்பும் அரசன் தலையளியும் இல்லாத வழிகள்' எனலாம். இவற்ருல் அரசனுக்கு வருவாய் உண்டாகாது. ஆகவேதான் இக்குறளுரையில் பரிமேலழகர் **'அரசனும் பொருளும் சேரப்போம் என்பதாம்'** எனச் சுட்டிக்காட்டுகிருர். இவ்வாறு அரசன் தலையளித்தல் பொருள் வருவாய்க்கு மறைமுகமாக உதவுதல் தெளிவாகிறது.

இக்கருத்துக்கள் எல்லாம் திருக்குறள் உரையாசிரியர்கள் எடுத்துக் காட்டுபவை. ஆனல் வள்ளுவரே இன்னவாறு இயற்றல் என்பது பற்றி ஒன்றும் தம்நூலில் கூறவில்லை. வள்ளுவர் நோக்கமும் நூலும் அத்தகையன. இருந்தும் இயற்றல் பற்றி விளக்குவது போன்று ஒரு குறள் இருக்கிறது.

வாரி பெருக்கி வளம்படுத்து உற்றவை
ஆராய்வான் செய்க வினை. (குறள் 512)

இப்பாடல் அரசனுக்கு வினை செய்வார் பற்றி உரைக்கிறது. வினை செய்வார் 'பொருள்வரு வாயில்களை விரியச் செய்து அப்பொருளாற் செல்வங்களை வளர்த்து அவ்வாயில்கட்கும் பொருட்கும் செல்வர்க்கும் உற்ற இடையூறுகளை நாடோறும் ஆராய்ந்துநீக்க வல்லவராக' இருத்தல் வேண்டுமாம். 'வாரிபெருக்கல்' 'வளம்படுத்தல்' ஆகிய இரண்டும் அரசின் முயற்சியாகிய இயற்றல் என்பது புலப்படுகிறது. ஆனல் அவை இன்னவை என மீண்டும் விளக்கப்படாமலே போகின்றன. இவைபற்றி வேறெங்கும் நூலில் குறிப்பில்லை. உரையாசிரியர்கள் தம் கருத்துக்களைத்தான் தருகின்றனர்.

இக்குறளுரையில் பரிமேலழகர் "வாயில்களாவன மேல் இறை மாட்சியுள் இயற்றலும் என்புழி உரைத்தனவும், **உழவு, பசுக்காவல், வாணிகம்** என்னும் வார்த்தையுமாம்" என விளக்குகிருர்.

அடுத்துப் பரிப்பெருமாள் கருத்துக் கவனிக்கத் தக்கது:

"பொருள் வருவதற்கு இடமானவற்றை முன்பு நின்ற நிலையிற் பெருக்கி அவ்விடங்களில் உண்டாகும் பயனை முன்பு நின்ற

நிலையில் உண்டாக்கி அவ்விடத்துற்ற மிகுதி குறைவுகளை ஆராய வல்லவன் வினை செய்வானாக என்றவாறு.

பொருள் வருவதற்கு இடமாவது **நிலம் முதலான இடம்.** அதனைப் பெருக்குதலாவது, **காடு கெடுத்து நாடாக்குதல்** முதலாயின. வளம் படுத்தலாவது, பயிர் ஏற்றுங்கால் **வான் பயிர் ஏற்றுவித்தலும் பாழான இடங்களில் குடியேற்றி ஆயம் பொருள் உண்டாக்குதலும்** .. ...”

இயற்றல் என்பதற்கும் வாரி பெருக்கி வளம் படுத்தல் என்பதற்கும் இடையே அமைந்த உறவினைப் பரிமேலழகர் கண்டு கொண்டுள்ளார். ஆனால் பரிமேலழகர் குறிப்பிடும் உழவு, பசுக்காவல் வணிகம் என்னும் வார்த்தை பற்றித் திறக்குறளிலும் பேச்சில்லை; சங்க இலக்கியங்களும் சான்று பகரவில்லை. (இவை பற்றி முன்னரும் கூறப்பட்டது. காண்க 3. 5. 4.)

பரிமேலழகர் கருத்தைவிடப் பரிப்பெருமாள் கருத்துத் தமிழ கத்து நிலையை ஒத்திருப்பதாகத் தோன்றுகிறது. நிலம், காடு, நாடு, பயிர்த் தொழில், குடியேற்றம் முதலானவைபற்றி அவர் பேசுகிறார். நிலம் முதலான இடம், காடுகெடுத்து நாடாக்குதல் முதலாயின என மேலும் பலவற்றை உள்ளத்திற் கொண்டு அவர் எழுதுகிறார்: அவை ஏவை? அன்றை அரசர்கள் உழுதொழிலுக்குப் பயன்படுமாறு காடு கெடுத்தல், குளம் வெட்டல், நீர்நிலை பெருக்கல், வழி அமைத்தல், வயல் அமைத்தல் முதலியன செய்து நாட்டு வளத்தைப் பெருக்கி யிருக்கிறார்கள். பண்டை இலக்கியங்கள் இதற்குச் சான்று தருகின்றன:

காடுகொன்று நாடாக்கிக்
குளம் தொட்டு வளம்பெருக்கி
...................... .... ...................
கோயிலொடு குடிநிறீஇ.

இவற்றை ஓர்அரசன் பணியாகப் பட்டினப்பாலை (283 - 286) பேசுகிறது. இதனை நீதி நூல்களும் அன்று வற்புறுத்தின:

குளம்தொட்டுக் காவு பதித்து வழிசித்து
உளம்தொட்டு உழுவயல் ஆக்கி வளம்தொட்டுப்
பாகுபடும் கிணற்றோடு என்றுஇவை பாற்படுத்தான்
ஏகும் சுவர்க்கம் இனிது.

(சிறு பஞ்சமூலம் 64)

குடபுலவியனார் என்னும் புலவர் பாண்டியன் நெடுஞ்செழியனை "வயவேந்தே, நீ மறுமைப் பேருகிய துறக்கவின்பம் வேண்டினும் இம்மைக்கண் ஒரு பேரரசனாய்ப் புகழ் எய்த வேண்டினும் நாட்டில் நீர்நிலை பெருக அமைக்க வேண்டும். வித்தி வான் நோக்கும் புன்புலம் வேந்தன் முயற்சிக்கு வேண்டுப உதவாது; ஆகவே நீர்நிலை பெருக அமைப்பாயாக" என வேண்டிக்கொள்ளுகிறார்.

நிலன்நெளி மருங்கின் நீர்நிலை பெருகத்
தட்டோர் அம்ம இவண் தட் டோரே;
தள்ளாதோர் இவண் தள்ளா தோரே. (புறம் 18)

என்பது அவர் அறிவுரை. இவற்றால் எல்லாம் பண்டை மன்னர் நாட்டை வளப்படுத்திச் செல்வத்தை வளர்த்ததை அறிகிறோம். 'வாரி பெருக்கி வளம்படுத்து' என்கின்றபோது வள்ளுவர் இக்கருத்துக்களை மனத்தில் கொண்டிருப்பார் என்பதில் ஐயமில்லை. எத்தொழிலையும் குறிப்பிடாது உழுதொழில் ஒன்றை மட்டுமே குறிப்பிட்டு வற்புறுத்திப் போகும் வள்ளுவர் அதிகாரம் இதற்குச் சான்றாக நிற்கிறது. இக்கருத்துக்களைத் தந்துரைக்கும் பரிப்பெருமாள் உரை. வள்ளுவர் கருத்தும் காலமும் உடன்பட அமைந்திருக்கிறது எனலாம். பரிமேலழகர் வடமொழி மரபைக் கண்மூடிப் பின்பற்றுகிறார் என்பது அவர் உரையால் புலப்படுகிறது

## 3. 8. அன்றும் இன்றும் பிற வருவாய்கள்

இன்றையரசுகள் பேராற்றலோடு பெரும்பணிகள் புரிந்து வருகின்றன. அவற்றுக்கு ஏராளமாகப் பொருள் தேவை. அப்பொருளை அவை பல வழிகளில் பெறுகின்றன. இன்றைய அரசுகளுக்கு மிக முக்கியமான வருவாய்வழி நேர்முக மறைமுக வரிகள் தான். வருமான வரி, உள்நாட்டு வெளிநாட்டுச் சுங்க வரிகள், தொழில் வணிக விற்பனை வரிகள் முதலானவை இன்று குறிப்பிடத்தக்கவை. நிலவரி ஒரு காலத்தில் பெரிதாக விளங்கியது. இன்று மற்றவற்றோடு ஒப்பிடுகின்றபோது அது சிறிதாகத் தோன்றுகிறது. பண்டை அரசுகள், தமிழகத்தைப் பொறுத்தவரை நிலவரி, சுங்க வரி ஆகியவற்றை வாங்கி வந்தன. வள்ளுவரும் இவற்றை உடன்படுகிறார்.

இன்றையரசுகளுக்கு மற்றொரு வருவாய் வழி நிலம் காடு முதலான உடைமைகளும் தொழில் வணிகம் முதலான பணிகளும் ஆகும் விற்பனையாலும் வாடகையாலும் அரசுக்கு வருமானம் வரலாம். ரயில் வண்டி, அஞ்சல், நீர்ப்பாசனம் முதலியவற்றாலும் இன்றையரசுகள் வருமானம் பெறுகின்றன. இத்தகைய வழிகள் பண்டையரசுகளுக்கு இருந்தனவா என்பது தெளிவுபடவில்லை. குறளிலும் குறிப்பொன்றும் இல்லை.

இன்றையரசுகள் மக்களிடமிருந்தும் செல்வர்களிடமிருந்தும் அயல் நாடுகளிடமிருந்தும் கடன் வாங்குகின்றன; வட்டியும் முதலுமாகப் பின்னர்த் திருப்பித் தருகின்றன. இத்தகைய வருமானம் பற்றித் திருக்குறளோ பண்டையிலக்கியங்களோ எந்தக் குறிப்பும் கொண்டிருக்கவில்லை. இன்றைய கடன்கள் இருசாராரின் ஒப்புதலுடனும் உடன்பாட்டுடனும் கொடுத்து வாங்கப்படுகின்றவை. அன்று சிலபோது அரசுகள் செல்வர்களையும் பொதுமக்களையும் அச்சுறுத்தியோ அலைத்தோ பொருள் பெற்றிருக்கலாம்.

வேலொடு நின்றான் இடுஎன் றதுபோலும்
கோலொடு நின்றான் இரவு. (குறள் 552)

இன்மையின் இன்னாது உடைமை முறைசெய்யா
மன்னவன் கோற்கீழ்ப் படின். (குறள் 558)

என்ற குறள்கள் அரசன் அலைத்துப் பெறுதலைக் –கவர்தலைக்– குறிக்கின்றன. ஆனால் இத்தகைய வழியை வள்ளுவர் கொடுங்கோன்மை என இகழ்கிறார். கடனிலிருந்து வேறுபட்டது இக்கொடுமை.

இன்றையரசுகள் நாணயங்களும் பணத்தாள்களும் வெளியிடுகின்றன. இவற்றால் அரசுக்கு வருவாயுண்டு. அன்று நாணயங்களும் உண்டு; வள்ளுவர் காலத்திலும் காசு உண்டு. ஆனால் பணத்தாள் இல்லை. அன்றையரசுகள் நாணய வெளியீட்டால் வருவாய் பெற்றிருக்கலாம். ஆனால் வள்ளுவர் இது பற்றி ஒன்றும் குறிக்கவில்லை. இன்றையரசுகள் பணத்தாளைத் தன் அதிகாரத்தால் அளவுக்கு மீறி வெளியிட்டுப் பொருளாகக் காட்டிக் கொள்ளுகின்றன. இத்தகைய 'மாயங்கள்' இந்தக் காலத்துக்கே உரியன.

இன்றையரசுகள் போர்க்காலங்களில் தோற்ற அரசிடமிருந்தும் தொல்லை தந்த அரசிடமிருந்தும் இழப்பீடு பெறுகின்றன. இதையே அன்று தெறு பொருள் என்றும் திறை என்றும் வழங்கினர்

குற்றவாளிகளிடமிருந்து தண்டப்பொருளும் கட்டணங்களும் (Fees) பரிசுகளும் இன்றையரசுகள் பெறுகின்றன. இவை அன்றையரசுகளுக்கு வள்ளுவர் உடன்பட்ட வருமானங்கள் தான்.

## 3. 9 ஈட்டல்

இயற்றலை அடுத்து ஈட்டலைத் தருகிறார் வள்ளுவர். அரசின் வருவாய் வழிகளை மேன்மேலும் தோற்றுவித்தலே இயற்றல் என்று கண்டோம். இவ்வாறு பல்வழிகளில் **'வந்தவற்றை ஒருவழித் தொகுத்தல்'** ஈட்டலாகும் என உரைவகுக்கிறார் பரிமேலழகர். ஆனால் எவ்வாறு தொகுத்தல் என வள்ளுவரோ பரிமேலழகரோ எங்கும் விளக்கவில்லை, இயற்றலை அடுத்த நிலையில் ஈட்டலின் பொருளும் தெளிவுபடவில்லை. பரிப்பெருமாள் என்னும் உரையாசிரியர் ஈட்டலை **வளர்த்தல்** என்கிறார். ஆனால் அவரும், வளர்த்தல் எவ்வாறு என்று விளக்கவில்லை. வளர்த்தல் ஏதாவது ஒருவழியிலானால் அவ்வழியும் இயற்றலாய் அடங்கும். அவருக்கு இயற்றலாகிய தேடுதல் வேறும்; ஈட்டலாகிய வளர்த்தல் வேறும். இன்றை யறிஞர், ஈட்டலுக்கு **விற்றுப்பொருளீட்டல், வாணிகஞ் செய்தல்** என உரைகூற முயலுகின்றனர்.[21] ஆனால் வாணிகம் இயற்றலில் அடங்காதா? பண்டைத் தமிழக அரசுகள் வாணிகம் செய்தனவா என இனி ஆராய வேண்டும். இவ்வேறுபட்ட உரைகள் ஈட்டலுக்குப் பொருள் காண்பதிலே உள்ள சிக்கலைச் சுட்டுகின்றன எனலாம்,

இயற்றலுக்கு இணையாக ஈட்டலுக்கும் சிறப்புத்தந்து இக்குறளை வள்ளுவர் இயற்றியிருக்கிறார். ஆனால் இயற்றலை அவர் விளக்காதது போலவே ஈட்டலையும் விளக்கவில்லை, இன்றைய அரசுகளுக்கு Financial administration ஒரு பெரும்பணி. மக்கள் இறையையும் பிறவற்றையும் தாமே கொண்டுவந்து கொடுத்தல் அருமை. அரசே அவற்றைப் பெறுவதற்கு வழிகள் மேற்கொள்ள வேண்டும். இன்றைய அரசுகளில் ஒவ்வொரு வருவாய்க்கும் ஒவ்வொருதுறை அமைக்கப்பட்டுப் பல்லாயிரவர் பணிபுரிதல் தெரிந்ததே. இவர்கள் வருவாயை வாங்கி அரசின் கருவூலத்தில் சேர்க்கின்றனர். பல்வேறு அதிகாரிகள் இப்பணியில் பங்கு கொண்டிருக்கின்றனர். இதேபோன்று பண்டை அரசுகளில் பல்வேறு அதிகாரிகளும் பணியாட்களும் இப்பணியில் ஈடுபட்டிருந்திருக்கவேண்டும். சிலப்பதிகாரம் **ஆயக்கணக்கர்** என்பாரைப்பற்றிப் பேசுகிறது:

---

21. தெ. பொ. மீ., பொ. நூ. க.

சிறையோர் கோட்டம் சீமின்; யாங்கணும்
கறைகெழு நல்லூர்க் கறைவீடு செய்ம்என
**அழும்பில் வேளொடு ஆயக் கணக்கரை**
முழங்குநீர் வேலிமூதூர் ஏவி

(சிலம்பு 28 : 203-206)

கறை (வரி) வீடு செய்தலுக்கு ஆயக்கணக்கரைச் செங்குட்டுவன் ஏவுதல் பற்றி இப்பகுதி குறிக்கிறது. ஆயம் என்பது குடியிறை (பிங்கலந்தை). கறைபெறும் பணியாளர்தான் ஆயக்கணக்கராக இருத்தல் வேண்டும். அழும்பில்வேள் இவ்வாயக்கணக்கரின் அதிகாரியாக வருவாய்ப் பொறுப்பேற்றவராகலாம் எனப் பொருள் கொள்ள இச்சிலப்பதிகாரப் பகுதி இடம் தருகிறது.[22] **காவிதி** என்னும் அரசதிகாரிகளைப் பற்றியும் சிலப்பதிகாரம் குறிப்பிடுகிறது. காவிதி என்பார் **வரியிலார்** எனச் சிலப்பதிகார உரையாசிரியர் விளக்குகிறார். **எண்பேராயத்துள்** ஒருவர் ஆகிய கரணத்தியலவர் எனப்படுவார் வருவாய் அதிகாரிகள் எனக் கருதப்படுகின்றனர். பூம்புகார்த் துறைமுகத்தில் 'நல்லிறைவன் **தொழில் மாக்கள்**' உல்கு செய்தலைப் பட்டினப்பாலை பேசுவது முன்னர் எடுத்துக்காட்டப்பட்டது [3. 5. 4. 8.]. இக்கருத்துக்கள் எல்லாம் அன்று அரசு வருவாய்களைத் தொகுப்பதற்கு முறையாக அதிகாரிகள் இருந்தமையையும் அவர்கள் முறைப்படி கணக்கிட்டு அவற்றை வாங்கி வந்தமையையும் தெளிவாக்குகின்றன. வருவாயை அன்றைய அரசுகள் பொருளாகவோ பண்டமாகவோ பெற்றிருக்கலாம். உல்குபோன்ற வருவாய்களைப் பணமாகப் பெற்றிருக்கலாம்.[23]

---

22. 'We hear of a revenue official Alumbil Vel who was in charge of revenue matters in the days of Cheran Senguttuvan; he was perhaps assisted by revenue accountants called Ayakkanakkar. Ayam means 'tolls' and ayakkanakkar were those who maintained accounts about tolls.'—P. 211, SP.

23. 'The land tax collected by the king's revenue officials was either in kind or in cash. The customs officials who collected ulgu on imported and exported commodities probably collected only cash.'-P. 215 SP.

'It is very likely that the land taxes were paid in kind and much of our literature refers to the amount of produce rather than its monetary value.'-P. 194, PTAI.

பெற்ற வருவாயைப் போற்றிவைப்பதற்த ஓரமைப்பு வேண்டும். இன்றைய அரசுகளுக்கு அது Government treasury என்பதாகவோ Reserve Bank என்பதாகவோ விளங்குகிறது. அன்று அது **கருவூலம்** அல்லது **பண்டாரம்** எனப்பட்டது. அது பெரும்பாலும் அரசனது அரண்மனையில் இருந்திருக்கவேண்டும். இக் கருவூலத்தின் பொறுப்பேற்ற அதிகாரிகளும் கணக்காளர்களும் இருந்திருக்கவேண்டும். சங்க காலத்திலேயே நாணயங்கள் இருந்திருக்கின்றன. **காசு** என்ற சொல் அன்றே வழங்கியது. **காணம், பொன், கழஞ்சு** ஆகியவை நாணய வழக்குக்குச் சான்றுகள். இவற்றின் பொறுப்பேற்ற அரசின் அதிகாரிகளும் இருந்திருக்க வேண்டும்.

இத்தகைய கருத்துக்களை உள்ளத்தில் இருத்தியே ஈட்டல் என்பதை வள்ளுவர் குறிப்பிட்டாரோ எனக் கருத நேர்கிறது. இயற்றலை அடுத்தும் காத்தலுக்கு முன்னும் ஈட்டலை வைத்தது இவ்வாறு கருத இடந்தருகிறது. இவ்வாறே பரிப்பெருமாளும் மணக்குடவரும் உரை வகுக்கின்றனர். இக்குறள் கூறுவது இதுவே என அவர்கள் சுட்டிக் காட்டுகின்றனர்:

'இது பண்டாரம் கூறுமாறு கூறிற்று' — மணக்குடவர்
'இது பண்டாரம் கூட்டுமாறு கூறிற்று' — பரிப்பெருமாள்

பரிமேலழகர் குறிப்பிடும் 'ஒருவழித் தொகுத்தலுக்கும்' இவ்வாறு பொருள் கொள்ள முடியும்.

## 3. 10. காத்தல்

ஈட்டலை அடுத்துக் காத்தலைக் குறிப்பிடுகிறார் வள்ளுவர். இயற்றித் தொகுத்தவற்றை வகுக்கின்ற வரையில் காத்தல் வேண்டும். இன்றைய அரசுகள் பேராற்றலும் பேரா ஆற்றலும் பெற்றவை. காவல்துறை (Police Department) படைகள் (Armed Forces) ஆற்றல் வாய்ந்த அழிவுக் கருவிகள் இவற்றின் முன் தனிப்பட்ட குடிமக்கள் சக்தி நிற்பதில்லை. வெடிகுண்டும், துப்பாக்கியும், தானே இயங்கும் வண்டியும், விமானமும், தந்தியும், வானொலியும் இன்று அரசின் படைகளுக்கு ஆற்றல் கூட்டுகின்றவை. ஆனால் அன்று நிலைவேறு. அன்று அரசின் உடைமைகளுக்கும், மக்கள் உடைமைகளுக்கும் ஊறுகள் பல உண்டு. அரசின் கருவூலத்தை இவ்விடையூறுகளிலிருந்து காத்தல் அரசின் வன்மைக்கு ஓரெடுத்துக்காட்டு.

அன்றைய அரசுகளின் செல்வங்களுக்கு வரும் இடையூறுகளைப் பரிமேலழகர் தன் உரையில் தொகுத்துத் தருகிறார்:

''காத்தல் - தொகுத்தவற்றைப் பிறர் கொள்ளாமல் காத்தலும். பிறர் என்றது **பகைவர், கள்வர், சுற்றத்தார், வினை-செய்வார்** முதலாயினோரை.'' [24]

பகைவர் என்பார் பகை நாட்டரசர். ஓரரசன் தனக்குப் பொருள்தேவை ஏற்படுகிறபோது கொண்டியும் திறையும் எதிர் பார்த்து மாற்றரசனைத் தாக்குதல் இயல்பான நிலையில் அவ்வரசனை அம்மாற்றரசன் எப்போதும் தாக்கலாம். 'வல்லான் வகுத்ததே வாய்க்கால்' என்பது அறமாக விளங்கிய காலம் அது. பகைவர் ஒரு பேரிடையூறுதான்.

இன்று ஆங்கிலஅரசு அமைந்து ஊர்தோறும் காவல் நிலைகளை அமைத்த பின்னரே கள்வர் நிலை குலைந்தது. **ஆறலை கள்வர்** பற்றி அன்றை இலக்கியங்கள் பரக்கப் பேசுகின்றன. **கட்டுண்மாக்கள்** என்னும் கள்வர் பற்றிச் சிலப்பதிகாரத்து வேட்டுவவரி (வரி, 19) குறிப்பிடுகிறது. கள்வரிடமிருந்து குடிமக்களைக் காத்தல் அன்றைய அரசர்க்கு ஒருபெரும்பணி.

சுற்றத்தார் என்னும் இடையூறு, அரசன் உறவினராகவும் இருக்கலாம். பிறராகவும் இருக்கலாம். அவர்கள் அட்டை போன்றும் இருக்கலாம்; பெருச்சாளி போன்றும் இருக்கலாம். அவர்கள் அரசுடைமைகளை அதிகாரம் செய்தும் உண்ணலாம்; கவர்ந்தும் உண்ணலாம். அன்றைய அரசவாழ்வு அத்தகையது. அன்று அரசுவேறு; அரசன் வேறு என்ற நிலை இருந்திருக்காது.[25] இன்று அரசு வேறு; அரசின் அமைச்சர்கள், அதிபர்கள், செயலர்கள், பணியாட்கள் வேறு என்ற கருத்து நிலைபெற்றுள்ளது; ஆகவே அரசுடைமையும் வருவாயும் தனிப்பட்ட எவருக்கும் உரிமையில்லை. ஆதலால் இன்று சுற்றத்தார் 'சுருட்டுதல்' இல்லை.

அடுத்த இடையூறு அரசன்வினை செய்வார். இவர்கள் அரசியல் 'தொழில் செய்யும் பரிவாரங்கள்' (Government servants). கையாடலும் கையூட்டும் அன்றின்றெனுதபடி என்றும் உளபோலும்.

---

24. இதே கருத்தைப் பரிமேலழகர் 512-ஆம் குறளுரையிலும் தருகிறார்.

இவற்றிலிருந்து அரசின் வருவாய்களைக் காத்தல் வேண்டுவது சொல்லாமலேயே பெறப்படும்.

அரசின் வருவாய்களுக்கு இந்நால்வழிகளிலும் இடையூறுகள் எங்ஙனம் வந்தன என்பது பற்றிக் குறிப்பாக நமக்கு ஒன்றும் வரலாறு கிடைக்கவில்லை. பரிமேலழகர் எடுத்துக்காட்டுபவை இடைக் காலத்து நிலைகளாக இருக்கலாம். இவைபற்றி வள்ளுவரே ஒன்றும் சுட்டாதபோது உரையாசிரியர் கருத்துக்கள் ஓரளவாவது சுட்டுகின்றன எனக் கொள்ளலாம்.

## 3. 11. 1. வகுத்தல்

இயற்றி ஈட்டிக் காத்த செல்வத்தைத் தக்க வழிகளில் தக்கவற்றிற்குச் செலவிடல் வேண்டும். இதுவும் அரசன் பொறுப்பு. ஆனால் வள்ளுவர் இயற்றலும் ஈட்டலும் காத்தலும்பற்றி விளக்கம் தராதது போலவே வகுத்தல் பற்றியும் விளக்கம் தராது போனார். வள்ளுவர் காலத்து வரலாற்றையும் பிற காலத்து உரையாசிரியர்களையுமே இதற்கும் நாடவேண்டியிருக்கிறது. வகுத்தல் என்பதற்குச் செலவிடுதல் என்பது பொருள்.

பரிமேலழகர் செலவினை இவ்வாறு வகுத்துரைக்கிறார்:

> "காத்தவற்றை **அறம் பொருள் இன்பங்களின் பொருட்டு** விடுத்தல்.
>
> கடவுளர் அந்தணர் வறியோர் என்றிவர்க்கும், புகழிற்கும் கொடுத்தலை அறப்பொருட்டாகவும்,
>
> யானை குதிரை படை நாடு அரண் என்ற இவற்றிற்கும், பகையொடு கூடலின் பிரிக்கப்படுவார்க்கும், தன்னிற் பிரிதலின் கூட்டப்படுவார்க்கும் கொடுத்தலைப் பொருட்பொருட்டாகவும்,
>
> மண்டபம் வாவி செய்குன்று இளமரக்கா முதலிய செய்தற்கும், ஐம்புலன்களால் நுகர்வனவற்றிற்கும் கொடுத்தலை இன்பப் பொருட்டாகவும் கொள்க."

பரிமேலழகர் உரையிலிருந்து கீழ்க்கண்டவாறு அரசுக்குரிய செலவுகளை அறியமுடிகிறது.

1. கொடைச் செலவு
2. நாடுபாதுகாவற் செலவு

3. அயல்நாட்டுறவுச் செலவு
4. மக்கள் நலப்பணிச் செலவு

பரிமேலழகர் எடுத்துக்காட்டும் இவற்ருேடு மட்டும் அன்றைய அரசின் செலவுகள் முடிந்திருக்கும் என்று எண்ணுவது தவறு. பண்டையிந்திய அறிஞர் கருத்துக்களைக் காணுகின்றபோது அரசுகளுக்கு மேலும் செலவுகள் உண்டு என்பது தெரிய வருகிறது அரசன், தன் பரந்த நாட்டை நன்முறையில் ஆள்வதற்கு அமைச்சர், தூதர், ஒற்றர், ஆயக்கணக்கர் முதலிய அதிகாரிகளையும் பல்வேறு நிலைகளில் பல்வேறு அதிகாரிகளையும் அமர்த்தியிருந்திருத்தல் வேண்டும். இவர்களுக்குச் சம்பளம் கொடுத்துப் போற்றுதல் அரசன் பொறுப்பாகும். **இவ்வரசு நடைமுறைச் செலவும்**(5) அன்று அரசுக்கு ஒருபெருஞ்செலவே.

அரசனது **அரண்மனைச் செலவு**(6) குறிப்பிடத்தக்கது. அரசன் குடும்பமும் அவனைச் சார்ந்தோரும் அவர்களுடைய குடும்பங்களும் சேர்ந்த அரண்மனை வாழ்க்கை மிகப்பெரிதாக—ஒரு நகரம் எனக் கருதத்தக்க அளவு—இருந்திருக்கும். அரசன், அவன் சுற்றத்தார் ஆகியோர் மிகப்பெருவசதிகளுடனும் இன்பங்களுடனும் வாழ்வர். அந்த நாட்டு மக்களின் வாழ்க்கைத் தரத்தைவிடப் பன் மடங்கு உயர்ந்த தரவாழ்க்கையை அவர்கள் மேற்கொண்டிருந்திருக்க வேண்டும். அரசன், விரும்பிய அனைத்தும் பெற்றுப் பெருவாழ்வு வாழ்வோனக இருந்திருப்பான். இந்நிலையில் அரசன் செலவு வேறு; அரசின் செலவு வேறு என்ற பாகுபாடும் அன்று இருந்திருக்காது.[25]

இவைமட்டுமல்லாது அரசன் நடத்தும் விழா, சமயச் சடங்குகள் முதலியவை ஒருபெருஞ்செலவு. பஞ்சம் பட்டினி- இவற்றின்போது அரசன் பொறுப்புக் கூடுகிறது. இவற்றின் பொருட்டும் அரசன் செலவு செய்திருக்கவேண்டும். மக்கள் பல்வேறு காரணங்களால் இழந்தவற்றுக்கு ஈடுதருதல், களவு போன பொருள்களுக்கு ஈடுதருதல் முதலியவையும் அரசன் செலவைக் கூட்டியிருக்க வேண்டும். இவை **பல்வகைச் செலவுகள்** (7).

---

25. 'The distinction between private domestic royal expenditure and public expenditure was not understood; and how the royal revenues were spent could not be enquired into.' —P. 210, SP.

இன்றையறிஞர்கள் இன்றைய அரசுகளின் செலவினங்களைக் கீழ்க்கண்டவாறு பிரித்துக் காணுகின்றனர்:

1) போர்க்காலத்துக்கும் அமைதிக்காலத்துக்கும் ஒருங்கு தேவைப்படும் படைகள், காவல் துறைகளுக்கு ஆகும் செலவு

2) நீதித்துறைச் செலவு

3) அரசின் தலைவருக்கு ஆகும் செலவு

4) அரசின் அலுவலும் அலுவலரும் கொண்ட ஆட்சிக்கு ஆகும் செலவு

5) பொதுக்கடன்கள்

6) தொழில் வணிகம் பற்றிய செலவு

7) கல்வி, பொதுநலம், வேலை வாய்ப்புக்கள் முதலியவற்றுக்கான செலவுகள்

இன்றையரசுகளின் செலவுகள் பல்வேறாக விரிகின்றன ஆனாலும் அவற்றை இவ்வாறு தொகுத்துக்காணலாம்.

முன்னரே எடுத்துக்காட்டியது போன்று வள்ளுவர், அரசின் வகுத்தலை எங்கும் சுட்டிக்காட்டவில்லை என்பதை மனத்தில் கொள்ள வேண்டும். ஆனால் வள்ளுவர், அரசன் பண்புகளையும் பணிகளையும் கூறிச் செல்லுகின்றபோது அரசின் செலவினங்கள் பற்றிச் சில கருத்துக்கள் கிடைக்கின்றன. அவற்றைக் காணலாம்.

### 3. 11. 2. ஈகைச் செலவு

அரசன் பண்பும் பணியுமாக இது வள்ளுவரால் தரப்படுகிறது. இறைமாட்சியிலேயே

**கொடை அளி** செங்கோல் **குடியோம்பல்** நான்கும்
உடையானாம் வேந்தர்க்கு ஒளி (குறள் 390)

இன்சொலால் **ஈத்தளிக்க** வல்லாற்குத் தன்சொலால்
தான்கண் டனைத்துஇவ் உலகு (குறள் 387)

என ஈகைப்பண்பை வள்ளுவர் வற்புறுத்துகிறார். மேலும்

ஆற்றின் அளவுஅறிந்து ஈக; அதுபொருள்
போற்றி வழங்கும் நெறி (குறள் 477)

எனவும்

உளவரை தூக்காத ஒப்புர வாண்மை
வளவரை வல்லைக் கெடும் (குறள் 480

எனவும் வலியுறிதலில் ஈகைக்கு எல்லை வரைகிறார் அவர். இவை அனைத்தும் அரசனுக்கு 'அரசியலில்' கூறப்படுகின்றவை. குடிமக்கட்குக் குடியியலில் ஓரதிகாரமான 'நன்றியில் செல்வம்' என்பதில் கூறப்படுகின்றவை இவற்றிலிருந்து வேறானவை வள்ளுவர் **கொடை ஈகை ஒப்புரவாண்மை** என்னும் பல சொற்களை இதன் பொருட்டுப் பயன்படுத்தல் கொடையின் தேவையை வற்புறுத்துவதாகக் கொள்ளலாம். **அளி, குடியோம்பல்** (குறள் 390) என்னும் சொற்களும் அரசனின் ஈகைப்பண்பைச் சுட்டுவனவாகக்கொள்ள இடம் தருவன. மேல் வகுத்தலை விளக்குகின்றபோது பரிமேலழகர் கடவுளர், அந்தணர், வறியோர் ஆகியோர்க்குக் கொடுத்தலைக் குறிப்பிடுகிறார். இது ஓரளவு வடநூல் மரபின் வர்ணாசிரமதருமம் பற்றிக் குறிப்பிடப்படுகிறது. இவற்றுக்குக் குறளில் இடம் இல்லை. கொடை என்பதற்குப் பரிமேலழகர் உரைவகுப்பது போன்று அரசரின் ஈகைப்பண்பு எல்லா இடங்களிலும் 'வேண்டுவார்க்கு வேண்டுவன கொடுத்தலையே' குறிக்கும்.

சங்ககாலத்து அரசர் கொடைக்குப் பேர்போனவர்கள்; 'செல்வத்துப்பயனே ஈதல்' எனக் கருதியவர்; 'மேலுலகம் இல் எனினும் ஈதலே நன்று' என எண்ணியவர்; புலவர்க்கும் பாணர்க்கும் பாடினியர்க்கும் கூத்தர்க்கும் வறியோர்க்கும் வரையாது கொடுத்துப் புகழுடம்பு எய்தினர். பண்டையரசர், ஈட்டியதையெல்லாம் கொடுத்தனர்; கொடுப்பதற்கு என்றே ஈட்டினர்; கொடுக்கமுடியாதபோது நாணினர். 'ஈதல் இயையாத போது சாதலும் இனிது' (குறள் 230) என வள்ளுவர் இல்லறத்தாருக்கு உரைத்தது நாடாளுவாருக்கு இல்லை எனக் கருதமுடியாது. இச்செய்திகளை எட்டுத்தொகையும் பத்துப் பாட்டும் பறையறைந்து நிற்கின்றன.

வேந்து தந்த பணிதிறையான்
சேர்ந்தவர் கடும்பு ஆர்த்தும்
ஓங்கு கொல்லியோர் அடுபொருந! (புறம் 22 : 26—28)

திருந்துஎழில் பலபகடு
பகைப்புல மன்னர் பணிதிறை தந்துநின்
நகைப்புல வாணர் நல்குரவு அகற்றி
மிகப்பொலியர்தன் சேவடி (புறம் 387 : 11—14)

ஈட்டியதெல்லாம் இதன்பொருட்டு என்பதே காட்டிய கைவண்மை' யாகவே இவற்றைக் கொள்ளலாம். வறுமை குடிகொண்டிருக்கும் மனையகத்தில் வாட்டமுற்ற குழந்தைகள், ஆறுதல் சொல்லத்தெரியாத அன்னையின் முகத்தை நோக்க அவள், செய்வதறியாது கலங்கும் கணவனது முகத்தை நோக்க வறுமையிற்செம்மை காத்த அப்புலவர், பரிசையறிந்து நல்கும் வள்ளலாம் மன்னன் முகம் நோக்க அம்மன்னன், மாற்றார் மண்ணினை நோக்கினன் என்பது அன்றை வரலாறு; அரசவாகை:

புலவர் எல்லாம் நின்நோக் கினரே;
நீயே மருந்துஇல் கணிச்சி வருந்த வட்டித்துக்
கூற்றுவெகுண் டன்ன முன்பொடு
மாற்றுஇரு வேந்தர் மண்நோக் கினையே. (புறம் 42 : 21—24)

கொடை எல்லாம் 'மாரிவண்கைக் கொடை' எனப் போற்றப்படுகிறது. இதனால் அரசு வருவாயின் பெரும்பகுதி கொடை வழியில் விடைபெற்றிருக்கலாம்.[26] அரசின் வருவாயில் கால்பங்கை அரசர் கொடைக்கு என்று ஒதுக்கினர் என ஒருகுறிப்புக் கூறு-கிறது.[27]

### 3. 11. 3. நாடு காவற் செலவு

நாட்டின் பாதுகாப்புச் செலவு அன்றும் இன்றும் ஒரு முக்கியச் செலவாகவே இருந்து வந்திருக்கிறது. பழங்காலத்தில்

---

26. '......many other people received benefits from the state. In the matter of financial aid and relief, we are again impressed with the humanity of ancient India. In some respects, it goes beyond that of our own civilizations even today.'—P. 187, PTAI.

27. "எல்லைக்கு ஏற்ப ஈதலாவது, ஒன்றுன எல்லையை நான்கு கூறுக்கி அவற்றுள் இரண்டனைத் தன் செலவாக்கி ஒன்றனை மேல் இடர் வந்துழி அது நீக்குதற்பொருட்டு வைப்பாக்கி, நின்ற ஒன்றனை ஈதல். பிறரும் 'வருவாயுட் கால் வழங்கி வாழ்தல்' என்றார்". —பரிமேலழகர் 477-ஆம் குறளுரை. பிறர் என்பார் திரிகடுக ஆசிரியர். திரிகடுகம் 21 காண்க.

அரசுகளின் தலையாய பணி காவற் பணியாகவே இருந்தது என வரலாற்றறிஞர்கள் கருதுகின்றனர். ஆகவே மன்னர்க்குக் **காவலர்** என்ற பெயரும் தோன்றியது. வள்ளுவரும் நாடு காவல், போர், படை இவைபற்றிக் குறிப்பிட்டுள்ளார். அரண், படைமாட்சி, படைச் செருக்கு ஆகிய அதிகாரங்கள் நிலையான காலாட்படையும் பாதுகாவல் முயற்சியும் வள்ளுவர் கண்ட அரசில் உண்டு எனக் காட்டுகின்றன. வலியறிதல், காலம் அறிதல், இடனறிதல் ஆகிய இவையும் அரசன் போர்முயற்சி பற்றிப் பேசுகின்றன. வள்ளுவர் கூறும் நட்பு முதலிய நட்பியலதிகாரங்கள் அயல்நாட்டுறவுபற்றியே பேசுகின்றன. சுருக்க மாகச் சொன்னால் '**வெல்படை வேந்தன் வெறுக்கையுள் எல்லாம் தலை**' (குறள் 761). 'கைவேல் களிற்றொடு போக்கி வருபவன் மெய்வேல் பறியா நகும்' (குறள் 774) என்ற குறள் படையுள் **யானைப் படையும்** ஒன்றாக இருந்திருக்கலாம் என்பதைச் சுட்டுகிறது. போரின் இன்றியமையாமை கருதித்தான் வள்ளுவர் அரசனுடைய உடைமை ஆறனுள் முதலாவதாகப் படையையும் முடிவானதாக அரணையும் வைத்துப் பேசுகிறார். படை, ஆறுறுப்புக்களில் ஒருறுப்பாகிறது:

> படைகுடி கூழ்அமைச்சு நட்புஅரண் ஆறும்
> உடையான் அரசருள் ஏறு. (குறள் 381)

வள்ளுவர் படைச் செலவு பற்றி வெளிப்பட ஒன்றும் கூறாதுபோயி னும் அவர் கண்ட அரசில் ஒரு குறிப்பிடத்தக்க பெரும்பொருள் காவற் செலவிற்கு இடப்பட்டிருக்கவேண்டும் என்பதை இவை வலியுறுத்து கின்றன.

### 3. 11. 4. அயல்நாட்டுறவுச் செலவு

இது போர், படைச் செலவுகளிலிருந்து வேறுபட்டது. அயலரசரிடையே பகையரசரை மாற்றி நட்பரசரைத் தோற்றுவித்தல் பொருட்டு இடப்படும் செலவு இது. இது எத்தகையது? கீழறுத்தலாலா? ஐந்தாம் படையை நிறுவியா? அல்லது ஈகையாலா?

> கொடுத்தும் கொளல்வேண்டும் மன்ற அடுத்திருந்து
> மாணாத செய்வான் பகை. (குறள் 867)

நண்பன்போல் நடித்து வஞ்சகம் புரிவோர் உறவைக் கழிப்பதற்குப் பொருளும் செலவழிக்கவேண்டும் என்கிறார் வள்ளுவர். 'வினை வலியும் தன்வலியும் மாற்றான் வலியும் துணை வலியும் தூக்கிச் செயல்' வேண்டும் இடத்தில்,

*ஆற்றின் அளவறிந்து ஈக* (குறள் 477)

எனவும்

*உளவரை தூக்காத ஒப்புரவாண்மை* (குறள் 480)

எனவும் ஈகையையும் ஒப்புரவாண்மையையும் குறிப்பிடுதல் உறவினை விற்றலாலும் வாங்கலாலும் முடிக்கலாம் எனக் கருத இடம் தருகிறது பரிதியார் என்னும் உரையாசிரியர் 'அரசன் இவர்கள் தனக்கு உதவியாவார் என்று அறிந்து பொருள் கொடாணுகில் அப் பொருளும் கெடும்; மனிதரும் கூடார் என்றவாறு' என்று விளக்கம் எழுதுதல் இதனை வலிபுறுத்துகிறது. பரிமேலழகரும் 'பேணிக் கொண்டு ஒழுகுதல், ஒருவரோடு நட்பிலாத அவனைத் தம்மோடு நட்புண்டாக்கிக்கொண்டு ஒழுகுதல்' (குறள் 477-இன் உரை) என விளக்கம் தருகிறார்.

பொருள் மாற்றாரைக் கெடுக்கிறது என்பதை வள்ளுவர் இரண்டிடத்தில் வற்புறுத்துகிறார் :

*செய்க பொருளைச் செறுநர் செருக்கறுக்கும்*
*எஃகுஅதனிற் கூரியது இல்.* (குறள் 759)

*பொருள்என்னும் பொய்யா விளக்கம் இருள்அறுக்கும்*
*எண்ணிய தேயத்துச் சென்று.* (குறள் 753)

'அரசன் பொருளுடையனானால் தான் கருதிய தேசம் எல்லாம் தன் ஆணை நடத்துவான்' (குறள் 753) என இதற்கு மணக்குடவர் எழுதுவதும் கருதத் தக்கது. ஆனால் செருக்கறுத்தலும் இருளறுத்தலும் பொருளால் எவ்வாறு இயல்கின்றன என்பதற்கு இங்கு விளக்கம் இல்லை பொருளின் பயன் கூறப்பட்டிருக்கிறதே ஒழியப் பணி கூறப் படவில்லை வரலாறே இதற்கு விளக்கம் தரல் வேண்டும்.

எவ்வாறாயினும் இது பண்டை அரசுகளுக்கு ஒரு செலவு; பெருஞ்செலவு அரசுகளிடையே நட்பினையும் பகையினையும் வளர்ப்பதற்கு இன்றைய அரசுகளும் பொருளை வழங்குகின்றன; வாரியும் இறைக்கின்றன கூடவும் கூட்டவும் பிரியவும் பிரிக்கவும் இன்று வல்லரசுகள் பொன்கொண்டும் பொருள்கொண்டும் போட்டியிடுகின்றன. பண்டைக்காலத்துக்கும் இன்றைக்காலத்துக்கும் முறை மாறியிருக்கலாம்; முயற்சி ஒன்றே.[28]

---

28. காலமாற்றத்திற்கு ஏற்ப முறை மாற்றம் ஏற்பட்டுள்ளமையை உணர்ந்து பேர். தெ பொ. மீ. இவ்வாறு எழுதுகிறார் : "முதலிலே ஆங்கிலேயர்கள் வாணிகத்தின் வழியே நம் நாட்டோடு பொருள் தொடர்புகொண்டு பின்னர் அரசியலையும் கைப்பற்றிக்கொண்டார்கள். இந்த வரலாற்றின் தத்துவத்தைப் (அடுத்த பக்கம்)

வள்ளுவர் அரசர் நட்பினைச் சிறிதாக ஒதுக்கவில்லை; பெரிதாகப் போற்றினர். அரசனுடைய ஆறு உடைமைகளுள் நட்பினையும் ஒன்றாக வகுத்ததால் நட்புக்கு அவர் தந்த ஏற்றம் புலப்படும்.

## 3. 11. 5 மக்கள் நலப்பணிச் செலவு

பரிமேலழகர் கூறுமாறு 'மண்டபம் வாவி செய்குன்று இளமரக்கா' இவற்றுக்கு அரசன் செலவிடுதல் தன்பயனுக்கா குடிமக்கள் பயனுக்கா என்ற கேள்வி எழுகிறது. இந்திய வரலாற்றில் மக்கள் நலம் கருதி அறம் பல புரிந்த அசோகன் ஞாயிறுபோலத் தோன்றுகிறான். தமிழகத்து அரசர்கள் 'காடு கொன்று நாடாக்கிக் குளந் தொட்டு வளம் பெருக்கி' யிருக்கின்றனர். காவிரிக்குக் கரை கட்டிய காவலன் கரிகாலன் என வரலாறு போற்றுகிறது. குடபுலவியனார் கோட்பாட்டுக்கு ஏற்ப 'நீர்நிலை பெருக இவண் தட்டோர்' பலர் இருந்திருப்பர். கறைவீடு செய்தான் செங்குட்டுவன் எனச் சிலப்பதிகாரம் பேசுகிறது. 'படுபொருளும் இடுபொருளும் பெற்றவர்க்கும் உற்றவர்க்கும்' உரிமையாக்கிய பாண்டிய அரசர் செவிவழிப் போற்றப்படுகின்றனர். மணக்குடவரும் பரிப்பெருமாளும் கொடை (குறள் 390) என்பதை விளக்குகின்றபோது 'கொடுத்தல் தளர்ந்த குடிக்கு விதை ஏர் முதலியன கொடுத்தல்' என்கின்றனர். அவ்வாறாயின் இது அரசன் செய்யும் அருட்பணி எனலாம். இவை எல்லாம் உழுதொழில் கருதியும் உண்பொருள் கருதியும் மன்னர் மக்களுக்குச் செய்யும் பணிகள் என்பது நோக்கத்தக்கது. தமிழகத்தில் அன்றும் இன்றும் பெரும்பான்மை மக்களின் பெரும்பணியாக

---

*பொருள்என்னும் பொய்யா விளக்கம் இருள்அறுக்கும்*
*எண்ணிய தேயத்துச் சென்று*

*என்ற குறளில் தெளிவாக்குகிறார்.''*

"நேரே சுடுபோர் செய்யும்போதல்லாமல் குளிர்போர் வளரும் போதும், பொருளாதாரப் போர் நடைபெறும்போதும், அரசியல் கொள்கை வழியே எழும் இரண்டாட்டம் மூளும்போதும், நம்மிடம் நல்லெண்ணம் இல்லாதவர்கள் நம்மை மதிக்கவேண்டும் என்று நாம் முயலும்போதும், நம்மை அதற்காக அஞ்சவேண்டும் என்று எண்ணும் போதும், பகைமையை மறந்து பிறர் நம்முடைய உதவியைத் தேட வேண்டும் என்று திட்டமிடும்போதும், இந்த வகையில் எல்லாம் நாம் விரும்பும் உலக அமைதி நிலையாக நிலவவேண்டும் என்று உழைக்கும்போதும் நாம் என்ன செய்யவேண்டும்? நம்மையும் பிறரையும் வாழவைக்கக் கூடிய பொருள் நம்கையில் நிறைய இருப்பதற்காக நம் பொருளாதார நிலையை மிகமிக உயர்த்தி விடவேண்டும். அரசியல் சூழ்ச்சி எல்லாம் இப்படி முடிவில் பொருளின் ஆற்றலாக அமைந்து விடுகிறது.

*செய்க பொருளைச் செறுநர் செருக்கறுக்கும்*
*எஃகுஅதனின் கூரியது இல்.''* —பொ. நா. க.

விளங்கியது உழுதொழிலே. அதற்கு மன்னர் முயலுதலே முதற் கடமை. இன்றைய அரசுகள் **குடிநல அரசுகள்** (Welfare States) எனக் கூறிக்கொள்ளுகின்றன. மக்களுக்குரிய கல்வி, மருத்துவம், பொதுநலம், சாலை, சத்திரம், உண்ணீர், பொதுப்பணி, வேலை வாய்ப்புக்கள் முதலியவற்றை அவை தம் பொறுப்புக்களாகக் கொள்ளு-கின்றன. அன்றும் அறநூல்கள் **அன்னதானம், வித்யாதானம், ஒளஷததானம்** ஆகியவற்றை வற்புறுத்தின. வள்ளுவரும் இவற்றை அறியாமல் இல்லை. கல்வி, கல்லாமை, மருந்து, உழவு, நல்குரவு, இரவு ஆகியவற்றின் பெருமையை வள்ளுவர் விரித்துரைப்பது அவர் உள்ளத்தை வெளியிடுகின்றது. இருந்தும் அவற்றில் வேந்தன் பங்கை அவர் சுட்டிக் காட்டவில்லை. ஆனாலும், இவற்றில் வேந்தனுக்குப் பங்கு இல்லை என்றாகாது. பங்கும் இருந்திருக்கும்; அது பற்றிச் செலவும் இருந்திருக்கும்.

### 3. 11. 6. அரசு நடைமுறைச் செலவு

இன்றை அரசுகளுக்கு ஆட்சி நடத்தும் செலவு மிகப் பெரிதாக வளர்ந்து செல்கிறது. அரசும் பல்வேறு துறைகளாக விரிந்து செல்கிறது. ஒவ்வொரு துறையிலும் பலப்பல அதிகாரி களும் எண்ணற்ற பணியாட்களும் பணிபுரிகின்றனர். அலுவலகச் செலவுகளும் குன்றுபோல உயர்கின்றன. ஆனால் பண்டையரசுகளில் நடைமுறைச் செலவே இருந்திருக்காது எனக் கூறுதல் தவறாகாது. வள்ளுவர் கண்ட அரசிலும் கூட அலுவலகங்களும் அலுவலர்களும் இருந்திருக்கின்றனர். அலுவல் என்ற சொல் அங்கில்லை; வினை என்ற சொல்லே இப்பொருளில் பயன்பட்டதாகத் தெரிகிறது.

வள்ளுவர் கண்ட அரசில் அமைச்சருக்குச் சிறப்பான இடம் உண்டு. அமைச்சர் எத்தனை பேர் என்பது புலப்படவில்லை. அவர்கள் பொறுப்புக்கள் ஒருசிலவற்றை வள்ளுவர் குறிப்பிடுகிறார். அரசருக்கு அறிவுரை வழங்கல், பிரித்தலும் பேணிக்கொளலும், பிரிந்தார்ப் பொருத்தலும், தூதுரைத்தலும் முதலியவை அமைச்சர் பணிகளாம். **தூதுரைப்போர்** பற்றி அமைச்சியலிலேயே வள்ளுவர் குறிப்பிடுகிறார்.

அரசன் பணிகளில் **தெரிந்து வினையாடல்** (அதிகாரம் 52) ஒன்று. அங்கு **வினைக்கண் வினையுடையான், வினைசெய்வான்,**

**வாரி பெருக்கி வளம்படுத்து உற்றவையாராய்வான்** என்றெல்லாம் அலுவலர்கள் பற்றிப் பேசப்படுகிறது. இவர்கள் எல்லாம் அரசலுவலராக (Government officials) இருந்திருக்கலாம். வாரி பெருக்கல் வளம்படுத்தல் உற்றவை ஆராய்தல் பெரும்பணிகள் ஆம். இன்று வருவாய்த்துறை, பொதுப்பணித்துறை, காவல்துறை என வழங்கும் துறைகளின் பணிகள் அவை.

அரசன் பணிகளில் மற்றொன்று **ஒற்றாடல்** (அதிகாரம் 59). ஒற்றர்கள், பலரும் பலபிரிவினரும் ஆவர்

ஒற்றொற்றித் தந்த பொருளையும் மற்றும் ஓர்
ஒற்றினால் ஒற்றிக் கொளல் (குறள் 588),

என்ற குறள் இதனைத் தெளிவாக்குகிறது. இன்று புலனாய்வுத்துறை (Intelligence Department) செய்யும் பணிகளை இவ்வொற்றர்கள் அன்று செய்தனர். இவர்கள் நாட்டின் அகத்தும் புறத்தும் பணி புரிந்திருக்கவேண்டும்.

**பெரியாரைத் துணைக்கோடல்** (அதிகாரம் 45) என்பது வள்ளுவர் அரசருக்குத் தரும் அறிவுரை. **அறன் அறிந்து மூத்த அறிவுடையார் கேண்மை கொளல், பெரியார் தமரா ஒழுகுதல், இடிக்குந் துணையாரை ஆள்வார்** என்ற கருத்துக்கள் முறையாக அரசனுக்கு அறிவுரை வழங்கும் 'முதியோர் குழு' இருந்திருக்குமோ என எண்ணத் தூண்டுகின்றன.[29] இவர்கள் அமைச்சரிலிருந்தும் வேறானவராகலாம். இவர்களைத் தாங்குவதும், அரசன் பொறுப்பாக இருந்திருக்கவேண்டும்.

வள்ளுவர், அரசின் அலுவலர் அனைவரையும் தம் குறளில் குறிக்கவில்லை. அது அவர் நோக்கமாகவும் தெரியவில்லை. மேற்கண்ட குறிப்புக்கள் அங்கும் இங்கும் இருந்து தொகுக்கப்பட்டவை. இங்கு எடுத்துக்காட்டப்பட்டவர்கள் போக மேலும் பலப்பலர் இருந்திருக்க வேண்டும். 'இறை ஒருங்கு நேர்வது நாடு' எனச் சொல்லப்படுகிற போது இறை வாங்குநர் இருந்திருக்க வேண்டும் எனக் கருதலாம். அரசின் கருவூலம் இருந்திருக்க வேண்டும். இவர்கள் அனைவர் பொருட்டும் அரசன் பெரும்பொருள் செலவிட்டிருந்திருக்க வேண்டும்

29. பெரியார் யார் எனப் பரிமேலழகர் இவ்வாறு விளக்குவது கருதத் தக்கது: 'அஃதாவது மூவிரு குற்றமும் முறைமையிற் கடிதலின் காவற் சாகாடு உகைத்தற்கு உரியனாகிய அரசன் தீநெறிவிலக்கி நன்னெறிச் செலுத்தும் பேரறிவுடையாரைத் தனக்குத் துணையாகக் கோடல்... ... பேரறிவுடையாராவார் அரசர்க்கும் அங்கங்கட்கும் மானுடத்தெய்வக் குற்றங்கள் வாராமற் காத்தற்குரிய **அமைச்சர் புரோகிதர்.**' (பெரியாரைத் துணைக்கோடல் முன்னுரை).

## 3 11. 7. அரண்மனைச் செலவு

அரண்மனையோ கோயிலோ கோநகரோ குறளில் இல்லை. ஆனால் குறளில் அரசன் உண்டாதலால் அவன் உறையுள் அதனுள் இருந்திருக்க வேண்டும் என நம்பலாம். சங்க காலத்திலேயே கோவாழும் கோயில் உண்டு. அவனும் அவன் சுற்றமும் அலுவலரும் ஏவலாளரும் அங்கு வாழ்ந்திருக்க வேண்டும். இதற்கு ஆன செலவு பற்றிக் குறளில் குறிப்பில்லை. பொதுவாக அரசர் செலவு அளவு கடந்திருக்கும்; எல்லா இன்பமும் அவனுக்குண்டு; எல்லா ஆடம்பரமும் அவனிடம் உண்டு என்பர். அரசனின் அரண்மனைப் பொருள்வாழ்வு பற்றி வள்ளுவர் ஒன்றும் வழங்காமற்போனாலும் அவர், அவன் வாழ்வுக்கு ஒழுக்கம் வகுத்துப் பொருள்வாழ்வுக்கு வரம்பு கட்டுதலைக் காணுகிறோம். இங்கேயே வள்ளுவரின் தனிச் சிறப்பு வெளிப்படுகிறது. காவலனைக் 'கழிபேரிரையானாக' வள்ளுவர் காணவிரும்பவில்லை. **பெண்வழிச்சேறல்**(அதிகாரம் 91) அரசர்க்கு ஓர் எச்சரிக்கை. '**வரைவில் மகளிர்** வேந்தரின் பரிவாரம்; கள் நாட்கடமை; சூது பொழுதுபோக்கு; சூது அரசர்க்கே உரிய ஆட்டம் (Royal Game)' என்பர். ஆனால் இவற்றையெல்லாம் கடிகிறார் வள்ளுவர்.

இருமனப் பெண்டிரும் கள்ளும் கவறும்
திருநீக்கப் பட்டார் தொடர்பு. (குறள் 920)

மன்னர் இன்பத்தில் செம்பாதி இதனால் குறைந்தது. **சிற்றினஞ் சேராமை**(அதி. 46) **சான்றாண்மை**(அதி. 99) **பண்புடைமை** (அதி. 100) **நாணுடைமை** (அதி. 102) ஆகிய இவற்றைப் பொருட்பாலில் அரசர்க்குச் சிறப்பாகவும் பொதுவாகவும் வற்புறுத்திச் செல்லுகிறார் வள்ளுவர். **தீ நட்பு**(அதி. 82), **கூடா நட்பு** (அதி. 83), **கயமை** (அதி. 108) ஆகியவற்றை ஆகா என அவர் கடிகிறார். இவற்றால் வள்ளுவர் கண்ட வேந்தன் துறவி போன்ற தூயோனாக இருப்பான் என்று எதிர்பார்க்கலாம். அவன் வாழ்வுக்கு உரிய கட்டுப்பாடு அவன் செலவுக்கும் உரிய கட்டுப்பாடாகவும் அமையும் என்பது தெளிவு. இந்நிலையில் வள்ளுவர் கண்ட அரசில் அரண்மனைச் செலவு உண்டானாலும் அது பிற இடங்களில் விளங்குவது போன்று அளவு கடந்து இருக்காது என நம்பலாம்.

இன்றைய அரசுகளின் தலைமையானது அரசனாகவோ அரசியாகவோ தலைவராகவோ (President) தலைமையமைச்சராகவோ

(Prime Minister) இருக்கின்றது. இன்றைய அரசுகளின் மொத்த வருவாயில் தலைமைக்கு ஆகும் செலவு சிறிதாகவே இருந்தாலும் பொதுமக்கள் நோக்கில் காணுகின்றபோது அது பெருஞ் செலவாகவே இருக்கின்றது. அது இன்று ஒரு சடங்காகவே ஆகிவருகிறது வள்ளுவர் வகுத்த அரசில் இவைபற்றிய கருத்தினை அறிய அவர் கண்ட அரசுபற்றிய ஆராய்ச்சியே துணைசெய்யும் மேலே அது ஒரு சிறிது சுட்டப்பட்டது.

### 3. 11. 8. நீதித்துறைச் செலவு

இன்றைய முற்போக்குடைய அரசுகளில் ஆட்சித்துறை (Executive) வேறு; நீதித்துறை (Judicial) வேறு; ஆள்வோரே நீதிவழங்குவோராகவும் இருத்தல் முறையல்ல என்று அறிஞர் இன்று கருதுகின்றனர். ஆகவே நீதி மன்றங்கள் பல்வேறு கட்டங்களில் தனியாக இயங்குகின்றன. தலைமை நீதிமன்றம், உயர்நீதி மன்றம் மாவட்ட நீதிமன்றம், வட்ட நீதிமன்றம், எனப் பல இயங்குகின்றன. இவற்றில் மிகப் பல நீதிபதிகள் பொறுப் பேற்றுப் பணிபுரிகின்றனர். இத்துறைக்கு ஆகும் செலவு குறிப்பிடத் தக்கதுதான்.

வள்ளுவர் கண்ட அரசில் நீதி மன்றங்கள் தனியே வழங்கினமைக்குச் சான்றில்லை. அதில் அரசனே முறை வழங்குபவன்; அவன் அவைக்களமே நீதிமன்றம்:

> **முறைசெய்து** காப்பாற்றும் மன்னவன் மக்கட்கு
> இறைஎன்று வைக்கப் படும். (குறள் 388)

> ஓர்ந்துகண் ணோடாது **இறைபுரிந்து** யார்மாட்டும்
> தேர்ந்துசெய் வஃதே **முறை.** (குறள் 541)

இவைபோன்று **முறை செய்யா மன்னவன்** குறள்கள் (548, 558) பற்றிய குறிப்புக்கள் அரசனுடைய முறைவழங்கு கடமையை வற்புறுத்திச் சொல்லுகின்றன. ஆயினும் நாடுமுழுவதும் ஏற்படும் வழக்குக்களை அரசன் ஒருவனே ஆராய்ந்து முறைவழங்குவது எவ்வளவு அருமையுடையது? ஆகவே ஊர்களில் வேறு முறை மன்றங்கள் அன்று இருந்தனவா என ஆராய வேண்டும். எவ்வாறு யினும் அரசனே முறை வழங்கும் அன்றை அரசில் நீதித்துறைச் செலவுகள் மிகமிகக் குறைவாகவே இருந்திருக்கும். செலவு பற்றிக் குறிப்பிட்டுச் சொல்லத் தக்க அளவு அது இருந்திருக்காது எனலாம்.

### 3. 11. 9 பிற செலவுகள்

விழா, சமயச் சடங்கு, பசிப்பிணிப்பணி, இழப்பீடுதரல் ஆகிய செலவுகள் பற்றி வள்ளுவர் குறளில் வெளிப்படக் கருத்துக்கள் ஒன்றும் இல்லை. வள்ளுவர் எளிய தூய அறவாழ்வினையே போற்றுகிறாராதலால் விழாவிலும் சமயத்திலும் செலவிடுதலை அவர் போற்றியிருக்கமாட்டார். 'மழித்தலும் நீட்டலும் வேண்டா' (குறள் 280) என வள்ளுவர் வெறுக்கிறார். 'அவி சொரிந்து ஆயிரம் வேட்டலும்' (குறள் 259) அவர்க்கு உடன்பாடில்லை. பண்டை இந்திய அரசர்க்கு வேள்வி ஒருபெருஞ்செலவு. ஆனால் வள்ளுவர் கண்ட அரசன் வேள்வி தலைப்படாதான். வள்ளுவர் கூறும் அரசர்க்கு உரிய 'கொடை அளி செங்கோல் குடியோம்பல்' ஆகியவற்றில் மற்ற செலவுகள் அடங்கும் எனக் கொள்ளலாம்.

## 3. 12. நெறியும் நோக்கமும்[30]

அரசுகள் பல்வேறு வழிகளை இயற்றிச் செல்வத்தை ஈட்டுகின்றன; மக்களிடமிருந்தும் அவை செல்வத்தைத் திரட்டுகின்றன. அச்செல்வம் மக்கள் ஈட்டியது; மக்களுடையது. இச்செல்வத்தை அரசுகள் பெறுவதிலே அன்றும் இன்றும் நெறிமுறைகள் இருந்திருக்கின்றன. மாற்றார் உடைமையினை—மக்கள் செல்வத்தை—அரசு வாங்குகின்ற போது உடையோர் அதனைத் துன்பமாக உணராதிருத்தல் வேண்டும். அரசும் அறமும் இன்று விலகிக்கொண்டே செல்கின்றன. ஆனால் வள்ளுவர்க்கு அறமும் பொருளும் இணைந்தவை மனித வாழ்க்கை ஒன்றுக்கே அறமும் பொருளும் இன்பமும் தேவை எனத் திருக்குறளை வள்ளுவர் யாத்தார். அவை ஒன்றோடொன்று முரண்படாதவை; ஒன்றோடு ஒன்று உறவுடையவையும் ஆகும். அறம் மக்களின் தனி வாழ்வை (Personal life) நெறிப்படுத்துகிறது; பொருள் அவர்கள் சமூக வாழ்வை விளக்குகிறது.

*சிறப்பு ஈனும்; செல்வமும் ஈனும்; அறத்தினூஉங்கு*
*ஆக்கம் எவனோ உயிர்க்கு.* (குறள் 31)

*மனத்துக்கண் மாசுஇலன் ஆதல் அனைத்துஅறன்;*
*ஆகுல நீர பிற.* (குறள் 34)

*அறன்அறிந்து வெஃகா அறிவுடையார்ச் சேரும்*
*திறன்அறிந்து ஆங்கே திரு.* (குறள் 179)

*கள்ளாமை வேண்டுவான் என்பான் எனைத்துஒன்றும்*
*கள்ளாமை காக்கதன் நெஞ்சு.* [குறள் 281]

என்பன போன்ற குறள்கள் வள்ளுவர் உள்ளத்தின் அறப்பாங்கினை

30. Means and Ends

எடுத்துக் காட்டுகின்றன. இக்குறள்கள் வள்ளுவர் கண்ட மக்கள் வாழ்க்கைக்கே அடிப்படை போன்றவை; அறத்துப்பாலில் உள்ளவை; ஆனாலும் பொருள்வாழ்வையும் நெறிப்படுத்தும் அளவு அடிப்படை யானவை.

அருளொடும் அன்பொடும் வாராப் பொருளாக்கம்
புல்லார் புரள விடல் [குறள் 755]

என்னும் குறள் பொருள்வாழ்விற்கு அடிப்படையானது. இத்தகைய குறள்களை யாத்துத் தந்த வள்ளுவர்க்கு இயற்றலும் ஈட்டலும் ஆகிய நோக்கம் போன்றே இவற்றை அடையும் நெறிகளும் சிறப்புடையவை என எளிதிலே உணர்ந்து கொள்ளலாம். ஆகவே வள்ளுவர் இயற்றி ஈட்டுதற்கு ஆகும் நெறிகள் பற்றிக் குறளிலே ஆங்காங்கே பேசி யுள்ளார். இவை அனைத்தும் பொதுவாகப் பேசியவை; அவர் வழக்கம்போல் குறிப்பாகப் பேசவில்லை.

### 3. 12. 1. இந்திய மரபின் கருத்துக்கள்

இறைவாங்குதல் பற்றி இந்திய மரபில் சில நயமான கருத்துக்கள் வழங்கி வருகின்றன. கண்ணீரும் கம்பலையும் துன்பமும் துயரமும் இல்லாது அன்பும் ஆர்வமும் நிலவ மக்களிடமிருந்து அரசன் இறை பெற வேண்டும் என்பதே இக்கருத்துக்களின் நோக்கம். அட்டையும் கன்றும் தேனீயும் மெல்ல மெல்ல உணவு கொள்வது போன்று அரசன் குடிகளிடமிருந்து மெல்ல மெல்ல வரி பெறுதல் வேண்டும். கனிவதற்குமுன் காயாகவே பறித்தால் பழத்தின் பயனும் இனிமையும் இல்லாது போய்விடும்; வருங்காலத்துக்கான விதையும் வீணாகிவிடும். பருவம் அறிந்து பழம் பறித்தால் எல்லாப் பயனும் எய்தும். வண்டு, மலருக்குத் தீங்குதராது தேன் உண்ணுவது போன்று மன்னன் மக்களுக்குத் தீங்குதராது இறை பெற வேண்டும்.[31] பூ விற்கும் பெண், பூவைக் கசக்காது விற்பனை செய்வது போன்று வரிவாங்கும் வேந்தன் வாட்டம் தராது மக்களிடம் வரிபெற வேண்டும். தாய்ப்புலி தன் குட்டியைப் பல்லின் இடையே வைத்தும் பக்குவமாகத் தாங்கிச் செல்வது போன்று மன்னனும் மக்களை அன்போடு அணைத்துச் சென்று பொருள் பெற வேண்டும். மாட்டுவண்டியின் பாரத்தை மெல்ல மெல்ல உயர்த்துவது போன்று வரிப்பணத்தை உயர்த்தவேண்டிய தேவை ஏற்படுமானால்

31. பொருத்தம் அழியாத பூந்தண்டார் மன்னர்
அருத்தம் அடிநிழ லாரை-வருத்தாது
கொண்டாரும் போலாதே கோடல் அதுவன்றோ
வண்டுதாது உண்டு விடல். (பழமொழி 244)

மெல்ல மெல்ல உயர்த்த வேண்டும். பசுவின் மடியில் பாலைக் காலத்தில் காலந்தோறும் கறக்க வேண்டும்; ஒருங்கு சேர்த்து ஒருநாள் கறக்க முடியாது. அதுபோல அரசன் சிறிது சிறிது அவ்வப்போது இறைபெற வேண்டும்.[32] மயிலின் உச்சிக் கொண்டையை அறுத்து அம்மயிலுக்கே உணவாக அதன் வாயில் இடுதலாகிய பயன்படாக் கொடுஞ்செயலைப் போன்று அரசன் குடிமக்களை வருத்தி வரிவாங்கிப் பயன்பெற முடியாது.[33] இவை போன்று ஈட்டும் நெறி பற்றிப் பலப்பல கருத்துக்கள் இந்திய இலக்கியங்களில் அங்கும் இங்கும் கிடைக்கின்றன. வள்ளுவர் இவைபோன்று குறிப்பாக ஒன்றும் பேசவில்லை. அவர் கூறுவன எல்லாம் பொதுவானவையே.

## 3. 12. 2. இன்றைப் பொருளியலின் கருத்துக்கள்

இன்றைய பொருளியற் சிந்தனையாளர்கள் அரசின் வரிக்கொள்கைகளாகப் பலப்பல கருத்துக்களை வகுத்துத் தந்திருக்கின்றனர். வள்ளுவர் தந்த கருத்துக்களைக் காணும்முன் அச்சிந்தனையாளர்கள் கருத்துக்களை இங்குத் தெரிந்து கொள்வது நல்லது.

**ஆடம் ஸ்மித்** என்பாரே முதன்முதலாக முறையாக வரிக் கொள்கைகளை வரையறுத்துக் கொடுத்தார் என்பர். அவர் நான்கு கொள்கைகளைத் தந்தார்:

1) ஒவ்வொருவரின் வருவாய்க்கும் ஒத்தது எனக் கருதுமாறு வரிச்சுமை அனைவருக்கும் சமமாக இருத்தல் வேண்டும்.

2) வரி, வாங்குவோரின் விருப்பத்துக்கு ஏற்ப அமையாது வரையறை செய்யப்படல் வேண்டும்.

3) வரி வாங்குதல் எளிதாகுமாறு அது அமைக்கப்படல் வேண்டும்.

---

32. பாற்பட்டு வாழ்ப எனினும் குடிகள்மேல்
மேற்பட்ட கூட்டு மிகநிற்றல் வேண்டாவாம்;
கோல்தலையே ஆயினும் கொண்டீக காணுங்கால்
பால்தலைப் பால்ஊறல் இல். (பழமொழி 245)

33. அடைய அடைந்தாரை அல்லவை செய்து
கொடைவேந்தன் கோல்கொடியன் ஆகிக் குடிகள்மேல்
கூட்டுஇறப்பக் கொண்டு தலையளிப்பின் அஃதன்றே
சூட்டுஅறுத்து வாயில் இடல். (பழமொழி 246)

4) குறைந்த செலவில் நிறைய வாங்குமாறு வரி அமைதல் வேண்டும்.

இக்கொள்கைகளோடு மேலுஞ் சிலவற்றையும் அறிஞர்கள் வற்புறுத்துவர்:

5) வரி கொடுப்போர் அனைவரும் சமமாக நடத்தப்படல் வேண்டும்.

6) கடின உழைப்புக்கும் விடாமுயற்சிக்கும் ஊறுதராதவாறு வரிமுறைகள் இருத்தல் வேண்டும்.

7) அரசு மேற்கொண்டுவரும் கொள்கைகளுக்கு ஒத்ததாக வரிமுறை இருத்தல் வேண்டும்.

8) தேவையாகும்போது திருத்தியமைக்கத் தக்கதாகவும் வரிமுறை இருத்தல் வேண்டும்.

9) வரி செலுத்தும் முயற்சி மிகக்குறைந்த செலவினதாய் இருத்தல் வேண்டும்.[34]

---

34. "Adam Smith listed four principles of taxation policy which should, he said, be observed by Governments. These were:

a) Taxation should be equal, by which he meant proportional to the taxpayers' incomes.

b) Taxes should be certain, and not at the whim of the tax collector.

c) Taxes should be arranged so that collection is convenient.

d) Taxes should be economic, that is the yield should be greater than the cost of collection.

A modern chancellor might add other principles, such as:

e) Impartial treatment of all taxpayers.

f) Absence of disincentive effects on hard work or enterprise.

g) Consistency with Government policies.

h) Adjustability if necessary.

i) The cost of compliance should be kept as low as possible."

— P. 335 - 336, E M S.

இன்றைய பொருளியலறிஞர்கள் வகுத்துக்காட்டும் வரிக் கொள்கைகள் பலவற்றை நம் பண்டையறிஞர்கள் அழகிய உவமைகள் வாயிலாக வெளியிட்டுவிட்டனர். மேல் இந்திய மரபினுடையவை யாகக் காட்டிய கருத்துக்களோடு இக்கருத்துக்களை ஒப்பிடுகின்-றபோது இக்கூற்றுத் தெளிவுபடும்.

## 3. 12. 3. வினைத் தூய்மை

வள்ளுவர், வாழ்க்கையே தூய்மையாக இருக்கவேண்டும் என்று கருதுபவர். இவ்வகையில் பொருளும் அவருக்கு விலக்கல்ல; பொருளீட்டும் நெறியும் விலக்கல்ல. **வினைத்தூய்மை** என்றே அவர் ஓரதிகாரம் அமைத்துள்ளார். இது அமைச்சனுக்கு என்ற கருத்தில் அமைச்சியலில் வைக்கப்பட்டுள்ளது. அமைச்சன் அரசுக்குப் பொருளீட்டலை மேற்கொள்ளுதல் பற்றி இவ்வதிகாரத்தின் குறள்களில் வினைத் தூய்மையும் நெறித் தூய்மையும் வற்புறுத்தப்படுகின்றன. தவிக்கும் தாயின் பசியைத் தணிப்பதற்குக்கூட ஒருவன் தாழ்ந்த செயலைச் செய்யக்கூடாது என்கிறது ஒரு குறள்:

ஈன்றாள் பசிகாண்பான் ஆயினும் செய்யற்க
சான்றோர் பழிக்கும் வினை. [குறள் 656]

செம்மையற்ற வழியில் செல்வனாக ஆதலைவிட நன்மையுற்ற வழியில் நல்குரவாளனாக இருத்தலே மேல் என்கிறது மற்றொரு குறள் :

பழிமலைந்து எய்திய ஆக்கத்தின் சான்றோர்
கழிநல் குரவே தலை. [குறள் 659]

கண்ணீருடன் வந்த பொருள் கண்ணீருடன் போய்விடும்; நல்லவை இன்றில்லாது போனாலும் சென்று பயன் தரும்:

அழக்கொண்ட எல்லாம் அழப்போம்; இழப்பினும்
பிற்பயக்கும் நற்பா லவை. [குறள் 658]

தீயவழிப்பொருள் நில்லாது நீங்கும், ஈரக்குடத்தில் நீர் நில்லாதது போல:

சலத்தால் பொருள்செய்து ஏமார்த்தல் பசுமண்
கலத்துள்நீர் பெய்துஇரீஇ யற்று. [குறள் 660]

இக்குறள்கள் அரசன் ஈட்டும் நெறிகளைப் பொதுப்படவே சுட்டிக் காட்டுகின்றன. குறிப்பாகச் சுட்டிப் பேசும் குறள்களும் உண்டு.

சூதாட்டம் அரசர்க்குரிய ஒருகளியாட்டம் என இந்தியமரபு போற்றுகிறது. ஆனால் வள்ளுவர்க்குச் 'சூதும் வாதும் வேதனை செய்யும்' என்பதே நெறி. சூதிலே வெற்றிபெற்றுப் பொருளும் பெறலாம். ஆனால் 'வேண்டற்க வென்றிடினும் சூதினை' (குறள் 931) என அவர் அதனையும் கடிந்துரைப்பது நெறியின்மீது கொண்ட பற்றாலேயாம்.

பொருள் செயல் வகை என்னும் அதிகாரத்தில் முதல் மூன்று குறள்கள் பொருளின் சிறப்பும் அடுத்த மூன்று குறள்கள் பொருளீட்டும் நெறியும் அடுத்த நான்கு குறள்கள் பொருளின் பயனும் கூறுகின்றன என எடுத்துக்காட்டுகிறார் பரிமேலழகர். ஈட்டும் நெறி பற்றிய முதற்குறள் இது:

அறன் ஈனும்; இன்பமும் ஈனும்; திறன் அறிந்து
தீதுஇன்றி வந்த பொருள். [குறள் 754]

பொருள், திறன் அறிந்து தீதின்றி வருதல் வேண்டும் என இக்குறள் வற்புறுத்துகிறது. 'செய்யும் திறம் – தான் **பொருள் செய்தற்கு உரிய நெறி** எனப் பரிமேலழகர் விளக்குகிறார். தீது என்பது **கொடுங்கோன்மை** என்கிறார் அவர்; **பிறர்க்குத்தீமை** என்கின்றனர் பிற உரையாசிரியர்கள். பிறர் என்பது வரிசெலுத்து-வோர் எனவே கொள்ளலாம். அடுத்த குறள் இக்கருத்தை மேலும் தெளிவுபடக் கூறுகிறது:

அருளொடும் அன்பொடும் வாராப் பொருளாக்கம்
புல்லார் புரள விடல். [குறள் 755]

வரி செலுத்துவோரின் வாய்ப்பும் வசதியும் தகுதியும் பார்க்கின்ற-போதுதான் அருளும் அன்பும் அங்குத் தோன்றும். 'பொருளாக்கம்' எனப் பொதுப்படவே வள்ளுவர் கூறுவதால் அரசின் அனைத்து வருவாய்களையும் இங்குக் கொள்ளலாம். ஆனால் பரிமேலழகர் நிலவரி ஒன்று மட்டுமே கொள்கிறார். அருளொடும் அன்பொடும் **'கூடிவருதலாவது ஆறில் ஒன்றாய் வருதல்'** என்று விளக்குகிறார் அவர்.[35] அடுத்த குறள் 'உறுபொருளும் உல்குபொருளும் ஒன்னார்த் தெறுபொருளும்' கூறி இறைப் பொருளைக் கூறாது

35. ஆறில் ஒன்றாய் வரும் நிலவரியை மக்கள் மனமுவந்து அன்பொடு தருவர் என்ற ஒரு கருத்து உண்டு போலும். ஆகவேதான் பரிமேலழகர் இவ்வாறு எழுதுகிறார். 'இயற்றல்' (குறள் 385) என்பதற்குக் காளிங்கர் 'ஆறில் ஒன்றாகிய அறநெறிப்பொருளும்' என்றே உரை தருதலும் இங்குக் கருதத்தக்கது.

விடுத்தமையால் அதனை இந்தக் குறளில் (755) அடக்கிக் காட்டுகிறார் பரிமேலழகர். அரசினுடைய எல்லா வருவாய்களையும் தனித்தனியே எடுத்துச்சுட்டி ஒவ்வொன்றையும் ஈட்டுகின்றபோதும் நன்னெறி கடைப்பிடிக்கவேண்டும் என வள்ளுவர் இவ்வதிகாரத்தில் கூறுகிறார் எனப் பரிமேலழகர் கருதுவதே அவரின் இத்தகைய முயற்சிக்குக் காரணம். அரசன் குடிகள்மாட்டுச் செய்யும் அருளும் குடிகள் அரசன்மாட்டுச் செய்யும் அன்புமே இருவரிடையேயும் நிலவுகின்றன. எனவே அரசன் செய்வது அன்புப்பொருளாக்கமே ஒழிய வன்புப் பொருளாக்கம் அல்ல என்பதை உணரலாம்.

## 3. 12 4. கொடுங்கோன்மையும் வெருவந்த செய்யாமையும்

வள்ளுவர் **கொடுங்கோன்மை, வெருவந்த செய்யாமை** என இரண்டு அதிகாரங்கள் (56, 57) அமைத்துள்ளார். நாடுகாவல், முறை வழங்கல், பொருள் திரட்டல் ஆகியவை அரசனின் முக்கியப் பணிகள். இவைகளை ஒட்டியே அரசன் மக்களிடம் உறவு கொள்ளுகின்றான். இத்திறங்களிலேயே அரசன் செங்கோலனாக நடந்து கொள்ளவேண்டும். கொடுங்கோன்மை என்னும் அதிகாரத்தின் சில குறள்கள் குடிகளிடமிருந்து செம்மை வழியில் வரிவாங்குதல் பற்றித் தெளிவாகக் குறிப்பிடுகின்றன. வெருவந்த செய்யாமை என்னும் அதிகாரம் அரசன் குடிகள் அஞ்சத்தகுவன செய்யாமையைக் குறித்துப் பேசுகிறது. ஆனால் இவ்வதிகாரம் முழுவதுமே நேரிய முறையில் இறை வாங்குதலைப்பற்றியே பேசுகிறது எனப் பரிதியார் என்னும் உரையாசிரியர் கருதுகிறார். இவர் 'வெருவந்த செய்யாமையாவது **குடியானவன் வெருவுவது செய்யும் தொழில் செய்யாமை** என்றவாறு' என விளக்கிக் குறள்களுக்கும் அதற்கு ஏற்றவாறு உரைவகுத்துக் கொண்டு செல்லுகிறார்.

'பொருள் வெஃகிக் குடிகளை அலைத்தல்தொழிலைத் தன் மேற்கொண்டு முறையல்லாதவனற்றைச் செய்து ஒழுகும் வேந்தன் கொலைகாரனே என ஒருகுறள் கடிந்துரைக்கிறது:

கொலைமேற்கொண் டாரின் கொடிதே அலைமேற்கொண்டு
அல்லவை செய்துஒழுகும் வேந்து. [குறள் 551]

குடிமக்களை மிரட்டிப் பொருள் கேட்பது வழிப்பறியே என வைகிறது மற்றொரு குறள்:

வேலொடு நின்றான் 'இடு' என் றது போலும்
கோலொடு நின்றான் இரவு. [குறள் 552]

'கையிலுள்ளவற்றைத் தா' என்று கேட்பதுதான் வழிப்பறி என்பது இல்லை. மணக்குடவர் குறிப்பது போன்று 'நிச்சயித்த கடமைக்கு மேல் வேண்டுகோளாகக் கொள்ளினும் அது வழியிற் பறிப்பதனோடு ஒக்கும்.' செங்கோல் வேந்தனுக்கே மக்கள் இறைப்பொருளை மனமுவந்து தருவர். அவன் உரிமையுடன் மக்களைக் கேட்கவும் செய்யலாம். தருவது மக்கள் 'கடமையும்' ஆகும். அதற்கு நன்றியாக அரசன் நாடு காவலும் செய்கிறான்; முறை வழங்கவும் செய்கிறான். ஆனால் கொடுங்கோலரசனுக்குக் குடிகளைக் கேட்க உரிமையும் இல்லை; குடிகளுக்குக் கடமையும் இல்லை; ஆகவே கொடுங்கோலரசன் நிச்சயித்த கடமையைக் கொள்ளுதல் கூட வழிப்பறியாகுமாம். இதனைத் தெளிவுபடுத்துகிறார் இக்குறளுரையில் பரிதியார்: 'வேல் கொண்டு நடுக்காட்டிலே பறிக்கிற வேடற்கு ஒக்கும் கொடுங்கோல் மன்னன் கொள்ளுகின்ற கடமை என்றவாறு.'

இறையினைப் பின் எவ்வாறு பெறுவது? அதையும் வள்ளுவர் விளக்குகிறார். இறையைத் **தக்காங்கு நாட** வேண்டும் என்பது அவர் கருத்து. இதனை அவர்,

தக்காங்கு நாடித் தலைச்செல்லா வண்ணத்தால்
ஒத்தாங்கு ஒறுப்பது வேந்து [குறள் 561]

என்ற குறளில் வைத்துக் குறிப்பிடுகிறார். தக்காங்கு என்பது தகுதியுள்ள முறையில், தகுதியுள்ள அளவில், தகுதியுள்ள காலத்தில் என்றெல்லாம் பொருள் தருகிறது. 'தகுதி என ஒன்று நன்றே' (குறள் 111) என்னும் குறளில் தகுதி என்னும் சொல்லுக்குப் பொருள் தருகிறார் அவர். தகுதி என்னும் பொதுச்சொல் பல உயர் பண்புகளைப் பிணைப்பதற்கு வாய்ப்பாக இருத்தல் இங்குப் போற்றுதற்குரியது. பரிதியார் இத்தொடருக்குக் "**குடிக்குத் தக்க கடமை நீதியாலே கொண்டு....**" எனக் குறிப்பிட்டுப் பொருள் எழுதுகிறார். இவர் உரையில் போற்றத் தக்க இரண்டு கருத்துக்கள் அடங்கியுள்ளன. ஒன்று, குடிமக்களின் தகுதிக்கு ஏற்ப – **குடிமக்கள் இறை தரும் வன்மைக்கு ஏற்ப** - இறை இருத்தல் வேண்டும் என்பது. இரண்டு, **நீதி நெறிபிறழாது அதனைக்கொள்ளவேண்டும்** என்பது. இவ்விரு நெறிகளையும் இன்றைய பொருளியலறிஞர்கள் பெரிதும்

போற்றுகின்றனர் என்பது மேலே அவர்கள் கருத்தைத் தொகுத்துத் தந்த இடத்தில் கண்டு தெளியலாம்.

ஆனால் குடிகளுக்கு உரிய தகுதி எது? நீதியாலே கொள்வது எப்படி? தகுதி என்பது தலைக்கு இவ்வளவு இறை என்பதல்ல; வருவாய்க்கு இவ்வளவு இறை என்பதே தகுதி என்கின்றனர் இன்றையறிஞர். செல்வர் நிறையக் கொடுப்பதும் வறியர் சிறிது கொடுப்பதுமே தகுதியாம். இன்றைய அரசுகள் வாங்கும் வருமான வரியிலே இத்தகுதியினைக் காணுகின்றோம். காளிங்கர் குறிப்பது போன்று 'ஆறில் ஒன்றாகிய அறிநெறிப் பொருளாக' அது இருக்கலாம். எவ்வாறாயினும் தகுதியின்மை, இன்னாமை யாகும். அரசன் இறை வாங்குதல், **'கடுமை'**, **'இன்னாமை'** எனப் பொது மக்கள் பேசும் பழிச்சொற்களுக்கு இடந் தரக்கூடாது. இதனையே வள்ளுவர்,

**இறைகடியன் என்றுரைக்கும் இன்னாச்சொல்** [குறள் 564]

என அமைத்துக் காட்டுகிறார். **'குடிக்கடமையை வாங்குவதற்கு வலியன்; குடியைக் காக்க எளியன் என்னும்'** எனப் பரிதியார் இவ்வடியினை விரித்துரைக்கிறார்.[36] அரசனும் அவன் சுற்றத்தாரும் கருதுவது அல்ல இங்கு நினைக்கத்தகுவது; இறை கொடுக்கும் குடிகள் என்ன கருதுகிறார்கள் என்பதே நினைக்கத்தக்கது. ஆகவே காவலன் **கடுமையில்லாது கண்ணோட்டம்** உள்ளவனாய் இருத்தல் வேண்டும். கடுமை, செயலில் மட்டுமல்ல; சொல்லிலும் கூடாது:

கடுஞ்சொல்லன் கண்ணிலன் ஆயின் நெடுஞ்செல்வம்
நீடின்றி ஆங்கே கெடும். [குறள் 566]

## 3. 12. 5. புறந்தரும் நெறி

தகுதி போன்றே கடுமை, கண்ணோட்டம் முதலியவையும் பொதுச் சொற்களே. இவைதாம் இறைவாங்கும் நெறி என்று வள்ளுவர் குறிப்பிட்டு விட்டார். இந்த நெறிகள் அன்று எல்லாரும் அறிந்தவைபோலும். இவற்றை எவை எனச் சுட்டி ஒருபுறப்பாடல் பேசுகிறது. பாண்டியன் அறிவுடை நம்பிக்குப் பிசிராந்தையார் புகட்டும் பொன்மொழிதான் அது. இறைவாங்கும் நெறிகளையே அவர் சுட்டிக்காட்டுகிறார்:

---

36. இங்கு **'இறை'** என்பதற்குப் பரிமேலழகர் முதலானோர் **'அரசன்'** எனப் பொருள் கொள்ளுகின்றனர். ஆனால் பரிதியார் இவ்வதிகாரத்தின் நோக்கமாகத் தான் முன்னே வரையறுத்துக் கொண்டதற்கு ஏற்ப உரை வகுத்துச் செல்லுகிறார்.

காய்நெல் அறுத்துக் கவளம் கொளினே
மாநிறைவு இல்லதும் பன்னாட்கு ஆகும்;
நூறுசெறு ஆயினும் தமித்துப்புக்கு உணினே
வாய்புகு வதனினும் கால்பெரிது கெடுக்கும்;
அறிவுடை வேந்தன் **நெறிஅறிந்து கொளினே**
கோடி யாத்து நாடுபெரிது நந்தும்;
**மெல்லியன் கிழவன் ஆகி வைகலும்**
**வரிசை அறியாக் கல்லென் சுற்றமொடு**
**பரிவுதவ எடுக்கும் பிண்டம் நச்சின்**
யானை புக்க புலம்போலத்
தானும் உண்ணான்; உலகமும் கெடுமே. (புறம் 184)

இச் செவியறிவுறூஉவில் **'நெறியறிந்து கொள்'**— தல் என்னும் தொடரே பயன்படுத்தப்பட்டிருத்தல் நோக்கத்தக்கது. இது 'திறனறிந்து' என்னும் குறள் (854) தொடரை நினைவூட்டுகிறது. இங்கு இறை வாங்குவதற்கு ஆகா நெறிகள் நான்கினைக் காண்கின்றோம்:

1. மெல்லியன் கிழவன் ஆகி இறை வாங்கல் கூடாது.
2. வைகலும் இறைவாங்கல் கூடாது.
3. வரிசையறியாக் கல்லென் சுற்றமொடு இறைவாங்கல் கூடாது
4. பரிவுதவ எடுக்கும் இறை கூடாது.

'மெல்லியன்' 'கிழவன்' என்ற சொற்கள் பொதுப்படநின்று தெளிவு தராமல் இருக்கின்றன. மெல்லியன் என்பது வளமற்ற வறியவன் என்ற பொருளுடையதாகலாம். கிழவன் என்பதற்குக் 'கீழவன்' என்றுவேறு சிலர் கொள்ளும் பாடம் பொருத்தமாக இருக்கின்றது.

இறை வாங்குதல் ஆண்டுக்கு ஒருமுறையோ அறுவடையின்போதோ இருக்கலாம். வைகலும் என்றால் அது வம்புதான்.

'வரிசையறியாக் கல்லென் சுற்றம்' அரசனின் அதிகாரிகள் ஆகலாம். வரிசையறியாமை தக்காங்கு நாடாமை ஆகலாம்.

'பரிவு தப எடுத்தல்' (இதுவும் ஒரு பாடம்) ஆயின் அன்பு கெட வாங்குதல். 'பரிவு தவ எடுத்தல்' ஆயின் குடிகளிடம் வருத்தம் மிக எடுத்தல்.

இவ்வாகா நெறிகளில் இறைவாங்குதல் 'இறை கடியன்' 'கடுஞ்சொல்லன்', 'கண்ணிலன்' என்னும்பழிச் சொற்களையே

அரசனுக்கு ஈட்டித்தரும். இதன் விளைவு 'தானும் உண்ணுன்; உலகமும் கெடுமே' என்பது தான். இதனை மிக நன்கு உணர்ந்துதான் வள்ளுவர் எச்சரிக்கிருர்:

கூழும் குடியும் ஒருங்கிழக்கும் கோல்கோடிச்
சூழாது செய்யும் அரசு. (குறள் 554)

(அச்செயலான் முன் ஈட்டிய பொருளையும் **பின் ஈட்டுதற்கு ஏதுவாகிய குடியையும்** சேர இழக்கும் என்றவாறு. — பரிமேலழகர்) மயிலின் 'தூட்டறுத்து (அதன்) வாயிலிடல்' இதுதான். இத்தகைய அரசனுடைய நாடும் நகரமும் (உறை) விரைந்து ஒழியும். இது வள்ளுவர் இடும் சாபம்:

இறைகடியன் என்றுரைக்கும் இன்னச் சொல்வேந்தன்
**உறைகடுகி ஒல்லைக் கெடும்.** (குறள் 564)

அரசன் வெருவந்த முறையில் இறைபெறுவாளுனல், மக்கள் அல்லற் பட்டு ஆற்ருது அழுது கண்ணீர் சிந்துவர். இக்கண்ணீரே அரசன் செல்வத்தைத் தேய்க்கும்:

அல்லற்பட்டு ஆற்ருது அழுதகண்ணீர் அன்றே
செல்வத்தைத் தேய்க்கும் படை. (குறள் 555)

அவ்வாருயின் வழிதான் என்ன? குடிகள் தங்கள் வசதிக்கு ஏற்ப விரும்பியவாறு விரும்பிய அளவு விரும்பிய காலத்தில் இறையினை இறுக்கலாமா? அப்படியும் விடக்கூடாது போலும். குடிகள் வசதியும் கருதித் தரலாம்; ஆனல் தராது இருக்கக்கூடாது. குடிகளிடம் முறைகெடுமானலும் வேந்தன் மென்மைகெடக் கூடாது. அவன் வலியவன்-கடியவன்-என்பதுபோலக் காட்டி மெலியவனுகவே விளங்கி இறையினைப் பெறவேண்டும். மன்னன் பொய்யாகக் கடுமை காட்ட வேண்டுமாம். ஆனல் எப்போதும் மென்மைகெடக் கூடாதாம். இவ்வாறு கருதுகிருர் வள்ளுவர். அவர் கருத்தினை இக்குறளில் காணலாம்:

**கடிதுஒச்சி மெல்ல எறிக;** நெடிதுஆக்கம்
நீங்காமை வேண்டு பவர். (குறள் 562)

பரிதியார் இதனை விளக்குகிருர்: **"குடியானவர்களை மிகுபயங் காட்டி உடனே நல்லது சொல்லுக,** அரசர்க்கு ஆக்கம் மேன்மேல் வர்த்திக்க வேண்டுமாகில் என்றவாறு."

அன்று காவலரின் தலையாய செலவு படைச் செலவுதான்; காவலரின் தலையாய பணி காவல்தான்; அது நாடுகாவல். இன்று அரசுகள் மக்கள் வாழ்வின் அனைத்துக் கூறுகளிலும் தலையிடுதல்

போன்று அன்று அரசுகள் தலையிடவில்லை. பெரும்பான்மையான பணிகளை மக்கள் தமக்குத் தாமே நிறைவேற்றிக் கொண்டனர். அயல்நாட்டுப் பகைவரிடமிருந்தும் உள்நாட்டுக் கள்வரிடமிருந்தும் குடிகளைக் காத்தல் அரசனின் பெரும்பொறுப்பாக இருந்தது. இதன் பொருட்டு நன்றியுடைமையோடு அரசன் காவற்செலவை ஈடுகட்ட மக்கள் மன்னர்க்கு இறை தந்தனர். இறை பெறும் இறைவன் குடிகளைக் காத்தல் கடமையாயிற்று. குடிகளைக் காத்தல் பொருட்டே காவலன் 'கடமை' பெற்றான். 'கடமை' பெற்றுக் காவலன் காவா தொழிகின்றபோது குடிகளும் இறை செலுத்தும் கடப்பாடு இழக்கின்றனர். இந்நிலையே செங்கோன்மை எனப்படுவது. இன்றைய பொருளியலறிஞர்கள் வரிசெலுத்தும் மக்கள் வரிக்கு மாற்றாகத் தக்க பயன் பெறுதல் வேண்டும் என வற்புறுத்துகின்றனர் இதனை வள்ளுவர் உணர்ந்தது போன்று அமைந்தது இக்குறள்.

> தக்காங்கு நாடித் தலைச்செல்லா வண்ணத்தால்
> ஒத்தாங்கு ஒறுப்பது வேந்து. (குறள் 561)

'குடிக்குத் தக்க கடமை நீதியாலே கொண்டு தனக்குத் தலை செல்லாத மாற்றாரை வெல்பவன் அரசன் என்றவாறு' என இதனை விளக்குவர் பரிதியார். தக்காங்கு நாடி இறைபெறும் வேந்தன் மாற்றாரை ஒத்தாங்கு ஒறுக்கவேண்டும் என்ற குறிப்பையும் மாற்றாரை ஒத்தாங்கு ஒறுப்பதன் பொருட்டே குடிகளிடம் தக்காங்கு நாடி இறை பெற வேண்டும் என்ற குறிப்பையும் சுட்டுவதாக இக்குறளின் போக்கு அமைந்துள்ளது கவனிக்கத்தக்கது.

சுருங்கச் சொன்னால் உழவர் உதவலால் அரசர்க்கு உலகமே உரிமையாகும். அதுதான் வள்ளுவர் முடிவு:

> பலகுடை நீழலும் தங்குடைக்கீழ்க் காண்பா
> அலகுடை நீழ லவர். (குறள் 1034)

வள்ளுவர் சுட்டிக் காட்டும் இக்கொள்கை தமிழக மரபு. தமிழக அரசாகிய இலக்கியத்துக்கு வள்ளுவர் இலக்கணம் வரைந்தார் எனலாம். வள்ளுவர் கொள்கைகளைச் சங்கத்தொகைகள் கொண்டும் விளங்கிக் கொள்ளலாம். தக்காங்கு நாடுதல்தான் ஒத்தாங்கு ஒறுத்தலுக்குத் துணையாகிறது என்பதைப் புறம் காட்டுகிறது:

> களிற்றுக்கணம் பொருத கண்ணகன் பறந்தலை
> வருபடை தாங்கிப் பெயர்புறத்து ஆர்த்துப்
> பொருபடை தருஉம் கொற்றமும் உழுபடை
> ஊன்றுசால் மருங்கின் ஈன்றதன் பயனே. (புறம் 35: 23-26)

வாகையேடு உழவராலேயே வரையப்படுகிறது என்பதை இதன் புலவர் வெள்ளைக்குடி நாகனார் வெளிப்படுத்துகிறார்.

இவரைத் தொடர்ந்து இளங்கோவடிகளும் இவ்வாறு முழங்குகிறார்:

இரப்போர் சுற்றமும் புரப்போர் கொற்றமும்
உழவிடை விளைப்போர்.............. (சிலம்பு 149-150)

ஆகவே வெற்றி வேண்டும் வேந்தன் இறை உதவும் உழவரைப் போற்ற வேண்டும். உழவரை ஓம்பினால் பகைவர் திறைதந்து பணிவர். வெள்ளைக்குடி நாகனாரே மேலும் அதை விளக்குகிறார்:

பகடுபுறந் தருநர் பாரம்ஓம்பிக்
குடிபுறந் தருகுவை ஆயின்நின்
அடிபுறந் தருகுவர் அடங்கா தோரே. (புறம் 35 : 37-39)

இப்பாடல் கிள்ளி வளவனுக்கு வெள்ளைக்குடி நாகனார், வள்ளுவர் கருத்தை எடுத்து வழங்குவது போன்றே விளங்குகிறது.

இறை பெற்றும் மக்களை மாற்றாரிடமிருந்து காவலன் காவான் எனின் அவன் தண்டனைக்கு உரியவன்; சடுதியிலே கெடுவான். இது வள்ளுவர் வழங்கும் சாபம்:

செருவந்த போழ்தில் சிறைசெய்யா வேந்தன்
வெருவந்து வெய்து கெடும்.[37] (குறள் 569)

'குடிக்கடமையை அன்பினாலே வாங்கி மாற்றார் வந்தால் அக்குடியைக் காட்டிக்கொடுக்கும் மன்னவன் சடுதியிலே கெடும் என்றவாறு' என விரித்துரைப்பார் பரிதியார். மன்னனே ஆயினும் மக்கள் பொருளுக்கு மாற்றுச் செய்யும் பொறுப்புடையவன் என்ற இன்றைய கருத்தும் இங்கு ஒலிப்பதைக் கேட்கலாம்.

## 3. 13. இறை விலக்கு

மக்கள், மன்னர்க்கு இறையினை முறையாகக் கொடுத்து வருவர். அது அவர்கள் தகுதிக்கு ஏற்ப இருக்கும். ஆனால் இந்தத் தகுதி எப்போதும் ஒரே சீராக இருப்பதில்லை. மக்கள் வருவாய், உழவைப் பொறுத்திருக்கிறது. உழவு, மழை வெயில் ஆகியவற்றைப் பொறுத்திருக்கிறது 'விட்டில், தன் அரசு, நால்வாய், மிகுமழை, மிகுகாற்று, நட்டார், வேற்றரசு, கிள்ளை, ஆகிய கேட்டால் வளம் குன்றலாம்; வறட்சி தோன்றலாம்; தொடர்ந்து பஞ்சம் குடிபுகலாம்.

இக்காலங்களில் இறை இறுக்கும் தகுதியைக் குடிகள் இழக்கலாம். இத்தகைய அல்லற்காலங்களில் வரிவிலக்களித்தலை — இறைவீடு செய்தலை இன்றைய அறிஞர்கள் வேண்டுகின்றனர்; இறை வீடு மட்டுமல்ல; இயன்ற உதவியும் தந்து தளர்ச்சி நீக்க வேண்டுகின்றனர். வரிவாங்கலைச் சில காலத்துக்கு நிறுத்தி வைத்தலையோ முற்றும் விலக்குதலையோ இன்றைய அரசுகள் மேற்கொள்ளுகின்றன. அன்பொடும் அருளொடும் வரும் பொருளாக்கத்தையே விழையும் வள்ளுவர்க்கு இறைவீடு செய்தல் உடன்பாடாக இருந்திருக்க வேண்டும் 'கடுஞ்சொல்லன், கண்ணிலன்' அல்லா அரசன், இயலாக் காலத்திலும் இறையை வற்புறுத்தமாட்டான். வள்ளுவர் காணும் அரசர் 'கொடையும் அளியும் செங்கோன்மையும் குடியோம்பலும்' ஆகிய பண்புகளையுடையவர்கள். இப்பண்பாளர்கள் குடிகளின் துன்பக்காலத் துயர்துடைக்கவே முந்துவர். வள்ளுவர், இயலாத போது இறைவீடு செய்தல்பற்றி வெளிப்படப் பேசவில்லை. ஆனால் அவர் பொதுக் கருத்துக்கள் இத்தகையவற்றை உய்த்துணர இடந்தருகின்றன. வள்ளுவர் அரசிலக்கணம் கூறும் குறள் இது:

> கொடைஅளி செங்கோல் குடியோம்பல் நான்கும்
> உடையானாம் வேந்தர்க்கு ஒளி. [குறள் 390]

இந்தக் குறள் அல்லற்காலை அவ்வதியுறும் குடிகளுக்கு—குடியானவர்களுக்கு— அரசர் உதவிபுரிதலையே பேசுகிறது என மணக்குடவரும் பரிப்பெருமாளும் கருதுகின்றனர்:

> "கொடுத்தல்-தளர்ந்த குடிக்கு விதை ஏர் முதலியன கொடுத்தல். அளித்தல்—அவரிடத்துக் கொள்ளும் கடமையைத் தளர்ச்சிபார்த்து விட்டுவைத்துப் பின்பு கோடல். செங்கோன்மை-கொள்ளும் முறையைக் குறையக் கொள்ளாமை. குடியோம்பல் - **தளர்ந்த குடிக்கு இறை கழித்தல்.**"

---

37. சிறை செய்தல் என்பதன் பொருள் 'காத்தல் (அரண்) செய்தல்' என்பதாகும். பரிதியார், 'குடி காத்தல்' என்கிறார்; பிறர் எல்லாம், 'தன்னைக் காத்தல்' என்கின்றனர். 'குடிகட்கு வெருவந்த செய்யாமை' என்ற கருத்தோடு பரிதியார் உரை ஒத்துப்போகிறது.

இன்றைய அரசுகள், மக்கள் அல்லற்படுங்காலத்தில் பணமும் பண்டமும் தந்துதவுகின்றன; வரியும் கழிக்கின்றன.[38] இதனால் அவைகள் குடிநல்லரசுகள் (Welfare States) எனப் பெருமைப்பட்டுக் கொள்ளுகின்றன. வள்ளுவர் கண்ட அரசும் இத்தகைய ஓரரசே என்பதை இக்குறள் விளக்குகிறது. இன்றைய அறிஞர்கள் வகுத்த 'தகுதிக் கேற்ற வரி' என்ற உயரிய குறிக்கோளும் இதனால் நிறைவேறுகிறது.

## 3. 14. வருத்தலின் பயனும் எல்லையும்

அரசின் பொருள்வாழ்வில் வரவும் செலவும் இருபுறங்கள். வரவிருந்தால் தான் செலவு இருக்கமுடியும்; வரவுக்குமேல் செலவும் இருக்கமுடியாது. இன்றைய அரசுகள் வரவு செலவுத் திட்டங்களை முன் கூட்டியே தயாரிக்கின்றன; மக்கள் மன்றங்களிடமோ மன்னரிடமோ முன்னனுமதி பெறுகின்றன. இத்திட்டங்கள் அறிக்கைகளாக அறிவிக்கப்படுகின்றன. இதுவே (Budget) என வழங்கப்படுகிறது. இதன்பொருட்டு வரவு முன்னரே கணக்கிடப்படுகிறது; செலவும் வரையறை செய்யப்படுகிறது. வரவும் செலவும் சமனுக்கப்பட வேண்டும். இன்றைய அரசுகளின் வரவு செலவுத் திட்ட அறிக்கை

---

38. வள்ளுவர் கண்ட இத்தகைய வேந்தர் பண்டைத் தமிழகத்தில் இருந்திருக்கலாம். 35-ஆம் புறப்பாட்டின் அடிக்குறிப்பு, கிள்ளிவளவனை 'வெள்ளைக் குடி நாகனார் **பாடிப் பழஞ்செய்க்கடன்வீடு கொண்டது'** எனப் பேசுகிறது. 'பழைய நிலவரி விடுதலை' என்பதே இத்தொடரின் பொருள். ஆனால் இப்புறப்பாட்டின் உள்ளே நேரே இச்சொற்களும் இல்லை; பொருளும் இல்லை. பகடுபுறந்தருநர் பாரம் ஓம்பிக் குடிபுறந்தரவே சொல்லுகிறது அது. புறநானூற்றின் அடிக்குறிப்பு எழுதப்பட்ட காலத்திலாவது 'செய்க்கடன் வீடு' தரும் வழக்கம் இருந்திருத்தலை இது சுட்டுகிறது எனக்கொள்ளலாம். ஒருகால் அக்காலம் வள்ளுவர் காலத்தை அடுத்திருக்கலாம்.

துன்பக்காலை என்ன? இன்பக்காலை கூட அரசர் தம் குடிகட்குக் **கறைவீடு** செய்திருத்தலைச் சிலப்பதிகாரம் குறிப்பிடுகிறது. தான் செய்த தவறு தீர்ந்தபின் 'தலையமர்செல்வி கதவந் திறந்த' போது பாண்டியன் ஒருவன்

> சிறைப்படு கோட்டம் சீமின்; யாவதும்
> கறைப்படு மாக்கள் **கறைவீடு செய்ம்மின்**
> (சிலம்பு 23:126-127)

என ஆணையிடுகிறான். சேரன் செங்குட்டுவன் கண்ணகிக்கு விழா நடத்தும் போது

> சிறையோர் கோட்டம் சீமின்; யாங்கணும்
> **கறைகெழுநாடு கறைவீடு செய்ம் என**
> (சிலம்பு 28:203-204)

ஆணைபிறப்பிக்கிறான்.

களின் நோக்கம் மேலும் விரிவானது. ஒரு நாட்டின் அனைத்துப் பொருள்வாழ்வையுமே திருத்துதல், சீரமைத்தல், உயர்த்துதல் ஆகிய பயன்களை நோக்கங்களாகக் கொண்டவை இன்றைய அறிக்கைகள். ஆனால் பண்டைக் காலத்தில் இத்தகைய நோக்கங்களும் இல்லை; அறிக்கைகளும் இல்லை. வரவு செலவுத் திட்டங்கள் எந்த அளவு வகுக்கப்பட்டன என்பதன் வரலாறும் அறியுமாறு இல்லை. இருந்தும் குறளில் பொதுவாக இவைபற்றிச் சில கருத்துக்கள் கிடைக்கின்றன. செலவினங்களின் பொதுவான பயன், வரவு செலவு இவற்றிடையே இருக்க வேண்டிய உறவு, ஒன்றை ஒன்று தழுவிச் செல்லுதலின் தேவை, வரவினைச் செலவு விஞ்சாதிருத்தல், விஞ்சின் வரும்கேடு ஆகியவை பற்றிக் குறள் அறிவுரை தந்திருக்கிறது. இவை பற்றி இனிச்சிறிது காணலாம்.

**பயன்.** அரசுக்கு உரிய செலவுகள் எவை எவை என மேலே விளக்கப்பட்டன. அவை குறிப்பிட்டுச் சொல்லப்பட்டவை. இப் பயன்கள் எல்லாம் முப்பாலாசிரியர்க்கு முக்கியமானவை. செல்வம் எவ்வழிகளில் செலவிடப்படுகின்றது என்பதைவிட என்ன பயன்களுக்குச் செலவிடப்படுகிறது என்பதையே அவர் அக்கறையுடன் குறிப்பிடுகிறார். இன்னவற்றுக்குச் செலவு என அவரே தந்தவை குறைவு எனக் கண்டோம். ஆனால் அவர் செல்வத்தின் பயன்களைச் சுட்டுவதற்கு **'நன்றியில் செல்வம்'** என ஓரதிகாரமே (101) அமைத்துள்ளார். பரிமேலழகர் **வகுத்தல்** என்பதை விளக்குகின்றபோது அரசன் அறப்பொருட்டாகவும் பொருட்பொருட்டாகவும் இன்பப் பொருட்டாகவும் செலவிடல் வேண்டும் எனக் குறிப்பிட்டது மேலே எடுத்துக்காட்டப்பட்டது. (காண்க 3. 11. 1.) அறம் பொருள் இன்பம் ஆகிய இவையே செல்வத்தின் பயன் எனப் பரிமேலழகர் கருதுவதாகத் தெரிகிறது. இங்குக்கூட இன்பம் அரசன் இன்பமா, குடிமக்கள் இன்பமா என்பது தெளிவுபடவில்லை. அறப்பொருட்டுச் செலவு பற்றிப் பரிமேலழகர் விளக்குகின்றபோது, 'கடவுளர், அந்தணர், வறியோர் என்றிவர்க்கும் புகழிற்கும் கொடுத்தலை'க் குறிப்பிடுகிறார், வள்ளுவர், இத்தகையவற்றையே பயன் எனக் கருதுகிறார். கொடுப்பதும் துய்ப்பதுமே திருவள்ளுவர்க்குத் தலையாய பயன்கள் :

> கொடுப்பதூஉம் துய்ப்பதூஉம் இல்லார்க்கு அடுக்கிய
> கோடிஉண் டாயினும் இல். (குறள் 1005)

இவ்விரண்டு பயன்களுள்ளும் கொடுப்பதை முன் வைத்தது அதன் முதன்மை கருதிப்போலும். 'ஈதல் இயலாதபோது சாதலும் இனிது' என்றல்லவோ வள்ளுவர் வற்புறுத்தினர் ? (குறள் 230). பரிமேலழகர் குறிப்பிடுவதுபோன்று 'கொடுத்தல் கடவுளர்க்கும் அந்தணர்க்கும்' என வள்ளுவர் விளம்பவில்லை. அது பரிமேலழகர் செருகல். ஏதும் அற்ற வறியோர்க்குக் கொடுத்தலையே கொடை என்கின்றார் வள்ளுவர் :

*அற்றார்க்குஒன் று ஆற்றாதான் செல்வம் மிகநலம்*
*பெற்றாள் தமியள்மூத் தற்று.* (குறள் 1007)

'தக்கார்க்கு ஒன்று ஈதலும்' வேண்டும் எனப் பொதுப்படவும் கூறுகிறார் (குறள் 1006). ஈதலின் விளைவால் இசை தோன்றும் என்பது வள்ளுவர் கருத்து. இசைவேண்டியாவது ஈயாதவர் புவிப்பாரம் எனப் பழிக்கவும் செய்கிறார் அவர்:

*ஈட்டம் இவறி இசைவேண்டா ஆடவர்*
*தோற்றம் நிலக்குப் பொறை.* (குறள் 1003)

தேடிய பொருளைத் துய்க்காது வைத்திருக்கும்போது சாக்காடு வருமானால் என்ன பயன் கிட்டும் எனக்கேட்கிறார் குறளாசிரியர்:

*வைத்தான் வாய்சான்ற பெரும்பொருள் அஃதுண்ணான்*
*செத்தான் செயக்கிடந்தது இல்.* (குறள் 1001)

தானும் துய்க்காது அறம் எனக்கருதி அளிக்கவும் செய்யாது குவித்த பொருள் அவனுக்குப் பின்னால் பிறர்க்குத் தானே சென்று சேரும்? அடுத்தவர்மீது அன்பிருக்குமானால் அளிக்காது இருந்திருப்பரா?

*அன்புஒரீஇத் தற்செற்று அறம்நோக்காது ஈட்டிய*
*ஒண்பொருள் கொள்வார் பிறர்.* (குறள் 1009)

இவ்வாறு பயன்படாச் செல்வத்துக்கு அச்செல்வனே ஒரு நோயாம் என்கிறது ஒருகுறள் (1006); அச்செல்வம் 'நடுவூருள் நச்சு மரம் பழுத்தது போல்' என்கிறது மற்றொருகுறள் (1008).

இத்தகைய விழுமிய கருத்துக்களைக் கொண்ட 'நன்றியில் செல்வம்' ஒழிபியலில் ஒதுங்கியிருக்கிறது; குடிகளுக்கு எனக்குறிக்கப்படுகிறது. செல்வத்தின் செலவு இன்னின்னார்க்கு என வகுக்கப் படலாம்; ஆனால் பயன் எல்லார்க்கும் பொதுவாகலாம்.

செல்வத்துப் பயனே ஈதல்;
துய்ப்பேம் எனினே தப்புந பலவே. (புறம் 189 : 7-8)

என நக்கீரனுர் எடுத்துக்காட்டும் தமிழ் மரபு மன்னர்க்கும் மற்றையோர்க்கும் பொது. கோமகனுக்குக் கொடை, ஒளிதரும் என வள்ளுவர் முன்னரே குறிப்பிட்டுள்ளார் (குறள் 390). ஈகை, வேந்தர்க்கு இயல்பு (குறள் 382) என்றும் இயம்பியுள்ளார்; துய்த்தலை 'நன்றியில் செல்வத்தில்' தான் நன்கு வற்புறுத்துகிருர்.[39]

**எல்லை.** அரசு, வரவுக்கு அடங்கிய செலவு செய்தல் இன்றியமையாதது; இது பொருள் வாழ்வின் ஒருகூறுமட்டுமல்ல; ஓர் ஒழுகலாறும் ஆகும் என வள்ளுவர் கருதுகிருர். இன்றைய அரசுகள் வரவுக்குமேலும் செலவு செய்தல் உண்டு. அதற்கு அவைகள் சில வழிகளையும் கண்டுள்ளன. **பணத்தாள் (Currency Notes)** அச்சிட்டு வெளியிடுதல் ஒருவழி. அரசு தன் அதிகாரத்தால் அப் பணத்தாள்களுக்கு மதிப்பளிக்கின்றது. பணத்தாளின் துணையால் பின்னர்ப் பொருள் படைக்கப்படுகிறது. இத்தகைய வழி அன்றைய அரசுகளுக்கு இல்லை; அவை, இவை பற்றி அறியவும் இல்லை இன்றைய அரசுகள் மக்களிடமிருந்தும் மாற்ருரிடமிருந்தும் கடன் வாங்குகின்றன; வட்டியைத் தந்துவிட்டு முதலைத்தள்ளிப் போட்டுக் கொண்டே போகின்றன. இக்கடனும் ஒருவனின் வருவாயாகி விடுகிறது. இத்தகைய வருவாய்கள் பண்டையரசுகளுக்கு இன்மையால் வரவுக்கு அடங்கிய செலவு செய்தல் அவ்வரசுகளுக்கு இன்றியமையாத தாகிவிடுகிறது. இதனை உணர்ந்து வள்ளுவர் பேசுகிருர்.

அரசு வலியறிந்து, காலமறிந்து, இடனறிந்து வினை செயல் வேண்டும் என வள்ளுவர் அறிவுரைதருகிருர். போர் வினையாயினும் பிறவினையாயினும் இவ்வாறு இயங்குதல் தேவை போலும். 'வினைவலியும் தன் வலியும் மாற்ருன்வலியும் துணைவலியும் தூக்கிச் செயலை' வற்புறுத்துகின்றபோது வள்ளுவர், அரசன் தன்பொருள் வலியையும் எண்ணுக என்கின்ருர்; வலிவுக்கு ஏற்ப — வரவுக்கு

39. வழங்கலும் துய்த்தலும் தேற்ருதான் பெற்ற
முழங்கு முரசுடைச் செல்வம் - தழங்கருவி
வேய்முற்றி முத்துதிரும் வெற்ப! அதுவன்ருே
நாய்பெற்ற தெங்கம் பழம்

எனப் பழமொழி (151) வள்ளுவர் கருத்துக்களை வற்புறுத்திச் செல்லுவதைக் காணலாம்.

ஏற்பச் - செலவிடுக என்கின்றார். எண்ணாதபோது வருவது கேடு என அறிவுறுத்துகிறார் அவர் :

> ஆகாறு அளவுஇட்டிது ஆயினும், கேடுஇல்லை
> போகாறு அகலாக் கடை. (குறள் 478)

பொருள் ஆகும் ஆறு இடுக்கு அளவினதே ஆயினும் அது போகும் ஆறு அதனைவிடப் பெரிதாக அகலாதபோது கெடுதல் இல்லை என அறிவுறுத்துகிறது இக்குறள். போகும் ஆறு அகலுமானால் கேடு உறுதி :

> அளவுஅறிந்து வாழாதான் வாழ்க்கை உளபோல
> இல்லாகித் தோன்றாக் கெடும். (குறள் 479)

அரசருக்கு ஈகை இயல்பு என்பார் வள்ளுவர். 'மேல்உலகம் இல் எனினும் ஈதலே நன்று' (குறள் 222) என்ற வள்ளுவர், அரசரின் ஈகைக்கும் கூட எல்லை வகுத்தார். 'தன்னை விற்றாயினும்தானம் செய்க' என்பது பின்னை வழக்கு. அதற்கு எல்லை இல்லை எனப் புராணங்கள் பேசுகின்றன. அவை எல்லாம் பொது மனிதர்க்கு; புவி ஆளும் மன்னர்க்குப் பொருந்தாது போலும். ஆகவே அரசன் தன் 'வலியறிதலில்' இதனை வற்புறுத்துகிறார் வள்ளுவர் :

> ஆற்றின் அளவுஅறிந்து ஈக; அதுபொருள்
> போற்றி வழங்கும் நெறி. (குறள் 477)
>
> உளவரை தூக்காத ஒப்புர வாண்மை
> வளவரை வல்லைக் கெடும். (குறள் 479)

வேந்தன் 'வளத்தக்கானாகி' வாழாதபோது தானும் தன் நாடும் குடியும் கெடும் எனவே கொள்ளவேண்டும். ஆகாற்றைவிடப் போகாறு பெரிதாகிறபோது அரசன், ஆகாற்றையும் பெரிதாக்க அறமல்லா வழிகளையும் அல்லல்வழிகளையும் பற்றிச் செல்ல நேரும். அப்போது அவன் அயலாரை மட்டும் அல்ல; தன்னவரையே கொள்ளையிட முயலுவான்; குடிகளை அலைத்துப் பொருள் பெற எண்ணுவான். இந்நிலையே கொடுங்கோன்மை எனப்படும். இத்தகைய கொடுங்கோன்மையை வள்ளுவர் எதிர்பார்க்கிறார்; ஆகவேதான் செலவுக்கு எல்லை வகுத்திருக்கிறார். கொடுங்கோன்மை இன்ன கொடுமை புரியும் எனவும் விளக்குகிறார். பொருளுடையாரிடம் பணிந்து போய்ப் பல்லிளித்தும் பணம் கேட்பானும் அரசன். அது இரத்தலாயினும் கொடிது; வழிப்பறிக்குச் சமம்; குடி மக்கட்குக் கோமகன் கொள்ளைக் காரனாகத் தோன்றும் நிலை இது என்கிறார் வள்ளுவர் :

வேலொடு நின்றான் 'இடு'என் றது போலும்
கோலொடு நின்றான் இரவு. (குறள் 552)

இக்கொடுங்கோலரசன் நாட்டில் முறை ஒழுங்காக நடைபெறாது; செல்வமுடைய குடிமக்கள் அஞ்சி அஞ்சி வாழும்நிலை தோன்றும். பொருளில்லாதோரே அத்தகைய நாட்டில் மன அமைதியுடன் வாழ முடியும். வறுமையைவிட வளமையே அங்கே வருத்தத்தைத் தரும். அரசன்சுற்றம் பொருளுக்காகச் செல்வரை முற்றுகை இட்டுக் கொண்டே இருக்கும் போலும். அரசன் தனக்கு உரியது இவ்வளவு; குடிகளுக்கு உரியது இவ்வளவு; என்றமுறையில்லாது கருத்துப்போன போக்கில் கவர்ந்து போகும் நிலை இருக்கும். அந்நிலையே குடிகளுக்-குத் தாங்கொணாத் துயரம்:

இன்மையின் இன்னாது உடைமை முறைசெய்யா
மன்னவன் கோற்கீழ்ப் படின். (குறள் 558)

கொடுங்கோலரசன் செய்யும் கொடுமையினைப் பரிமேலழகர் இக்குறளுரையில் இவ்வாறு விளக்குகிறார்:

"தனக்கு உரிய பொருளோடு அமையாது மேலும் வெஃகுவோனது நாட்டுக் கைந்நோவயாப்புண்டல் முதலிய வருவது பொருளுடையார்க்கே ஆகலின் அவ்வுடைமை இன்மையினும் இன்னாதாயிற்று".[40]

---

40. கல்வியின் பெருமையை விளக்குகின்றபோது வள்ளுவர் 'கேடில் விழுச்செல்வம் கல்வி,' என்கின்றார் (குறள் 400). இதனால் பொருட் செல்வம் 'கேடுடைய செல்வம்' என்றாகிறது. கல்வியின் இயல்பும் பொருளின் இயல்பும் இவையாம். 'கேடு' என்பது அழிவு. பரிமேலழகர் "அழிவின்மையாவது தாயத்தார், கள்வர், வலியர், அரசர் என்று இவரால் கொள்ளப்படாமையும், வழிபட்டார்க்குக் கொடுத்துழிக்குறை யாமையுமாம்'' என விளக்குகிறார். இதனால் பொருட்செல்வத்திற்கு அரசர் முதலானோரால் கொள்ளப்படுதலாகிய அழிவு உண்டு என்றாகிறது. பரிமேலழகரால் குறிக்கப்படும் இவ்வழிவு 'இன்மையின் இன்னாது உடைமை' எனக் கொடுங்கோன்மை என்னும் அதிகாரத்தில் வள்ளுவரால் குறிக்கப் படும் 'இன்னாமை'யாகத்தான் இருக்கவேண்டும். அவர் குறிக்கும் அரசன் 'முறை செய்யா மன்னவன்' என வள்ளுவர் குறிப்பிடும் கொடுங்கோல-னைக் கொள்ளப்படவேண்டும்.

இத்தகைய கொடுமையால் செல்வர் நிலைகுலைவர்; மன்னனுக்கும் பயனில்லை. இதனால் நாடுகெடும் என்பது தெளிவாகிறது. இன்றைய பொருளியலறிஞர்கள், நாடு பொருளால் மேலும் மேலும் வளமுற மக்கள் தடையேதும் இன்றிப் பொருளீட்டித் தாராளமாக உடைமை கொண்டு அஞ்சாது போற்றிப் பேணத்தக்க சூழ்நிலை வேண்டும் என வற்புறுத்துகின்றனர். அத்தகைய நாட்டிலேயே பொருள் மேலும் மேலும் முதலீடு செய்யப்பட்டுப் பண்ட ஆக்கம் பெருகி வளம் கொழிக்கும் என அவர்கள் சுட்டிக்காட்டுகின்றனர். குவித்த பொருளைக் காவலனே கவர்ந்து செல்வான் என்ற அச்சம் இருக்கும்போது அதனை ஈட்டுவதற்கான விருப்பமும் ஊக்கமும் மக்களிடம் இருக்கமாட்டா. நாடு வறுமையிலேயே வாட நேரிடும். இக்கொடுமைகள் எல்லாம் கொடுங்கோன்மையின் விளைவு; அக் கொடுங்கோன்மை, பேராறு அகலாது ஆளத்தெரியாத அரசரால் நேர்வது. ஆகவே செலவிற்கும் எல்லை தேவை. இதுவே வள்ளுவர் வழங்கும் அறிவுரை.

நிதிநிலையறிக்கை இன்றைய குடியாட்சிஅரசுகளின் இயல்புகளில் ஒன்று. இன்று குடிகட்கே மதிப்பு. ஆகவே ஆள்வோர் ஆளப்படுவோரை மதித்துச் செலவினங்களுக்கு அனுமதி பெறுதல் கட்டாயமாகிறது. கோனாட்சிக் காலத்தில் இக்கட்டாயம் இல்லை. இருந்தும் வேந்தரும் வரையறையின்றிச் செலவிடுதல் முடியாது. இந்நிலையில் இன்றைய நிதியறிக்கைகள் போன்று அன்று சான்றோரே அறிவுரையும் வரையறையும் வழங்கினர். 'பெரியாரைத் துணைக்கோடல்' என்னும் குறளதிகாரம் இதனைச் சுட்டி நிற்கிறது. சான்றோராம் வள்ளுவர் தம் குறள் வழி அப்பணியைச் செய்து நிற்கிறார் என்பதே இங்கு மனங்கொள்ளத்தக்கது.

# வள்ளுவர் கண்ட வளநாடு

## 4. 1. நாடு

பொருளியலின் நோக்கம் முயற்சி ஆகியவை எல்லாம் மக்களின் தேவைகளை நிறைவேற்றுதல்தான். இத்தேவைகளில் முதன்மையானவை உணவும் உறையுளும் உடையும் என்பவையே. இவ்வடிப்படைத் தேவைகளோடு நலமும் இன்பமும் நல்கும் பல்வேறு பொருள்களையும் மக்கள் நாடுகிறார்கள்.[1] இவையெல்லாம் குறைவறக் கிடைக்குமானால் மக்கள் மனமகிழ்ச்சியுடன் நல் வாழ்வு வாழ்வார்கள். இத்தகைய மக்கள் வாழும் சமூகம் ஒன்றைப் படைத்தலே பொருளியலின் பணி. சுருங்கச் சொன்னால் 'எல்லார்க்கும் எல்லாம் என்றிருப்பதான இடம் நோக்கி நகர்கின்றது இந்த வையம்' என்ற புரட்சிப் பாவலரின் கனவை[2] நனவாக்குதலே அதன் பணி. இந்த வையமே வள நாடு என வழங்கத்தக்கது. இவ்வளநாட்டைப் படைப்பதற்கான வழி துறைகளைப் பொருளியல் வகுத்துத் தருகிறது. பல்வேறு சிந்தனையாளர்களும் இதுபற்றி எண்ணியிருக்கின்றனர். வள்ளுவர் கண்ட வள நாடும் ஒன்று உண்டு.

வள்ளுவர் **நாடு** என ஓரதிகாரமே (73) அமைத்துள்ளார். நாடு அரசுக்கு ஒருறுப்பு (அங்கம்) என்பது இந்திய மரபு. இது நிலப் பரப்பும் குடி மக்களும் கொண்டதாகும்.[3] வள்ளுவர், அரசனுக்கு உரிய

---

1. இவை பற்றியெல்லாம் முன்னர்க் கூறப்பட்டது.
2. பாரதிதாசன், பாண்டியன் பரிசு.
3. 'the territory of the State and its people (rastra or janapada)"—P. 9, PTAI.

உடைமைகள் ஆறினைத் தருகிறார்; அவற்றுள் ஒன்று குடி; அந்தக் குடியே நாடு எனக் கொள்ளுகிறார் பரிமேலழகர். 'ஈண்டுக் குடி என்றது அதனை உடைய நாட்டினை' என எழுதுகிறார் அவர். இவற்றால் எல்லாம் நாடு பற்றிய சிந்தனையின் வளம் வெளிப்படுகிறது.

இன்றைய பொருளியலறிஞர்கள் வளநாடு படைத்தல் பற்றி என்ன கூறுகின்றனர்? இயற்கை வளமும் மக்கள் வளமும் செழிப்புற்று உழவாலும் தொழிலாலும் வணிகத்தாலும் பண்டங்களும் பணிகளும் (Goods and Services) மலிந்து பஞ்சமும் பட்டினியும் பற்றுக் குறையும் இல்லையாகிச் சமூகத்தின் அனைத்து நிலையினரும் நேரிய முறையில் வருவாயில் பங்கு பெற்று எல்லோரும் இன்புற்று வாழும் நாடே வளநாடு எனப்பொருளியல், வளநாட்டை விளக்குகிறது. அரசியல் சாராது பொருளியல் நோக்கோடு தரும் விளக்கம் இது. அரசியலறிஞர்கள், மக்களுக்காக மக்களால் நடத்தப்படும் மக்களரசும் நாட்டோடு இணைந்ததே வள நாடு என மேலும் கூட்டியுரைப்பர். வள்ளுவர் ஓரரசியற் சமூகச் சிந்தனையாளர். அவருக்கு அரசில்லாது நாடில்லை. அது உண்மையும் கூட. ஆகவே அவர் கண்ட நாட்டில் வளத்தோடு கூட அரசும் இடம் பெற்றுள்ளது.

நாடு என்னும் அதிகாரத்தில் நாட்டது இலக்கணம் ஆறு குறள்களிலும் அதன் உறுப்பு ஒரு குறளிலும் அதன் அழகு ஒரு குறளிலும்அதன் குற்றம் இரண்டு குறள்களிலும் கூறப்படுகின்றன எனச் சுட்டுகிறார் பரிமேலழகர். அதன் திறத்தை இனிக் காணலாம்.

## 4. 2. நாட்டின் நான்கு வளங்கள்

வள்ளுவர் நாடு பற்றிக் கூறும் கருத்துக்களை இரு கூறுகக் காணலாம். ஒரு கூறு, அரசியற் கருத்துக்கள். அடுத்த கூறு, பொருள் வாழ்வுக் கருத்துக்கள். இந்தக் கருத்துக்களை உடன்பாட்டிலும் எதிர் மறையிலும் அவர் கூறிச்செல்லுகிறார்

வள்ளுவர் நாட்டின் பொருள்வாழ்வுபற்றி நான்கு வளங்களைத் தந்து பேசுகிறார். அவை,

1) இயற்கை வளம்
2) மக்கள் வளம்
3) விளைவு வளம்
4) செல்வ வளம்

என்பன. இந்நான்கும் ஒரு நாட்டிற்கு இன்றியமையாதவை என்பது அவர் கருத்து. அவர் இவற்றைப் பல்வேறு சொற்களாலும் பல்வேறு அடைமொழிகளோடும் விளக்குகிறார். இவற்றில் முன்னிரண்டும் இயல்பாய் உள்ளவை; அமைபவை; அடிப்படையானவையும் ஆகும். பின்னிரண்டும் முயற்சியால் தோன்றுபவை. இப்பின்னிரண்டனுக்கும் முன்னிரண்டும் காரணமாகின்றன. இவ்வுறவு குறித்துக்கொள்ளத் தக்கது. இவைபற்றி இனித் தனித் தனியே காணலாம்.

## 3. 4. இயற்கை வளம்

இதுவே பொருள் வாழ்வுக்கெல்லாம் அடிப்படையானது என்பர், அறிஞர். இதிலே தலையானவை **நீர் வளம், கடல் வளம், மலை வளம், நில வளம், கனி வளம், காற்று வளம்** முதலியவை. சுருக்கமாகச் சொன்னால் இயற்கையில் அமைந்து கிடக்கும் அனைத்தும் இதனுள் அடங்கும். பொருளியலறிஞர் இவ்வியற்கை வளத்தையே Land என்பர். வள்ளுவர் இவ்வளத்தின் தேவையையும் சிறப்பையும் நன்கு உணர்ந்திருக்கிறார். நாட்டிற்கு உறுப்புக்கள் போன்று இன்றியமையாதவை பற்றி அவர் ஒரு குறளில் குறிப்பிடுகிறார்,

இருபுனலும் வாய்ந்த மலையும் வருபுனலும்
வல்லரணும் நாட்டிற்கு உறுப்பு. (குறள் 737)

இக்குறளுக்குப் பரிப்பெருமாள் எழுதிய உரை இதன் கருத்தை நன்கு புலப்படுத்துகிறது.

"நாடாக்கும் இடத்து யாறு ஒழுகும் இடத்தினையும், பயன் படும் மலையினையும், ஏரி ஆக்கும் நீர் நிறுத்தலாம் இடத்தினையும், குன்று கல்லி நீர் உண்டாக்கலாம் இடத்தினையும், அரண் ஆக்கும் இடத்தினையும் கண்டு அவ்விடத்தை நாடாக்குக; அவை நாட்டிற்கு உறுப்பு ஆகலான் என்றவாறாயிற்று. இவ்வைந்து உறுப்பும் குறை யாமல் வேண்டும் என்றது."

இக்குறளில் வல்லரண் தவிர மற்றவை எல்லாம் நாட்டிற்கு வேண்டப்படும் வளம் என்ற கருத்தில் கூறப்பட்டவையே. 'ஈண்டுப் புனல் என்றது துரவு கேணிகளும் ஏரிகளும் ஆறுகளுமாகிய **ஆதாரங்களை'** எனப்பரிமேலழகர் எழுதுவது இக்காரணம் பற்றியே. வள்ளுவர் வல்லரணையும் இங்கு ஒருறுப்பாகக் கூறுதல் கூட இவ்

வளங்களுக்காவல் வேண்டும் என்பது பற்றி ஆகலாம். ஏரி, குளங்களாகிய நீர் நிலைகளை மாற்றாரிடமிருந்து காத்தலும் இன்றியமையாதது. அது காவலன் கடமையும் ஆகும். இன்றும் கூடப் போர்க் காலங்களில் பகைவர்க்குத் தாக்கும் குறிகளாக இவை இருத்தலைக் காணுகிறோம்.

## 4. 3. 1. மலை வளமும் கான் வளமும்

இக்குறள், நாட்டுக்கு வேண்டிய வளங்களிலே ஒன்றாக மலை வளத்தைக் குறிப்பிடுகிறது. மலையிலே மணியும் பொன்னும் கிடைக்கும் என்பதைப் பண்டைத் தமிழ் இலக்கியங்களால் அறிகிறோம். மலையிலுள்ள சுனைநீர் பயன்படும். மலையில் காடிருக்கும். காட்டின் பல்வேறு மரங்களும் உயிர்களும் வளங்களே. தேக்கும் மூங்கிலும் அகிலும் ஆரமும் கறியும் பிறவும் பண்டு பரக்கப் பேசப் பட்டன. குன்றக்குறவர் செங்குட்டுவனுக்குக் கையுறையாகத் தந்த மலைபடு பொருள்கள் மலைவளத்தின் இயல்பினை நன்கு புலப்படுத்துகின்றன. நிலத்திலும் காடு உண்டானாலும் வள்ளுவர் காட்டினையும் சேர்த்தே **வாய்ந்த மலை** என்று கூறியிருக்கவேண்டும். மணக்குடவரும் பரிப்பெருமாளும் வாய்ந்த மலை என்பதற்குப் **'பயன்படும் மலை'** என்றே உரை வகுக்கின்றனர். பரிமேலழகரும் 'தன்வளம் தருதலால் வாய்ந்த மலை என்றார்' என்கிறார். இன்றைய பொருளியலறிஞர்கள், காடும் மலையும் ஒரு நாட்டின் பொருளாக்கத்திற்குப் பயன்படும் பெருவளங்கள் என மதிப்பிட்டுப் போற்றுகின்றனர். இன்று கேரளா போன்ற நாடுகள் மலைபடுவளத்தையே நம்பி வாழ்தல் பலரும் அறிந்ததே.

## 4. 3. 2. நீர் வளம்

இந்தக் குறளில் அடுத்துக் கூறப்படும் வளம் நீர் வளம்; அதாவது இருபுனலும் வருபுனலும். 'நீர் இன்றி அமையாது உலகு' என்பது அனைவரும் அறிந்ததே. அது உணவாதல் மட்டுமல்லாது உணவினை ஆக்கவும் பயன்படுகிறது. நீர் இல்லையேல் உணவு தரும் உழுதொழிலே இல்லை எனலாம். இன்றைய மக்கள் வாழ்வில் நீர் உழுதொழிலுக்கு மட்டும் அல்லாமல் பிற தொழிலுக்கும் பெரிதும் பயன்படுகிறது. நீர் ஒருபேராற்றல்; மின்னாற்றல் காணவும் பொறிகளை இயக்கவும் அது பயன்படுகிறது. அதனால் இன்றைய பொருளியலறிஞர் நீர் வளத்தைப் பெரிதும் போற்றுகின்றனர்.

பொதுவான நீர்வளத்துள் அவர்கள் கடல் வளத்தையும் இணைத்துக் காண்கின்றனர். கடல்படுவளம் அனைவரும் அறிந்ததே. மீன், முத்து, பவளம் போன்றவை உணவும் செல்வமும் ஆகின்றன. உவர்க்கும் கடலாலேயே உப்பு விளைகிறது. வணிகத்துக்கும் போக்கு வரத்துக்கும் அது பயன்படுகிறது. இவ்வளங்களையுடைய கடலின் பயனை வள்ளுவர் அறியாமல் இருந்திருக்க மாட்டார். வேண்டுமானால் கொல்லாமை, புலாலுண்ணாமை என்னும் அறம் கருதிக் கடலுயிர்களாலாகும் உணவை அவர் புறக்கணித்திருக்கலாம். ஆனால் பிற கடல்படுவளங்களை அவர் புறக்கணித்திருக்க மாட்டார். வள நாடு ஒன்றின் இலக்கணத்தையே வள்ளுவர் நாடு என்னும் அதிகாரத்தில் உரைத்துச் செல்லுகின்றாராதலால் அவர் சுட்டும் புனலில் கடலும் அடங்க வேண்டும் என்று கொள்ளுதல் பொருத்தமே.

'இருபுனல்', 'வருபுனல்', என வள்ளுவர் இரு தொடர்களைத் தருகிறார். வருபுனல் என்பது ஆற்றுநீர் எனவே எல்லா உரையாசிரியர்களும் உரைக்கின்றனர். ஆனால் இருபுனல் 'மேல்நீர், கீழ்நீர்' எனப் பரிமேலழகரும் மணக்குடவரும் உரைக்கின்றனர் அவை 'துரவு கேணிகளும் ஏரிகளும்' என்பர் பரிமேலழகர்; கிணறு என்பர் மணக்குடவர்; இவர்களைப் பின்பற்றிப் பரிதியார் கிணறு குளம் என்பர். பரிப்பெருமாளும் கிணறு ஏரி எனக் கருதுவதாகவே தெரிகிறது. கிணற்று நீர் என்பது மண்ணின் கீழுள்ள ஊற்றால் அமைவது; குளம் ஏரிகளின் நீர், மண்ணின் மேல் பெய்த மழையால் தேங்கி அமைவது. இவ்வாறான ஆறு ஊற்று மழை என்னும் மூவகை நீரையும் வள்ளுவர் நாட்டிற்குத் தேவை எனத் தருகிறார். முந்நீர் என்னும் ஒருவழக்கும் தமிழகத்தில் உண்டு முந்நீராவது கடல்; மூவகை நீரும் சேருவதால் அது இவ்வாறு பெயர் பெற்றது என்பர். இவ் வழக்கினை ஒட்டியே வள்ளுவர் முந்நீரைத் தந்திருக்கிறார் எனலாம். இந்நிலையில் முந்நீராகிய, முந்நீராலாகிய கடலை அவர் கருத்தில் கொள்ளாது இருந்திருப்பாரோ ?

**மழை.** முந்நீருள் ஆற்றுநீருக்கும் ஊற்றுநீருக்கும் முதலாக அமைந்திருப்பது மேல்நீர் எனப்படும் மழைநீர். மேகம் மலையால் தடுக்கப்பட்டு மழையாகப் பொழிந்து ஆற்றைத் தோற்றுவிக்கிறது. மண்ணை ஈரமாக்கி ஊற்றையும் தோற்றுவிக்கிறது. ஆகவே மேகத்தை இடை நின்று தடுத்து மழையைப் பொழிவிப்பதற்கும் நாட்டில் ஆற்றை நடத்துவதற்கும் வாய்ப்பாக மலை வேண்டும். இது

மலையின் மற்றொரு பயன். இது கருதியும் வள்ளுவர் 'வாய்ந்த மலையும்' என்றார். இதனை உணர்ந்தே பரிமேலழகர் 'வாய்ப்புடைத்தாய மலையும் அதனினின்றும் வருவதாய நீரும்' என உரை எழுதுகிறார். வருவதாய நீர் ஆற்று நீராகும். இன்றைய நில நூலறிஞர் விளக்கும் கருத்துக்கள் இவை. இதனை வள்ளுவரிடம் கண்டு மகிழலாம். அவர் உலகியலறிவு இதனால் வெளிப்படுகிறது.

முந்நீருள் மழை நீரே மற்ற நீருக்கு அடிப்படையாக விளங்குகிறது என்பது சுட்டிக் காட்டப்பட்டது. ஆகவே மழை நீர் மட்டும் கூறப்பட்டால் போதாதோ என்ற கேள்வி எழலாம். மழை நீர் பெய்யும்போது மட்டும் பயன் தருவது. ஊற்று நீரும் ஆற்று நீரும் நின்று பயன் தருவன. மாரிக் காலத்தில் மட்டுமே மழையின் பயன் பெறலாம்; மற்ற காலங்களில் ஆற்று நீரும் ஊற்று நீரும்தான் பயன்தரும். மழை, ஆண்டு முழுதும் பெய்தல் அரிது. இந்தியாவில் அதற்குப் பருவங்கள் உண்டு. மாரிக்காலத்தில் பெய்த மழையினை ஏரியாகவும் குளங்களாகவும் தேக்கி வைத்துக்கொள்ளலாம். அவையும் வறண்டபோது ஆழ்கிணறுகள் தோண்டி நீர் பெறலாம். இதனால் ஆண்டு முழுதும் பயிர்த் தொழில் செய்யக்கூடும். இந்தியாவின் உழவர்கள் பெரும்பாலோர் வான் நோக்கி வாழும் குடிகள்; மழையில்லாக் காலத்து வழியறியாது திகைப்பவர்கள். வான்நோக்கி வாழும் செய் புன்செய் ஆகிறது. இந்தியாவின் ஏழ்மை நிலைமைக்கு இதுவே காரணம் என்பர் அறிஞர்.[4] இந்தியாவிற்கு வறண்ட காலத்திலும் நீர்வளம் தேவை. இந்நுட்பத்தினை அறிந்த வள்ளுவர் முந்நீருடையதே வளநாடு என்றார். பரிமேலழகர் இதனை உணர்ந்து எழுதுகிறார்: 'அவற்றான் வானம் வறப்பினும் வளனுடைமை பெறப்பட்டது'.

**வான் சிறப்பு.** இதுவரை உரைத்தவற்றால் மழையின் தேவையும் பயனும் நன்கு விளங்கும். மழையின் வளத்துக்கு ஏற்பவே ஒருநாட்டின் வளமும் வாழ்வும் அமைகின்றன எனவே அறிஞர் கருதுகின்றனர். இவ்வுண்மையினை அறிந்தே வள்ளுவர் வான்மழையைப் போற்றுகிறார். குறளுக்குப் பாயிரம் என நான்கு

---

4. ''இந்திய மக்களின் வாழ்வாகப் போற்றப்படுகின்ற வேளாண்மை நிலை குலைந்த தன்மையில் இருப்பதற்கு முக்கிய காரணம் மழையின் உறுதியற்ற தன்மையே.'' — Jather and Beri in Indian Economics. பக். 33, வ வ பொ வா.

அதிகாரங்களை அவர் இயற்றியுள்ளார். அதிலே ஒன்று வான் சிறப்பு (அதிகாரம் 2). 'மாமழை போற்றுதும்' என்பது சிலம்பு சுட்டிய தமிழ் மரபு. அம்மரபின் காவலராய் வள்ளுவர் விளங்குகிறார். 'வானின்று உலகம் வழங்கி வருதலால் மழை அமிழ்தம்' என்று வள்ளுவர் அதனை வாழ்த்திவிட்டு அவ்வதிகாரம் முழுதும் அதன் பயனையும் பெருமையையும் பலபட எடுத்துரைக்கிறார். வளம் கொழிக்கும் நாடு ஒன்றை வள்ளுவர் காணவிழைகிறார் என்பது அவர் கருத்துக்களால் நன்கு விளங்குகிறது.

வள்ளுவர், வான் சிறப்பு என்னும் அதிகாரத்தில் மழை வளத்தின் அறுவகைப் பயன்களைச் சுட்டிக் காட்டுகிறார். இவற்றுள் மூன்றைப் பொருளியல் தன் பொருளாகப் போற்றுகிறது.

**முதற்பயன் அதுவே உணவாதல்:**

*துப்பார்க்குத் துப்பாய தூஉம் மழை* (குறள் 12)

துப்பு என்பது உணவு.

இரண்டாவது பயன் உலகத்து உயிர்களுக்குப் பசிபோக்கும் **உணவினை உண்டாக்குதல்:**

*துப்பார்க்குத் துப்பாய துப்பு ஆக்கி......* (குறள் 12)

*விண்ணின்று பொய்ப்பின் விரிநீர் வியனுலகத்து*
*உண்ணின்று உடற்றும் பசி.* (குறள் 13)

மக்கள் தவிர மற்ற உயிர்கள் எல்லாம் இயற்கையில் இயல்பாகக் கிடைப்பவற்றைத் தம் உணவாகவும் இரையாகவும் உட்கொள்ளுகின்றன. இவ்வுணவும் இரையும், தாவரங்களும் பிற உயிர்களுமாகும். இவற்றின் வாழ்வுக்கு மழை இன்றியமையாதது என்பது சொல்லாமலே விளங்கும்.

மூன்றாவது பயன் மக்களுக்குத் தேவையான உணவுப் பண்டங்களை விளைவு செய்யும் **உழுதொழிலுக்கு நீர் தரல்;**

*ஏரின் உழாஅர் உழவர் புயல்என்னும்*
*வாரி வளங்குன்றிக் கால்.* (குறள் 14)

நான்காவது பயன் உலகின் **தாவர இனங்கள் வாழ்வதற்கு நீர் தரல்:**

*விசும்பின் துளிவீழின் அல்லால்மற்று ஆங்கே*
*பசும்புல் தலைகாண்பு அரிது* (குறள் 16)

இக்குறள் குறிப்பாகக் காடுபடு செல்வத்தையும் ஓரளவு மலைபடு செல்வத்தையும் குறிக்கிறது எனக் கொள்ளலாம்.

ஐந்தாவது பயன் **கடற் செல்வத்திற்குத் துணையாதல்:**

*நெடுங்கடலும் தன்நீர்மை குன்றும் தடிந்துஎழிலி*
*தான்நல்காது ஆகி விடின்.* (குறள் 17)

முத்து பவளம் மீன் போன்ற வாழ்க்கைக்கு நன்னீராகிய மழை தேவை போலும். கடல் நீர்மை குன்றுதலாவது 'நீர்வாழ் உயிர்கள் பிறவாமையும், மணி முதலாயின படாமையுமாம்' எனப் பரிமேலழகர் இதனை விளக்குவர்.

ஆறுவது பயன் **சமய ஒழுக்கங்களும் நடைபெறத் துணையாதல்:**

*சிறப்பொடு பூசனை செல்லாது வானம்*
*வறக்குமேல் வானோர்க்கும் ஈண்டு.* (குறள் 18)

*தானம் தவம்இரண்டும் தங்கா வியனுலகம்*
*வானம் வழங்காது எனின்.* (குறள் 19)

பூசனையும் தானமும் தவமும் நடைபெற உணவுப் பொருள்களும் மக்கள் நல்வாழ்வும் தேவை என்பதை இக்குறள்கள் குறித்து நிற்கின்றன.

வான் சிறப்பில் வள்ளுவர், உழவின் வழிப்படும் நிலம்படு செல்வமாகிய விளைவையும் காடுபடு செல்வத்தையும் கடல்படு செல்வத்தையும் குறிப்பிடுதல் இன்றைய பொருளியலறிஞர் போற்றுவதற்குரியது. இந்தியப் பொருள் வாழ்வில் தலையாயது வேளாண்மையே. அடுத்தன பெருந்தொழில்களும் சிறுதொழில்களும், இத்தொழில்களும் பெரும்பாலும் வேளாண்மையின் விளைவுகளைப் பொறுத்திருக்கின்றன. வேளாண்மை இவற்றுக்கான முதற் பொருள்களைத் (Raw materials) தருகின்றது. காடுபடு வளமும் கடல்படு வளமும் தாமே தொழில்களாக அமைதல் மட்டுமல்லாது பிற தொழில்களுக்கும் முதற் பொருள்களைத் தருகின்றன. இவையனைத்துக்கும் மழையே முதற் காரணமாக அமைந்திருப்பதைக் கண்டுரைத்த வள்ளுவர் திறம் தான் இங்கே குறிக்கத்தக்கது. வான் சிறப்பில் பத்துக் குறள்கள்

அமைந்திருந்த போதிலும் வள்ளுவர் ஒருகுறளில்கூட 'மாமழை போற்றுதும்' எனத் துதிபாடவில்லை. அதற்குமாருக அதன் பயன்களை உலகியல் நோக்கில் எடுத்துக் காட்டுகிருர். இது அவர் சிறப்பு.

## 4. 3. 3. நில வளம்

இயற்கை வழங்கிய வளங்களுள் சிறந்தது நிலவளம் என்பர் அறிஞர். இயற்கையுணவுக்கும் செயற்கையுணவுக்கும் நிலமே அடிப்படையாகிறது. இவ்வளத்தின் தேவையை வள்ளுவர் உணராது இருந்திருக்க மாட்டார். **'பயவாக் களர்'** (குறள் 406) பற்றிப் பேசும் அவர் பயக்கும் நிலம் பற்றியும் நன்குணர்ந்திருப்பார். **'நிலம் என்னும் நல்லாள்'** (குறள் 1040) என நிலத்தைப் போற்றுகின்ற அவர், அதுபற்றி,

தள்ளா விளையுளும் தக்காரும் தாழ்விலாச்
செல்வரும் சேர்வது நாடு (குறள் 731)

என்னும் குறளில் குறிப்பிடுகிருர். **விளையுள்** என்பதே நிலத்திற்கு அவர் வழங்கிய சொல். தள்ளா விளையுள் என்பதற்குப் பரிமேலழகர் 'குன்ருதவிளையுளைச் செய்வோர்' என உரை வகுக்கிருர். அவருக்கு விளையுள் என்பது விளைச்சல் ஆகும். பரிதியாரும் காளிங்கரும் இவ்வாறே கொள்ளுகின்றனர். ஆனல் மணக்குடவரும் பரிப்பெருமாளும் 'தப்பாமல் விளையும் நிலங்களும்' என உரை வகுத்துத் **'தள்ளா விளையுள் — மழையில்லாத காலத்தும் சாவி போகாத நிலம்'** என விளக்கமும் தருகின்றனர். இவற்ருல் தள்ளா விளையுள் என்பதற்கு உரை சொல்லுதலில் கருத்து வேறுபாடிருக்கிறது என்பது புலனுகிறது. ஆதலால் இவற்றுள் எது பொருந்துவது எனக் காணவேண்டி நேர்கிறது.

விளையுள் என்ற சொல் விளைவு, விளைச்சல் என்னும் பொருள் தருவதாகத் தோன்றுகிறது. விளை என்னும் வினைப் பகுதியிலிருந்து அது தோன்றியது என்பதும் இதனை வலியுறுத்துகிறது. ஆனல் விளையுள் என்பதற்கு **விளை நிலம்** என்னும் பொருளுண்டு. பிங்கலந்தை நிகண்டு இச்சொல்லுக்கு **வயல்** எனப்பொருள் தருகிறது. 'பெருநீர் விளையுள் எம் சிறுநல் வாழ்க்கை' என நெய்தல் வாழ்க்கையினை நற்றிணை 45 குறிப்பிடுகிறது. 'கடல் நீரை விளை வயலாகக் கொள்ளுகின்ற எமது சிறிய நல்ல வாழ்க்கை' என அதற்கு உரை

கூறப்படுகிறது.[5] இச்சான்றுகள் மணக்குடவர் பரிப்பெருமாள் உரைக் கருத்துக்களே சரி என வற்புறுத்துகின்றன. சங்க இலக்கியங்களும் இதற்குச் சான்று சொல்கின்றன:

மருஅ விளையுள் அருஅ யாணர்
..........................................
துவ்வா நறவு[6]
(பதிற்றுப்பத்து 60 : 8 — 12)

முடந்தை நெல்லின் கழையமை கழனிப்
பிழையா விளையுள் நாடகப் படுத்து
(பதிற்றுப்பத்து 32 : 13 — 14)

மழை யொழுக்கறுப் பிழையாவிளையுட்
பழையன் மோகூர்..........................
(மதுரைக் காஞ்சி 507)

மடங்கா விளையுள் நாடுகிழ வோயே
[புறம் 200 : 17]

....................................தாங்கா விளையுட்
காவிரி நாடும்..............................
[சிலம்பு 6 : 30 — 31]

பிழையா விளையுட் பெருவளம் சுரப்ப
[சிலம்பு 11 : 28]

தாங்கா விளையுள் நன்னா டதனுள்
[சிலம்பு 23 : 60]

மடங்கா விளையுள் வயலூர் நல்கி
[சிலம்பு 23 : 119]

மழைவளம் தருதலின் மன்னுயிர் ஓங்கிப்
பிழையா விளையுளும் பெருகியது அன்றே
[மணிமேகலை 11 ; 90 — 81]

இங்கெல்லாம் பொதுவாக விளைச்சல் என்றே பொருள் சொல்லப்படுகிறது. விளையுள் என்பது பெரும்பாலும் நாட்டுக்கும் ஊருக்கும் அடையாக வந்திருப்பதை இங்கெல்லாம் காணலாம். நாட்டுக்குப் பெருமை தருவதாக வயலையும் நிலவளத்தையுமே அடையாகக் கூறுதல் நாட்டுப் படல மரபு. இம்மரபுக்குச் சங்க காலம்தொட்டு இலக்கியங்கள் சான்று பகர்கின்றன.[7]

---

5. பின்னத்தூர் நாராயணசாமி ஐயர் உரை, கழகவெளியீடு.
6. நறவு ஓரூர்.
7. குறிப்பாகச் சிந்தாமணி, இராமவதாரம், திருத்தொண்டர் புராணம் முதலான காப்பியங்கள் இதற்கு நல்ல சான்றுகள் பகர்கின்றன.

சங்க இலக்கியங்களில் விளையுள் என்பதற்கு ஏறத்தாழ ஒரே பொருளுடைய எதிர்மறைப் பெயரெச்சங்கள் அடையாக வருதல் குறிப்பிடத்தக்கது. 'மறா', 'பிழையா', 'மடங்கா' ஆகியவற்றைக் காண்க. 'மறா விளையுள்' என்பதற்கு 'மறுக்காத விளைச்சல்' என்று பொருள் சொல்லுவதைவிட 'மறுக்காத வயல்' என்று பொருள் சொல்லுதல் பொருத்தமாக இருக்கும். வானம் பொய்யாது மழை வழங்கும் என்பது போல, விளை நிலம், பிழையாது விளைவு நல்கும் என்பது கருத்தோட்டத்துக்கு ஒத்து வருகிறது. மேற்கண்ட எதிர்மறைப் பெயரெச்சங்களுக்கு ஏற்பக் குறளில் 'தள்ளா' என்னும் எச்சம் வழங்கப்பட்டிருக்கிறது. 'தள்ளினும் தள்ளாமை நீர்த்து' (குறள் 596), 'தள்ளாது புத்தேள் உலகு' (குறள் 290) என்னும் இடங்களில் 'தப்பாத' என்பதே பொருள் என்பதும் கருதத் தக்கது.

பரிமேலழகர் விளையுள் என்பதற்கு விளைச்சல் என்று பொருள் கொள்ளுதலுக்கு ஏற்பத் 'தள்ளா' என்பதற்குக் 'குன்றாத' என்று பொருள் கொண்டிருக்கிறார். மணக்குடவரும் பரிப்பெருமாளும் விளையுள் என்பதற்கு நிலம் என்று பொருள் கொள்ளுதற்கு ஏற்பத் 'தப்பா' என்று பொருள் கொண்டிருக்கின்றனர். இப்பொருளே 'பிழையா' 'மடங்கா' 'மறா' என்னும் பெயரெச்சங்களுடன் ஒத்துச் செல்கின்றது என்பது வெளிப்படை.

வள்ளுவர் தள்ளா விளையுள் என்பதால் விளைச்சல் கூறினார் என்று கொள்ள வேண்டுவதும் இல்லை. இதுபற்றி அதே அதிகாரத்தில் பிறிதொரு குறளில் அவர் அதனைக் குறிப்பிடுகிறார்:

பிணியின்மை செல்வம் விளைவுஇன்பம் ஏமம்
அணிஎன்ப நாட்டிற்குஇவ் வைந்து, [குறள் 738]

... .... ... ......அருங்கேட்டால்
ஆற்ற விளைவது நாடு [குறள் 732]

என மற்றொரு குறளிலும் விளையும் திறத்தையும் அவர் குறிப்பிடுகிறார். ஆதலால் 'தள்ளா விளையுள்' என்பதற்கும் விளைச்சல் என்று பொருள் கொண்டால் இவ்வதிகாரத்தில் கூறியது கூறப்பட்டது என்பதுமாகும்.

இதுவரை கூறியவற்றால் வள்ளுவர் இயற்கை வளங்களுள் சிறந்த நிலவளமும் கூறினார் என்பது நிலைபெறுகிறது. நிலத்துக்கு

அவர் தந்த அடைமொழியான 'தள்ளா' (பிழையா, தப்பா) என்பது அதன்பயனை அருமையாக எடுத்துரைக்கும் அடைமொழியாக விளங்குகிறது. 'விளைவு தப்பாத' என அதற்குப் பொருள் கூறப்பட்டாலும் 'வளம் தப்பாத நிலம்' எனப் பொதுப்படவும் அதற்குப் பொருள் கொள்ளலாம். இதனால் உழுதொழில் குறித்தே இவ்வாறு அடைமொழி தரப்பட்டது எனவும் கருதலாம். நிலவளம் கூறப்பட்டது என்பது மட்டும் அல்ல; அது உழுதொழிலுக்கு ஒரு காரணியானது என்பதும் சுட்டப்பட்டது எனக் கொள்ளலாம்.

## பிறவளம்

அடுத்து இயற்கை தரும் வளங்களுள் சிறந்தது கனி வளம்; அடுத்துக் காற்றுவளம்; பின் கால நிலைவளம். இவை எல்லாம் 17, 18-ஆம் நூற்றுண்டுகளில் தொழிற்புரட்சி ஏற்பட்ட பின்னர்ப் பயன்பட்டுச் சிறப்புற்றன. கனிவளம் பெருந்தொழில்களுக்கு முதற் பொருளாயிற்று. இந்நிலை வள்ளுவர் காலத்தில் இல்லை. ஆதலால் குறளும் குறிப்பிடாமற் போனதில் வியப்பில்லை. இரும்பின் பயனும், பொன் வெள்ளி ஆகியவற்றின் பயனும் அன்று அறியப்பட்டிருந்தன. குறளிலும் இதற்குச் சான்றுண்டு. இரும்பை 'இரும்பொன்' என்றும் வெறும் 'பொன்' என்றும் அன்று மக்கள் வழங்கினர். தங்கம் 'செம்பொன்' எனப்பட்டது. வள்ளுவர் 'தூண்டிற்பொன்' பற்றிக் குறிப்பிடுகிறார் (குறள் 931). பொன்னுரைத்து ஆயும் 'கட்டளைக்கல்' (குறள் 505) பற்றியும் குறிப்புக்கள் தருகிறார் அவர். சங்க இலக்கியங்களிலும் சான்றுகள் உண்டு. ஆனாலும் கனி வளம் பற்றிய தொழில் அன்று குறிப்பிடத் தக்கதாக இல்லை போலும். குறளிலும் அது இடம் பெறவில்லை.[8]

---

8. 'பெரும்பொருளான் பெட்டக்கதாகி' எனத் தொடங்கும் குறளில்(732) பெரும்பொருள் என்பது இயற்கை வளமே என்பாரும் உண்டு. "பெரும் பொருளாவது இவ்வாறு இயற்கை வளமும், முதலாகும் செல்வமும் என்ற இரண்டுமே எனக்கொண்டு 'பெரும் பொருட் செல்வருமாய்' என எழுதுகிறார் காளிங்கர். பெரும் பொருள் என்பது இயற்கை வளமே என்றும் கொள்ளலாம்"—பேர். தெ. பொ. மீ. அவர்கள், பக். 54, வள்ளுவர் கண்ட நாடும் காமமும்.

பெரும் பொருள் என்னும் பொதுச் சொல்லில் வேண்டுமானால் கனிவளம் முதலான வளங்களை அடக்கலாம்,

## 4. 4. மக்கள் வளம்

நாடு என்னும் அதிகாரத்தில் வள்ளுவர் அடுத்துச் சிறப்பித்துக் கூறும் வளம் மக்கள். அதிகாரத்தின் முதற் குறளிலேயே அவர் இதனைக் குறிப்பிடுகிறார் :

தள்ளா விளையுளும் தக்காரும் தாழ்விலாச்
செல்வரும் சேர்வது நாடு. (குறள் 731)

மக்கள் என்ற சொல் இங்கு நேரே வழங்கப்படவில்லை; 'தக்கார்' 'செல்வர்' என்னும் சொற்களே வழங்கப்பட்டிருக்கின்றன. மக்கள் இல்லாது நாடு இல்லை தான்; ஆனால் மக்கள் வெறுமக்களாக இருந்து பயனில்லை; பெருமையும் இல்லை. வளநாட்டிற்கு ஏற்ற பண்புடையவர்களாக அவர்கள் விளங்கவேண்டும். ஒருநாட்டிற்கு வேண்டியோராக வள்ளுவரால் கருதப்படுவோர் தகுதியுடையோரும் செல்வமுடையோரும் ஆவர். தகுதியுடைமைக்கும் செல்வமுடைமைக்-கும் வேறு வேறு பொருள்கள் கூறப்படுகின்றன. அவை கருதத் தக்கன.

### 4. 4 1. தக்கார்

தக்கார் 'அறவோராவர்' என உரை வகுக்கிறார், பரிமேலழகர். 'அறவோர்—துறந்தோர் அந்தணர் முதலாயினார்' என அவர் மேலும் அதனை விளக்குகிறார். 'தாழ்விலாச் செல்வர் கேடில்லாத செல்வமுடையோர்' என அவர் உரை வகுத்துக் 'கேடில்லாமை — வழங்கத் தொலையாமை. செல்வர் — கலத்தினும் காலினும் அரும்பொருள் தரும் வணிகர்' என மேலும் விளக்கம் தருகிறார்.

மணக்குடவரும் பரிப்பெருமாளும் 'தக்காரும் தாழ்விலாச் செல்வரும்' என்போர், 'தகுதியுடையாரும் தாழ்விலாத செல்வரும்' என்பர். பரிப்பெருமாள் மேலும் 'தக்கார்-குலத்தாலும் குணத்தாலும் அமைந்தார். தாழ்விலாத செல்வர்—பிறரால் இகழப்படாத செல்வர்; பிறர்க்குப் பயன்படும் செல்வர் என்றது' என விளக்குகிறார்.

பரிதியார், தக்காரும் தாழ்விலாச் செல்வரும் என்பார் 'நல்லோரும் குறைவில்லாத செல்வரும்' என்பர்.

காளிங்கர், தக்காரும் தாழ்விலாச் செல்வரும் என்பார் 'தகுதியால் சிறந்த கல்வியும் ஞானமும் உடைய சான்றோரும், நாளும் யாவர்க்கும் ஈயக் குறைபடாத செல்வமும் உடையோர்' என்பர்.

அறிஞர் மு. வ. அவர்கள் தக்கார் என்பார் 'தக்க அறிஞர்' எனவும் தாழ்விலாச் செல்வர் என்பார் கேடில்லாத 'செல்வமுடையவர்' எனவும் உரை கூறுகிருர்.

பரிமேலழகர் நீங்கிய உரையாசிரியர்கள் அனைவரும் தக்கார் என்ற சொல்லுக்குத் 'தகுதி' என்ற சொல்லின் அடியாகவே பொருளுரைக்கின்றனர். ஆகவே அவர்களுக்குத் தக்கார் என்பார் அமைந்தோர், நல்லோர், சான்றோர், அறிஞர் என்போரே. இச்சொற்கள் எல்லாம் பண்பு குறிக்கும் பொதுச்சொற்களே. ஆனல் பரிமேலழகர் தக்கார் என்ற சொல்லுக்குக் குறிப்பாக 'அந்தணர்' எனப் பொருள் தருகிருர். அதற்கு ஒரு காரணம் உண்டு; அவர் இக்குறளுக்கு வகுத்த உரையும் அதன் நோக்கமும் வேறு.

தக்கார் என்ற சொல்லுக்கு இன்றைய அறிஞர்கள் புதுப்பொருள் தர முயல்கின்றனர். பொருளியலறிஞர் டாக்டர் பா. நடராசனாரவர்கள் 'தக்கார் என்பார் திறனுடையார், தொழிலாளர், தொழில் அமைப்பாளர்' எனக் கருதுகிருர்.[9] பிறிதொரு பேராசிரியர் தக்கார் என்பார் 'தன்னலமற்றவர்களாக வாழ்ந்து தங்களது அறிவாற்றலால் நாட்டின் செல்வத்தைப் பெருக்கி, மக்களின் வாழ்வை வளமாக்கி நலம் சேர்ப்பவர்கள்' என்கின்றுர்.[10] இன்றைய பொருளியலறிஞர் Entrepreneur எனக் கருதுவாரே தக்கார் என்பது இப் பேராசிரியர் கருத்து. 'தக்கார் அவ்வத் தொழிலுக்குத் தக்க திறமையுடையார் எனப் பொருள்பட்டுத் தொழிலாளனைக் குறிக்கிறது' என்கிருர், பேர். தெ. பொ. மீ. அவர்கள்.[11]

இவ்வறிஞர் எல்லாரும் இவ்வாறு கருதுவதற்கு ஒரு காரணம் உண்டு. தங்கள் பொருளியற் கருத்துக்களை அவர்கள் இங்குக் காண விழைகின்றனர். இயற்கைவளம் மட்டுமே இருந்துவிட்டால் அது வளநாடு ஆகிவிடாது. அவ்வியற்கை வளங்களைப் பண்டங்களாகவும் பணிகளாகவும் மாற்றுதல் வேண்டும். அதற்கு உழைப்புத் தேவை; உழைப்பினை நல்குவோர் தேவை; இவற்றை நடத்திச் செல்லுவோர் தேவை. இவர்கள் இல்லையேல் பண்ட ஆக்கங்களும்

---

9. பக். 62, வ த பெ.

10. பேர். அ. அருணசலம், பக். 23, வ வ பொ வா.

11. பக். 56, வள்ளுவர் கண்ட நாடும் காமமும்.

இல்லை. இயற்கைவளத்தைக் கூறிய வள்ளுவர் இவ்வகையினரையும் கூறியிருக்கவேண்டும் என இவ்வறிஞர்கள் எதிர்பார்க்கின்றனர்.

ஆனால் வள்ளுவர் இவ்வாறு கருதியிருப்பாரோ என்பது ஐயத்திற்கு இடமானதே. அவர் உழுதொழில் தவிரப் பிற தொழில்கள் பற்றியும் தொழிலாளர் பற்றியும் தொழில் தலைவர்கள் பற்றியும் தன் குறளில் எங்கும் பேசவில்லை. அவர் ஆண்ட 'தக்கார்' என்ற சொல்லும் அவ்வாறு கொள்ளுவதற்குத் தக்க சொல்லாக இல்லை. வள்ளுவர் அன்பு, அருள், நடுவுநிலை, ஈகை, புகழ், ஒழுக்கம், வாய்மை, கல்வி, அறிவு, ஊக்கம், குடிமை, பண்பு, நாண், சான்றாண்மை ஆகிய பொருள்களைப் போற்றுகின்றவர். இவற்றை மேற்கொண்ட மக்களையே அவர் மதிக்கிறார். இப்பண்புடைமை தவிரப் பிற உடைமைகளை அவர் உடைமைகள் எனவே கொள்வதில்லை. இவர் குறள் முழுவதும் இதற்குச் சான்று. ஆதலால் வளநாட்டினைச் சேர்வோராகக் கருதப்படுவார் நடுநிலையாளர், நல்லோர், சான்றோர், குண முடையோர், அறிஞர் எனவே கொள்ளுதல் பொருந்தும்.

### 4. 4. 2. செல்வர்

வள்ளுவர் குறிப்பிடும் மக்களுள் மற்றொரு சாரார் 'தாழ் விலாச் செல்வர்'. இதற்குப் பொருள் கொள்ளுதலில் பழைய உரை யாசிரியர்களில் கருத்து வேறுபாடில்லை. எல்லோரும் இதற்குக் 'கொடுக்கக் குறைபடாச் செல்வமுடையோர்' எனப் பொருள் கொள்ளு கின்றனர்; எல்லோருமே ஈகைப் பண்பை வற்புறுத்துதல் குறிக்கத் தக்கது. வள்ளுவர் ஈகையினைப் போற்றும் திறம் முன்னர் விளக்கப் பட்டது. அவர் கருத்தில் நாட்டிற்கு இலக்கணம் ஈகை வேண்டும் என்பது. இருப்போர் ஈதலும் இல்லோர் ஈட்டி ஈதலும் வேண்டும் என்பார் அவர். இவ்வுரையே தக்க உரை என்பதைக் குறளை ஒரு முறை ஓதினோரும் உணரலாம்.

பரிமேலழகர் இதனோடு மட்டும் நிற்கவில்லை. 'வழங்கத் தொலையா வளமுடையார் வணிகர்—கலத்தினும் காலினும் அரும் பொருள் தருவோர்' என்கிறார் அவர். இது மற்ற உரையாசிரியர்கள் கூறாத ஒன்று. பரிமேலழகர் இவ்வாறு கொடுப்பதற்கு ஒருகாரணம் உண்டு. பரிமேலழகர் இக்குறள் முழுவதற்கும் எழுதும் உரையினைக் காணவேண்டும்: 'விளையுள் என்பது **உழவர்** மேல் நின்றது'; 'அறவோர்—துறந்தோர் **அந்தணர்** முதலாயினர்'; 'செல்வர்—கலத்தினும் காலினும் அரும் பொருள் தரும் **வணிகர்**'. பரிமேலழகர்

**அரசர்க்கு** உரிய நாட்டில் **அந்தணரும் வணிகரும் வேளாளரும்** சேர்தல் வேண்டும் என்கின்ருர். இதனுல் வருணுசிரம தருமப்படி அமைந்த நாடே நாடு என்பது அவர் கருத்து ஆகிறது. நால்வருணப் பாகுபாடு தொழில் அடிப்படையில் அமைந்த நல்லதொரு பொருள் வாழ்வுச் சமூகம் எனப் போற்றுவோரும் உண்டு. அது இன்றைய பொருள் வாழ்வுக்குச் சிறிதும் பொருந்தாத அமைப்பு எனத் தூற்றுவோரும் உண்டு. சாதிப் பேச்செல்லாம் இன்று சழக்கர் உரையாகக் கருதப்படுகிறது. வள்ளுவர் கண்ட வாழ்வுக்கும் வருணதருமத்துக்கும் ஒட்டும் இல்லே; உறவும் இல்லே. பார் புகழும் வள்ளுவரைப் பரிமேலழகர் இங்கே நகைப்புக்குரியவராக்கிவிட்டார்.

இன்றைய அறிஞர் சிலர் தாழ்விலாச் செல்வர் என்பார் 'முதலாளிகள்' என்கின்றனர். அதாவது கைமுதலிட்டுத் தொழில் புரியும் தொழில்தலைவர்கள் இன்றைய முதலாண்மைப் பொருள் வாழ்வின் தூண்கள் இவர்கள் என்பது எல்லோரும் அறிந்ததே பரிமேலழகர் வணிகர் என்பதற்கு ஓரளவு ஏற்ப இக்கருத்து அமைந்துள்ளது. ஆனுல் வள்ளுவர் பெருவணிகரையும் செல்வரையும் போற்றுவதில்லே. அவருக்குப் பொருளுடைமை போற்றுதற்கு உரியதுதான். ஆனுல் வழங்கி வாழ்வதே அவர் வாழ்த்துக்குரியது. இக்கருத்தில் அவர் தாழ்விலாச் செல்வரை நாட்டுக்கு இலக்கணமாகக் குறிப்பிடுகிருர் என்பதில் தடையும் இல்லே; வியப்பும் இல்லே.

## 4. 5. விளைவு வளம்

இயற்கை வளம்கொண்டு மட்டுமே ஒருநாடு வாழ்ந்துவிட முடியாது. இயற்கை வளத்தைப் பயன்படுத்தி உணவுப் பண்டங்கள் படைக்கப்படவேண்டும் இயற்கையில் கிடைக்கும் கனி காய் கிழங்கு மீன் முதலான உணவுகள் மக்கள் வாழ்க்கைக்குப் போதுவதில்லே. பெரும்பாலும் மக்கள் வாழ்க்கைக்குத் தேவையான உணவுப் பண்டங்கள் நிலத்திலிருந்து விளைவிக்கப்படுகின்றன இவ்விளை பண்டங்கள் நாட்டின் இயற்கை வளத்துக்கு ஏற்ப அமைகின்றன நாட்டு மக்கள் பசியின்றி வாழக் குறைவின்றி விளைவு தேவை. இன்று உலகில் வளர்ந்திருக்கும் எண்ணற்ற தொழில்கள் பெரும்பாலும் மக்கள் வாழ்க்கை வசதிக்கே பண்டங்கள் படைக்கின்றன. உணவுப் பண்டங்களுக்கு நிலமே அடிப்படை. இவ்வாருன விளைவின் இன்றியமையாமையை உணர்ந்தே வள்ளுவர் வள நாட்டிற்கு வேண்டியதாக அதனையே அடுத்துச் சிறப்பித்துக் கூறுகிருர்:

பிணியின்மை செல்வம் விளைவுஇன்பம் ஏமம்
அணிஎன்ப நாட்டிற்குஇவ் ஐந்து. (குறள் 738)

இங்கு விளைவு என்பது உணவுப் பண்டங்கள் என எல்லா உரையாசிரியர்களும் எடுத்துக் காட்டுகின்றனர். பரிப்பெருமாள் 'பலதானியங்களும் பொலிவுடைமை' எனவும், பரிதியார் 'பதினறு தானியமும் விளைவு' எனவும் குறிப்பாக விளைபண்டங்களைச் சுட்டிக் காட்டுகின்றனர். வேருெருகுறளிலும் இவ்விளைவினை வள்ளுவர் விளக்குகிருர்:

பெரும்பொருளான் பெட்டக்கது ஆகி அருங்கேட்டால்
ஆற்ற விளைவது நாடு. (குறள் 732)

மணக்குடவரும் பரிப்பெருமாளும் 'பெரும் பொருள்—நெல்லு' எனக் குறிப்பிட்டுக் காட்டுகின்றனர். பரிமேலழகர் குறிப்பிட்டுக் காட்டாது பொதுப்பட எழுதுகிருர். 'பெரும் பொருள் — அளவிறந்த பொருளுடைமை'; 'அளவிறப்பு — பொருள்களது பன்மை மேலும் தனித்தனி அவற்றின் மிகுதி மேலும் நின்றது' இதனுல் பரிமேலழகர் பல உண்பண்டங்களைக் கருதியிருப்பார் எனக் கொள்ளலாம். வள்ளுவர் பெரு – என்னும் அடை கொடுத்துப் 'பெரும் பொருள்' எனக் குறித்தல் கருதத் தக்கது. விளைச்சல், நாட்டு மக்கள் அனைவர்க்கும் ஆகி வரவேண்டும். ஆகவேதான் அளவிறந்த விளைச்சல் வேண்டும் என்ற கருத்தில் அவ்வாறு அடை கொடுத்து எழுதினர்.

## 4. 5. 1. இறை தரும் விளைவு

அளவிறந்த விளைச்சலால் மக்கள் பசி தீர்கிருர்கள் என்பது மட்டுமல்ல; அதனுல் வேருெரு பயனும் உண்டு. பசிதீரும் மக்கள் வாழும் நாட்டில் ஓரரசு உண்டு. அவ்வரசு படை வைத்து மக்களைக் காத்து முறை வழங்கிச் செங்கோல் செலுத்துகிறது. அதற்குப் பொருள் வேண்டும். அந்தப் பொருளை இவ்விளைவே தருகிறது என்கின்ருர் வள்ளுவர்:

பொறைஒருங்கு மேல்வருங்கால் தாங்கி **இறைவற்கு**
இறைஒருங்கு **நேர்வது** நாடு. (குறள் 733)

இறைப்பொருள் என்பது நிலவரி அல்லது நிலவருமானவரி ஆகும். இது இடைக்காலத்தில் ஆறில் ஒன்ருக இருந்தது. ஒருநாட்டு மக்கள் பொதுவாக இறைப் பொருளை முறையாகத் தந்துவிடுவர்.

ஆனால் அயல் நாட்டிலிருந்து அல்லல் வருகின்றபோதும் தன் நாட்டிலேயே துன்பம் தோன்றுகின்றபோதும் இறையினைக் குறைக்காது நாடு உடன்பட்டுக் கொடுத்தல் வேண்டும். அதற்கு ஏற்ப நாடு வளம் கொண்டிருக்கவேண்டும். அயல் நாட்டில் ஏற்படக்கூடும் அல்லல்களைப் பரிமேலழகர் இவ்வாறு விளக்குகிறார்: 'பாரங்கள்—மக்கள் தொகுதியும் ஆன் எருமை முதலிய விலங்குத் தொகுதியும் தாங்குதல்; அவை தத்தம் தேயத்துப் பகை வந்திறுத்த தாக, அரசு கோல் கோடியதாக, உணவின்மையானுகத் தன்கண் வந்தால் அவ்வத்தேயங்களைப் போல இனிதிருப்பச் செய்தல். அச் செயலால் இறையைக் குறைப்படுத்தாது தானே கொடுப்பது என் பார், இறை ஒருங்கு நேர்வது என்றார்'. மணக்குடவரும் பரிப்பெரு மாளும் 'குடிமை செய்தால் ஒரு காலத்திலே பல குற்றம் தன்னிடத்து வரினும் அதனைப் பொறுத்து நிச்சயித்த கடமையை அரசனுக்கு ஒருங்கு கொடுக்கவல்லது நாடு என்றவாறு' என்று உரை வகுக் கின்றனர். இவர்கள் தன்னிடத்து வரும் குற்றங்கள் என்பவை மழையின்மை, நோய், வெள்ளம், மிகுபெயல், புயல், பயிரைக் கொல்லும் பூச்சிகள் முதலாயினவாகலாம். இவற்றால் எல்லாம் வள்ளுவர் குறிப்பிடும் கருத்து இதுதான்: 'துன்பம் வந்துற்ற போதும் தளர்ந்து போகாது அதனைத் தாங்க வல்ல பெருவிளைவினை நாடு பெற்றிருக்கவேண்டும். நாடு பொதுவாக விளைவில் தன்னிறைவு பெற்றால் மட்டும் போதாது. தன் தேவைக்கு மேலும் பெற்றிருத்தல் வேண்டும்.' இன்றைய உலகில் இந்தியாவும் பிற நாடுகளும் மழை யில்லா வறட்சியும், வெள்ளமும், போரும், உள்நாட்டுக் கலகமும், தொழிலாளர் பூசலும் அவ்வப்போது ஏற்பட்டால் அவற்றைத் தாங்கமுடியாது தவிப்பதைக் காணுகின்றோம்; உடனே அவை பஞ்சத்திற்கும் பட்டினிக்கும் ஆளாகி அவதியுறுகின்றன; மாற்று-ரிடம் கையேந்தி இரக்கின்றன. இத்தகைய நிலை வள்ளுவர் காண விழையும் நாட்டில் இடம்பெறாது; பெறலாகாது என்பதன்பொருட்டே விளைவை அவர் வற்புறுத்திக் கூறுகிறார். இத்தகைய பெருவிளை-வால் அரசு பெருவருவாய் பெறும் என்பதில்லை. பெருவருவாய் பெறும் அரசே உலகில் செம்மாந்து நடத்தல் கூடும்.

## 4. 5. 2. கேடில்லா விளைவு

வளநாட்டிற்கு விளைவு இன்றியமையாதது என்று எடுத்துச்சொன்னால் மட்டும் போதுமோ? முளைவிட்டதிலிருந்து

முற்றி வீடு வருகின்றவரை அவ்விளைவுக்கு எவ்வளவோ இடையூறுகள் ஏற்படுகின்றன. வளநாடு இவற்றிலிருந்தும் விடுதலை பெற்றிருக்கவேண்டும். இதனை இந்தக் குறளிலேயே வள்ளுவர் வற்புறுத்துகிறார் :

> பெரும்பொருளான் பெட்டக்கது ஆகி அருங்கேட்டால்
> ஆற்ற விளைவது நாடு. (குறள் 732)

'அருங்கேட்டால் ஆற்ற விளைவது' என்ற தொடருக்குப் பரிமேலழகர் 'கேடின்மையோடு கூடி மிக விளைவது' என்றும், காளிங்கர் 'தம் அரசானும் பிறவாற்றானும் எஞ்ஞான்றும் கேடறியாதுமாய் அளவிறந்த விளைச்சலை உடையது' என்றும் விளக்கம் தருகின்றனர். இவ்வதிகாரத்தில் 'பிணியின்மை' எனத் தொடங்கும் குறள் (738) 'விளைவு வேண்டும்' என்று கூற இக்குறள் (732) 'விளைவு எவ்வாறு' என்று கூறுகிறது. கேடின்றி விளைவு வேண்டும் என்பதே இக்குறள் கூறும் கருத்து. விளைச்சலுக்கு வரும் கேடுகளைக் குறளாசிரியர் குறிப்பிடாமல் போனாலும் உரையாசிரியர்கள் குறிப்பிடுகின்றனர். பரிமேலழகர் தருவது இது: "கேடாவது மிக்க பெயல், பெயலின்மை, எலி, விட்டில், கிளி, அரசண்மை என்று இவற்றான் வருவது; 'மிக்க பெயலோடு பெயலின்மை எலி விட்டில் கிளி — அக்கணர சண்மையோடு ஆறு'". வேறு சில கேடுகளையும் ஒரு நிகண்டு கூட்டியுரைக்கிறது: 'விட்டில் தன்னரசு நால்வாய் மிகுமழை மிகுகாற்றேடே., நட்டம் வேற்றரசு கிள்ளை நாடுறுங்கேடு எட்டாமே'. (நால்வாய் என்பது யானை.) இங்கு நாட்டிற்கு ஆகாக் கேடுகள் என்று சொல்லப்படுகின்றவை, இயற்கையால் வரும் கேடுகள், பிற உயிர்களால் வரும் கேடுகள், அரசால் வரும் கேடுகள் என முத்திறத்தவையாகக் கருதத் தக்கவை.

புயலாலும் வெள்ளத்தாலும் வறட்சியாலும் விளைவுகள் பாதிக்கப்படுவதை நாடுகள் ஆண்டுதோறும் காணுகின்றன. இந்திய நாட்டிலும் — குறிப்பாகத் தமிழ் நாட்டிலும் — இவை எல்லாம் உண்டு. இவ்வியற்கைக் கொடுமைகளிலிருந்து நாட்டைக் காத்தல்பொருட்டு அரசுகள் பண்டுதொட்டே ஏரி குளங்கள் அணைக் கட்டுக்கள் கட்டியும் கால்வாய்கள் வெட்டியும் பாதுகாப்புத் தேடி வந்திருக்கின்றன. புயலை முன்கூட்டியே அறிய வானிலையறிவியலின் துணை நாடப்படுகிறது. ஆனாலும் இயற்கையை முற்றிலும் வென்ற பாடில்லை.

உயிர்களால் நேரும் அழிவுகளிலிருந்து பயிர்களைக் காக்கப் பல்வேறு கொல்லி முறைகளும் மருந்துகளும் புதிது புதிதாகக் கண்டு பிடிக்கப்பட்டுப் பயன்படுத்தப்படுகின்றன. பருவுயிர்களால் மட்டு மல்லாது நுண்ணுயிர்களாலும் விளைவு கெடுகிறது. டி. டி. டி. முதலான மருந்துகள் இக்கொடுமைகளிலிருந்து விளைவுகளைக் காக்-கின்றன. அரசே நின்று இக்காவற்பணி புரிகிறது.

போராலும் பூசலாலும் விளைவுகெடுதலை அவ்வப்போது அறிகிறோம். பக்கத்து நாட்டுப் பகையரசர் பயிர்களை அழித்தலிலும் பாசனங்களை அழித்தலிலும் கருத்துக்கொண்டிருப்பர். அரசரின் வினை செய்வாரும் விளைவினைக் கெடுத்தல் உண்டு. இவைகளை அரசு தன் ஆற்றலாலும் அடக்கத்தாலும் அகற்றலாம்.

இன்று இக்கேடுகளிலிருந்து காத்தல் எல்லாம், வந்த பின் காத்தலே ஆம். ஆனால் வள்ளுவர், வருமுன் காத்தலைக் கூட அல்ல இக்கேடுகளே இல்லாமையை நாட்டுக்கு இலக்கணமாக்கிக் காணு-கின்றார் அது அல்லவோ வளநாடு எனத் தகுவது?

### 4. 5 3. உழுதொழில் விளைவு

**பெருமை.** விளைவுகள் பல வகைப்படும். கடலில் முத்தும் பவளமும் மீனும் விளைகின்றன. கடற்காயலில் உப்பு விளைகிறது. காட்டிலே மரம் விளைகிறது. மலையிலே மணியும் பொன்னும் விளை கின்றன. மண்ணிலே பயிர் விளைகிறது. உப்பும் பயிரும் மக்கள் முயற்சியில் விளைகின்றன. மற்றவையெல்லாம் இயற்கையில் விளை-கின்றன. உலகத்தார் உணவுக்கு வேண்டியவையெல்லாம் பெரும் பாலும் உழைப்பில் பிறப்பவை ஆகும். மக்கள் உணவுப் பண்டங்-களைப் படைத்தல்பொருட்டு மண்ணில் மேற்கொள்ளும் உழைப்பே உழவு — வேளாண்மை — எனப்படுகிறது. பண்டையுலகத்திலும் பழந்தமிழகத்திலும் அன்றும் இன்றும் உழுதொழிலே பெருந்தொழில். இந்திய நாட்டை வேளாண்மை நாடு என்றே வழங்குவர். ஒரு வள நாட்டிற்கு வேண்டிய விளைவு இந்த உழுதொழிலையே சார்ந்திருக் கிறது. இதனாலேயே வள்ளுவர் இத்தொழிலைப் பாராட்டிச் சீராட்டு-கிறார். பிற தொழில் எதனையும் குறிப்பிடாத வள்ளுவர் உழவுக்கு ஓரதிகாரமே (104) இயற்றியுள்ளார்.

உழவு என்னும் அதிகாரத்தில் வள்ளுவர் உழுதொழிலின் உயர்வையும் உழுதொழில் செய்யும் வகையினையும் பலபட விரித்துரைக்கிறார். சுருங்கச்சொன்னால் உழுதொழிலுக்கு ஈடும் இணையும் இல்லை என்பது அவர் கருத்து :

*சுழன்றும்ஏர்ப் பின்னது உலகம்; அதனால்*
*உழந்தும் உழவே தலை.* (குறள் 1031)

*உழுவார் உலகத்தார்க்கு ஆணி;அஃது ஆற்றாது*
*எழுவாரை எல்லாம் பொறுத்து.* (குறள் 1032)

*உழுதுண்டு வாழ்வாரே வாழ்வார்;மற்று எல்லாம்*
*தொழுதுண்டு பின்செல் பவர்.* (குறள் 1033)

பின்னிரண்டு குறள்களும் உழவின் பெருமையினை உழுவார்மேல் வைத்துப் பேசுகின்றன. வள்ளுவர் உழுதொழிலை இவ்வளவு உயர்த்திச் சொல்லுதல் இந்தியப் பொருள் வாழ்வை அறிந்தார்க்கு வியப்பளிக்காது. இந்தியாவில் — குறிப்பாகத் தமிழகத்தில் — அன்றும் இன்றும் உழுதொழிலே பரந்து நடைபெற்றுவரும் தொழில். இன்று இந்திய மக்களில் ஏறத்தாழ நூற்றுக்கு எழுபத்தைந்து பேர் உழுதொழிலில் ஈடுபட்டிருக்கின்றனர் எனக் கணக்கிடப்படுகிறது. பிற தொழில்கள் பெரும்பாலும் சிறு தொழில்கள். பெருந்தொழில்கள் அண்மைக்காலத்திலிருந்துதான் அமைந்து வருகின்றன. இந்திய மக்கள் தொகையோ அளவு கடந்தது எனக் கருதும்படி உயர்ந்தது. இம்மக்களனைவருக்கும் உணவு நல்குவது இவ்வுழுதொழில்தான். அது மட்டுமல்லாது இந்தியா முழுவதும் நடைபெறும் சிறு தொழில்கள் பெருந்தொழில்களுக்கு வேண்டிய முதற்பொருள்களை விளைவு செய்து தருவதும் இவ்வுழுதொழில்தான். எடுத்துக்காட்டாக இந்தியாவில் பரவலாகச் சிறுதொழிலாகவும் பெருந்தொழிலாகவும் நடைபெற்றுவருவன கைத்தறித் தொழிலும் நூலாலைத் தொழிலும் துணியாலைத் தொழிலும் ஆகும். இவற்றுக்குவேண்டிய முதற்பொருளான பருத்தியை உழவுத் தொழிலே விளைவித்துத் தருகிறது. இவ்வாறே இன்னும் பல தொழில்கள் உண்டு. ஆகவே இந்திய மக்களது பொருள் வாழ்வே ஏதாவது ஒரு வகையில் உழுதொழிலைச் சார்ந்திருக்கின்றது என்பதில் ஐயம் இல்லை. ஆதலால் இத்தொழிலில் தளர்ச்சியோ தடையோ ஏற்பட்டால் இந்திய மக்கள் பொருள் வாழ்வு அனைத்துமே பாதிக்கப்படுகிறது. இவ்வுழுதொழிலோ இந்தியாவில் பெரும்பாலும் மழையினையும் ஏரி குளங்-

களையும் சிற்றாறுகளையும் நம்பி நடைபெறுகிறது. இவ்வேரி குளங்களும் சிற்றாறுகளும் தம் வளத்துக்கு மழையினையே நம்பியிருக்கின்றன. இந்தியாவில் அம்மழையோ பெரும்பாலும் பருவ மழை தான். ஆதலால் மழை ஒருமுறை பிழைத்தாலும் பொருள் வாழ்வு கலக்கம் உறுகிறது. ஒருசில ஆண்டுகள் மழை பிழைத்து வறட்சி ஏற்பட்டால் பஞ்சமும் பட்டினியும் ஆட்சிசெய்யத் தொடங்கி விடுகின்றன. உலக வரலாற்றில் அடிக்கடி பஞ்சத்துக்கு ஆட்பட்டு அல்லலுற்ற நாடுகளில் இந்திய நாடு தலையான நாடு என வரலாற்றறிஞர்கள் எடுத்துக் காட்டுகின்றனர். இந்நிலையில் வள்ளுவர் 'ஏர்ப்பின்னது உலகம்' என்பதும் 'உழுவார் உலகத்தார்க்கு ஆணி' என்பதும் உண்மை மொழிகள் மட்டுமல்ல; பொன்மொழிகளுமாகும்.

வள்ளுவர் தம் குறளில் பிற தொழில் எதனையும் குறிப்பிட்டுப் பேசவில்லை என்பது முன்னர்ச் சுட்டிக் காட்டப்பட்டது. வள்ளுவர் காலத்தில் இன்றுபோல் பெருந்தொழில்கள் இல்லையாதலாலும் இந்தச் சிறுதொழில்களும் உழவையே சார்ந்திருந்தமையாலும் அச்சிறு தொழில்களையும் உள்ளடக்கியதே உழவு எனவே அவர் கருதியிருந்திருக்கலாம். இன்றும் வேளாண்மை எனக் கருதப்படுவது நிலத்தை உழுது பயிர் விளைத்தல் மட்டுமல்லாது கால் நடை வளர்ப்பு, பன்றி கோழி வளர்ப்பு, தேனீ வளர்ப்பு முதலியவற்றையும் உள்ளிட்ட ஒரு வாழ்வே. நானில வாழ்வில் உழவு சிறப்பாக மருத நிலத்துக்கு உரியது எனக் கொள்ளப்படுகிறது. கால் நடை வளர்ப்புப் போன்ற தொழில்கள் முல்லை நிலத்துக்கு உரியன. குறிஞ்சி நிலத்தின் தினை விளைவும் வேளாண்மையில் சேர்த்து எண்ணப்படலாம். இவ்வாறாகத் தமிழகத்தில் அன்று முந்நில வாழ்வும் வேளாண்மை வாழ்வாக அமைகின்றன. நெய்தல் நில வாழ்வே வேறு தொழிலாக வேளாண் வாழ்வைச் சார்ந்திருக்கிறது. இந் நிலையிலும் 'ஏர்ப்பின்னது உலகம்' என்ற கூற்றின் பொருத்தம் நன்கு புலப்படுகிறது.

வேளாளர்க்குத் துணையாகக் கொல்லர், தச்சர் முதலான சிறு தொழிலாளர் உண்டு. இவர்கள் வாழ்வின் வளம் எல்லாம் எப்போதும் வேளாண்மையையே சார்ந்திருக்கும் என்பதில் ஐயமில்லை. இத்தகைய சிறு தொழில்களே அன்று பல்கி இருந்திருக்க வேண்டும். உழுதொழிலோடு இவற்றை ஒப்பிட்டுக் காணுகின்றபோது இவற்-

றுக்குப் பெருமையில்லை. இதனைக் காளிங்கர் என்னும் உரையாசிரியர் எடுத்துக் காட்டுகின்றார்: 'கடலோடியும் மலையேறியும் காடு மண்டியும் நாடு பரந்தும் ஓடித்திரிதலே அன்றியும் உண்பான் பொருட்டு இதனைப் பிற பிற முயன்று அலம்வந்தும் அதனால் ஒரு பயனும் இல்லை. ஆதலால் ஏர் கொண்டு வாழ்வார்தமது வழிச் சேறலே பயனுள்ள வாழ்வாம்; மற்று அது எங்கனம் எனில், உழுகைப் பொருட்டாக உழு கருவிக்குக் காடு புக்கு மரம் தடிதலும் கனவிய கொழுவும் அதற்கு ஏற்ற பல கருவியும் வன்புலம் மென்புல வடிவத்தியற்றலும் படைக்கால் அமைத்தலும் முதலிய பலவகைப் பயிர் வளம் முற்றியவை. இவை அனைத்தும் உழந்தும் உழவு இயற்றலே தலைமைப்பாடு ஆவது என்றவாறு'.

இவ்வாறு வேளாண்மையைத் தலைமையாக வைத்துச் சிந்தனை செய்த பொருளியலறிஞரும் பொருளியல் வரலாற்றில் உண்டு எனப் பேராசிரியர்கள் சிலர் எடுத்துக் காட்டுகின்றனர்.[12] கி. பி. 18-ஆம் நூற்றாண்டில் **இயற்கையியலார்** (Physiocrats) என்னும் பொருளியலறிஞர் பிரஞ்சு நாட்டில் வேளாண்மையே உண்மையாகப் **பொருள் படைக்கும் தொழில்** என்று வாதமிட்டனர்; பிற தொழில்கள் எல்லாம் வேளாண்மைக்குத் துணை நிற்பவையே ஆகுமாம்; அவை செல்வத்தை ஒரு நிலையிலிருந்து மறு நிலைக்கு மாற்றுகின்றனவே ஒழியப் புதியன படைக்கவில்லையாம்; உழவர்களே தலைவர்கள்; பிறர் அவர்களிடமிருந்து கூலி பெறுவோரே யாவராம். நாட்டின் வளம் உண்மையில் உழுதொழிலாலேயே படைக்கப்படுகிறதாம்; ஆகவே உழு தொழிலை நம்பிப் போற்றிய அரசே உலகை வென்று வாழ முடியுமாம்.[13] இவ்வாறே 'ஆதம் ஸ்மித்து' என்னும் பொருளியல் மேதையும் தொழில்களில் எல்லாம் தலையாய தொழில் வேளாண்மையே என்று போற்றியுரைத்துள்ளார். ஆனால் இவர்கள் கருத்துக்களுக்கும் வள்ளுவர் கருத்துக்களுக்கும் அடிப்படையில் வேறுபாடுண்டு. இவர்கள் அனைவரும் பொருளியலறிஞர்கள்; வள்ளுவர் பொதுநோக்குச் சிந்தனையாளரும் அற

---

12. பேர். அ. அருணசலம், வ வ பொ வா; டாக்டர் பா. நடராசனர், வ த பொ.

13. Eric Roll, HET.

நூலோரும் ஆவர். 'உண்டி கொடுத்தோரே உயிர் கொடுத்தோர்' என்ற நோக்கில் வள்ளுவர் வேளாண்மையைப் பரவுகிறுர்.[14]

உழுதொழிலால் பிற தொழில்கள் வளர்வதை முன்னர்க் கண்டோம். உழவும் தொழிலும் வளர வணிகமும் செழித்து வளரும்; இவற்றுல் பொதுவாக நாட்டில் வளம் கொழிக்கும். உழவு தொழில் வாணிகம் இம்மூன்றுலும் நாட்டரசனுக்கு வருவாய் உண்டு. உழவர்கள் இறை தருதலும் ஆகாத்து நிதி தருத்லும் முன்னியலில் விளக்கப்பட்டன. வணிகர் உல்கு பொருள் தருதலும் அங்கே விளக்கப்பட்டது. ஆதலால் இவற்றின் வளத்துக்கு ஏற்ப மன்னரது வருவாயும் வளரும் என்பது வெளிப்படை. செல்வமுடைய அரசே

---

*14. (இயற்கையியலார் கருத்துப்படி) உழவுத்தொழில்தான் உலகிலேயே தலையாய தொழில். அத்தொழில்வழி வாழும் நாடுகள் மட்டுமே வல்லரசு-களாக இயங்க முடியும். செல்வத்தின் அடிப்படை ஆதாரமே வேளாண்மை தான். வேளாண்மை மட்டுமே தான் நிகர விளைவை (Product Net) அருளுகிறது. அந்நிகர விளைவே தான் நாட்டின் உண்மை வருமானம் அல்லது பொருள் வருமானம் ஆகும். அரசின் வளத்திற்கும் நாட்டின் வளத்திற்கும் உழவே அடிப்படை. நாடுகள் நிலைத்து வாழ உழவே தலையாகும் என்பது அவர்கள் திடமான கருத்து. 'உழவன் ஏழையாக இருந்தால் மன்னன் ஏழையாக இருப்பான். அவனது நாடும் ஏழ்மை யிலேயே இருக்கும்' என்பது குவிஸ்னேயின் கூற்றுகும்.*

*—பக். 43—44, வ வ போ வா.*

*இயற்கையியலாரை வள்ளுவரோடு ஒப்பிட்டுவிட்டு ஓர் எச்சரிக்கையும் தருகிறுர் டாக்டர் பா, ந. அது இங்குக் காணத்தக்கது.*

*'வணிகர்கள், கைவினைஞர்கள், அதிகாரிகள், அமைச்சர்கள், போன்ற வர்கள் பொருளுற்பத்தி செய்வோராகார். உற்பத்தி செய்யாததால், பிற வகுப்பு மக்களாலேயே வேலைக்கு அமர்த்தப்பட்டுப் பேணப்பட்டு வருகின்றனர். பிற வகுப்பினர் இருவகைப்படுவர்—உழவர்கள், நில உடைமையாளர்கள். பிற மக்களுக்கு உழவர்கள் உணவுற்பத்தி செய்து தருகின்றனர். அவற்றை அவர்கள் உண்டு உழவருக்கு வேண்டும் பணி யாற்றுகின்றனர். அவ்வாறே தச்சர், கொல்லர் முதலானோரும் உடைமை யாளர்களிடமிருந்து மூலப்பொருள்களும் பணமும் பெற்றுப் பண்டங்-களைச் செய்து உடைமையாளர்களிடமே தருகின்றனர். உடைமையாளர்-களும் உழவர்களும் இறுதியில் அம்மக்களுக்கு ஊதியம் நல்குகின்றனர்.*

*'பிற பணியாளர்களும் தொழிலாளர்களும் உடைமையாளருக்கும் உழவர்களுக்கும் வேலையாட்களாவார்கள். கீழ்ப் பணியாளர்கள் வீட்டி னகத்தே பணியாற்றுதல்போல் அவர்கள் உழவருக்கும் உடைமையாளர்க்-கும் வீட்டுக்கு வெளியில் பணிசெய்கின்றனர். அடிப்படையில், நிலத்தை உழுபவர்களும் உடைமை கொள்வோர்களுமே பிற தொழிலாளர்க்கும் பணியாளர்களுக்கும் கூலி கொடுக்கும் எஜமானர்கள்'.*

தன் ஆற்றலைப் பல வழிகளிலும் பெருக்கிக்கொள்ள இயலும். 'செறுநர் செருக்கு அறுக்கும்' பொருள் இச்செல்வமே என்பர் வள்ளுவர் (குறள் 759). மாற்றரும் பணிவர். உழவைப் போற்றும் ஒரு குறள் இக்கருத்தை விளக்குகிறது :

*பலகுடை நீழலும் தம்குடைக்கீழ்க் காண்பர்*
*அலகுடை நீழ லவர்.* (குறள் 1034)

அலகு என்பது நெற்கதிர். 'நீழலவர்' தண்ணளியைக் குறித்து நிற்கிறது. நெல் விளைவாலும் கொடைப் பண்பாலும் உழவர் அயலாரையும் கவர்கின்றனர் எனவும் இக்குறளுக்குப் பொருள் கொள்ளலாம். 'வேளாண்மையிற் சிறந்த அரசே வல்லரசாதல் கூடும்' என்ற இயற்கையியலாரின் கருத்தை இக்குறள் நினைவூட்டுதல் குறிக்கத்தக்கது இத்தகைய கருத்துக்கள் பழங்காலந்தொட்டே தமிழ் மக்களுக்கு உண்டு என்பதைப் புறம் காட்டுகிறது:

*பொருபடை தருஉம் கொற்றமும் உழுபடை*
*ஊன்றுசால் மருங்கின் ஈன்றதன் பயனே.* (புறம் 35 : 25-26)

சிலம்பும் இக்கருத்தினை ஒலிக்கிறது :

*இரப்போர் சுற்றமும் புரப்போர் கொற்றமும்*
*உழவிடை விளைப்போர்...........*
(சிலம்பு 10 : 149—150)

புறமும் சிலம்பும் உழவரது பெருமித வாழ்க்கையை எடுத்துக் காட்டுகின்றன. தாம் தாழாது பிறரை வாழவைக்கும் வாழ்வு அவர்கள் வாழ்வு. அதனை அடுத்த குறள் பேசுகிறது:

*இரவார் இரப்பார்க்குஒன்று ஈவர், கரவாது*
*கைசெய்துஊண் மாலை யவர்.* (குறள் 1035)

**உழுதொழில் திறம்**

வள்ளுவர் அடுத்து உழவு செய்யும் திறங்கள் பற்றிக் கூறுகிறார். **ஏருழுதல், எருவிடுதல், களைபறித்தல், நீர்பாய்ச்சல், காத்தல்** என்னும் ஐந்து நிலைகளில் அவர் உழு பணியை வகுத்துக் காணுகிறார். அதைச் செறிவுற அழகு நடையிலும் வெளியிடுகிறார்:

*தொடிப்புழுதி கஃசா உணக்கின் பிடித்துஎருவும்*
*வேண்டாது சாலப்படும்.* (குறள் 1037)

ஏரினும் நன்றால் எருவிடுதல்; கட்டபின்
நீரினும் நன்றுஅதன் காப்பு. (குறள் 1038)

இவ்விரண்டு குறள்களின் திட்ப நுட்பங்களையெல்லாம் காளிங்கர் உரை தெளிவுற எடுத்துக்காட்டுகிறது :

'முன்னம் தான் நீர் பதம் கொண்டு உழுத ஈரப்புழுதி எண் கழஞ்சும் இருகழஞ்சாகக் கீழ்ப்புழுதி கிளர்ந்து மேற்பட்டு உணங்குமாறு பின்னும் பின்னும் பெயர்த்து இனிது உணக்கப் பெறின், பிடித்து ஒருபிடி எருவும்கூட வேண்டாவாறு அங்ஙனம் உழுது காய்ந்த புழுதிச் சுவடுதானே தன்வேர் ஊறு சுவையாக மிகவும் விளையும் என்றவாறு'.

'கூறிய புழுதியுழவாயினும் சேற்றுழவாயினும் உழுசால் எப்பற்றும் ஒழியாமல் செல்லும் ஏர் மிகுதியினும் மிக நன்று; மற்று அதனினும் நன்று அந்த நிலத்திற்கு ஏற்ற எருக்கொணர்ந்து இடுதல்; இனி அதனினும் நன்று ஆண்டு எழுபைங்கூழ் அருகு எழுகளை கட்டல்; அங்ஙனம் களை தவிர் நன்மையே அன்றிப் பின்னும் சால நன்று நீர்முறை பிழையாமை நீர் பெய்தல்; மற்று அதனினும் சால நன்று அங்ஙனம் சிறந்த பயிர்ப்பயன் பழுது படாமல் முன்னுறக் கொண்டே கடிந்து காப்பதோர் காப்பு என்றவாறு.'

இவ்வுழு பணியின் ஐந்து நிலைகளை இன்று உலகு நன்கு உணர்ந்து வருகிறது. ஆழ உழுதலும் அகல உழுதலும் பேசப் படுகின்றன. இயங்கும் இரும்புக் கலப்பைகள் பரவலாகப் பயன் படுத்தப்படுகின்றன. இந்தியாவைப் பொறுத்த வரை எருவிடுதலின் தேவை மிகுதியும் உணரப்படுகிறது. ஆயிரக்கணக்கான ஆண்டுக ளாகத் தமிழகத்து மண் உழுதொழிலுக்குப் பயன்பட்டு வந்துள்ள தால் அது வளம் இழந்து மேலும் உழுதொழிலுக்குப் பயன்படாததாகி வருகிறது. வளர்ந்து வரும் இந்திய மக்கள் தொகைக்கு ஏற்ப ஒரு போகம் அல்லாது பல போகம் விளைந்தால்தான் உணவுப் பஞ்சம் போகும் என்ற நிலை உருவாகியுள்ளது. இந்நிலையில் எருவிடுதலின் சிறப்பு வன்மை பெறுகிறது. இயற்கையுரங்கள் போதாது செயற்கையுரங்கள்—இரசாயனக் கலவையுரங்கள்—பெரிதும் பயனுக்கு வந்துள்ளன. அடுத்து நீர் பாய்ச்சலின் தேவை சொல்ல வேண்டுவ தில்லை. அடுத்து வள்ளுவர் கூறும் காப்பு என்பதன் நுட்பமும்

கருதத்தக்கது. உரையாசிரியர்கள் பரிமேலழகரும் மணக்குடவரும் பரிப்பெருமாளும் காப்பு என்பது 'பட்டியும் பசுவும் புகுதாமல்' காத்தல் என்கின்றனர். இது வேலியால் தீர்ந்து விடும். ஆனால் வேலியிட்டுவிட்டால் மட்டும் விளைவு வீடு வந்து சேர்ந்து விடுமா? எலியும் பூச்சியும் நோயும் எப்போதும் பயிருக்கு எமனாக நின்று கொண்டிருக்கின்றனவே. இவற்றிலிருந்தும் பயிரைக் காக்க வேண்டுமே. இதனை உணர்ந்து சுட்டிக்காட்டுகிறார், காளிங்கர் என்னும் உரையாசிரியர். இவற்றால் வரும் அழிவுகளை நம் நாட்டு உழவர் நன்கு உணர்ந்திருக்கின்றனர். இவற்றை அழித்தல் பொருட்டுப் பல்வகைப் பூச்சி கொல்லிகள் பயன்படுத்தப் படுகின்றன. மேலை நாடுகளில் நோயாலும் நொடியாலும் பூச்சியாலும் பயிர்கள் பாழாகாமல் இருக்கவும் பாழானாலும் உழவர் இழப்படையாமல் இருக்கவும் **பயிர் ஈட்டு உறுதி காப்பு** (Crop Insurance) முறைகள் மேற்கொள்ளப்படுகின்றன. இதன் தேவை பற்றிய பேச்சு நம் நாட்டிலும் இன்று பேசப்படுகிறது. இந்த அளவு வள்ளுவர் எண்ணியிருக்க முடியாது; ஆனால் காப்பின் தேவையைக் கண்டு வற்புறுத்தியது அவர் பெருமை. இக்கேடுகளையும் அவற்றி னின்று காத்தலையும் கருதித் தான் அவர் முன்னரும் 'அருங்கேட்டால் ஆற்ற விளைவது நாடு' என்றார்.

**நிலவுரிமை**

உழுதொழிலின் முழுப்பயனும் பெறப்பட வேண்டுமானால் நிலத்துக்கு உரியவரின் நேர்முக ஈடுபாடு வேண்டும். உழுதுண்போர் உழுவித்துண்போர் என இருசாரார் இடைக்கால இலக்கியங்களில் பேசப்படுகின்றனர். உழுவித்துண்போர் பெருநிலக்கிழாராவர்; கூலிக்கு ஆள் வைத்து உழுதொழில் செய்வோர்; தாம் நேரே பாடுபடுதல் இல்லை. இந்நிலையே **நிலக்கிழாராண்மை** (Feudalism) என வழங்கப்படுகிறது. இந்நிலைமைக்குத் திருக்குறளில் இடம் இல்லை போலும். 'கிழவன் சென்று இருத்தலைப்' பற்றி வள்ளுவர் பேசுகிறார். அவர் கருத்தில் நிலவுடைமை என்பது தனியுடைமையே என்பதைக் 'கிழவன்' என்ற சொல் புலப்படுத்து-கிறது. கிழவன் நேரே சென்று உழுதொழில் செய்யவேண்டும் என்று அவர் வற்புறுத்தலால் பெருநிலக்கிழாராண்மை அவர் நோக்கில் இல்லை என்பதும் வலியுறுகிறது. இன்றை இந்திய நாட்டில் அண்மை வரையில் பேரளவும் இன்றும் ஓரளவும் நிலக்கிழா

ராண்மை ஆட்சி புரிந்து வருகிறது உழுவோருக்கே நிலம் என்னும் உரிமைக் குரல் அண்மைக்காலத்தில் எங்கும் எழுந்தது; நிலச் சீர்திருத்தத்தின் தேவை பரவலாக உணரப்படுகிறது. வேளாண்மையில் நல்ல முன்னேற்றம் இல்லாமைக்கு 'உழுவோனுக்கே நிலம்; உழைப்போனுக்கே மதிப்பு' என்னும் நிலையின்மையே காரணம். வள்ளுவர் கண்ட உழுதொழிலில் இச்சிக்கல்களுக்கு இடம் இல்லை. இச்சிக்கல்கள் இருக்குமானால் விளைவு குன்றும் என எச்சரிக்கை தருகிறார் அவர்; அதை அழகிய இலக்கிய நடையிலும் வெளியிடுகிறார் :

செல்லான் கிழவன் இருப்பின் நிலம்புலந்து
இல்லாளின் ஊடி விடும். (குறள் 1035)

நிலக்கிழமை இருந்து விட்டால் போதாது. கிழவரிடம் ஊக்கமும் விடாமுயற்சியும் தேவை. மண்ணே வளத்தோடு விளங்குகிறது; முயல்வோருக்கு எல்லாம் வாய்ப்பளித்து வளம் கொழிக்கிறது. நிலம் என்னும் நல்லாளிடம் குறையில்லை. இலம் என்று சோம்பியிருப்போரிடமே குறை உண்டு இன்றைய பொருளியல், ஆர்வமும் ஊக்கமும் முயற்சியுமுடையோரைப் போற்றிப் புகழ்கிறது. அவர்களே தொழிலின் தலைவர்கள் (Entrepreneurs) எனக் கொண்டாடி ஊதியத்தை அவர்களுக்கு உரிமையாக்குகிறது. வள்ளுவர் குறள் இவ்வெண்ணங்களைத் தருகிறது :

இலம்என்று அசைஇ இருப்பாரைக் காணின்
நிலம்என்னும் நல்லாள் நகும். (குறள் 1040)

## 4. 6. செல்வ வளம்

அடுத்து வள்ளுவர் வளநாட்டுக்கு உரிய இலக்கணமாக வேண்டுவது செல்வம். அவர் 738-ஆம் குறளிலேயே இதனையும் குறிப்பிட்டுள்ளார் :

பிணியின்மை செல்வம் விளைவுஇன்பம் ஏமம்
அணிஎன்ப நாட்டிற்குஇவ் ஐந்து.

மற்றொரு குறளில் அதனைப் பொருள் என்றும் குறிப்பிட்டுப் பேசுகிறார் அவர் :

பெரும்பொருளான் பெட்டக்கதுஆகி அருங்கேட்டால்
ஆற்ற விளைவது நாடு. (குறள் 732)

இங்குப் பெரும்பொருள் என்பதற்குப் 'பிற பண்டங்கள்', 'நெல்' என்றெல்லாம் பொருள் கூறப்பட்டாலும் இது ஒருபொதுச்சொல் ஆதலால், செல்வம் என்றும் பொருள் கொள்ளக் கிடக்கிறது. காளிங்கர் என்னும் உரையாசிரியர் 'பெரும் பொருட் செல்வர்' என்றே இதற்குப் பொருளுரைக்கிருர். 731-ஆம் குறள் 'தாழ்விலாச் செல்வர்' என்றுரைப்பது முன்னர்க் காட்டப்பட்டது; இது செல்வம் உடையார்மேல் வைத்துக் கூறப்பட்டது. இயற்கைவளம், மக்கள் ஆகிய இவற்றோடு வள்ளுவர் செல்வத்தையும் சேர்த்துக் கூறுவதன் நோக்கம் எண்ணிப்பார்க்கத் தக்கது. இயற்கை வளம் மக்களிடம் சேர்கிறபோது செல்வம் படைக்கப்படுகிறது. இச்செல்வமே முதலாகிறது. இது மேலும் செல்வம் படைக்கத் துணையாகிறது. செல்வம் முதலாக (Capital) அமையத்தக்கது என்ற கருத்து வள்ளுவர்க்கு உண்டு :

> முதல் இலார்க்கு ஊதியம் இல்லை. (குறள் 449)
>
> ஆக்கம் கருதி முதல்இழக்கும் செய்வினை
> ஊக்கார் அறிவுடையார். (குறள் 463)

வணிகம், தொழில் ஆகியவற்றில் முதலீடு செய்தல் என்னும் கருத்தினை வள்ளுவர் அறிந்திருக்கிருர் என்பதற்கு இக்குறள்கள் சான்று. வள்ளுவர் வளநாட்டிற்குச் செல்வம் வேண்டும் என்று கருதுகிறபோது அச்செல்வம் முதலாகும் பயனையும் கருதிக்கொண்டே கூறியிருப்பார் ஆகவே வணிகம் தொழில் ஆகியவற்றின் வளர்ச்சிக்குச் செல்வம் வேண்டும் என்ற கருத்துடன் அதனையும் இலக்கணமாகக் கூறியிருக்கிருர் எனக்கொள்ள வேண்டும். இன்று பொருளியலறிஞர் செல்வத்தின் பயன், துய்த்தலும் முதலீடு செய்தலும் என்கின்றனர். வள்ளுவர் இவற்றோடு மற்றொன்றையும் சேர்க்கிருர். கொடுத்தலும் துய்த்தலும் முதலீடு செய்தலும் என்பன அவர் தரும் பயன்கள். கொடுத்தலும் பிறர் துய்த்தலுக்கு எனவே முடிகிறது. தாழ்விலாச் செல்வர் என வள்ளுவர் குறித்தது, வழங்கத் தொலையாத வளமுடையோரையே என்பது முன்னர்க் காட்டப்பட்டது. மற்ற இடங்களில் வள்ளுவர் 'பெரும்பொருள்' 'செல்வம்' எனத்தந்தது செல்வத்தின் மற்ற பயன் கருதி எனக்கொள்ளலாம். செல்வம் முதலாதலையும் பகிர்ந்தளிக்கப்படுதலையும் (அதாவது கொடுத்தல், வழங்கல்) வள்ளுவர் வேண்டுவதால் அது ஓரிடத்தில் குவியாது சகடக்கால் போல உருண்டோடுதல் பெறப்படுகிறது. செல்வம்

சமூகத்தில் சுழன்று வருதலையே இன்றைய பொருளியலறிஞர்கள் வேண்டுகின்றனர். இன்றைய பொருளியலறிஞர் கருத்துக்கள் பலவற்றை வள்ளுவர் அன்றே கண்டுள்ளார் என்பது தமிழரின் சிந்தனை வளத்தையே சுட்டிக்காட்டுகின்றது.

## 4. 7. நாட்டு வளமும் பொருளாக்கமும்

இதுவரை இயற்கை, மக்கள், விளைவு, செல்வம் என நாட்டுக்கு இலக்கணமான நான்கு வளங்கள் பற்றி விளக்கியுரைக்கப் பட்டது. விளைவு, செல்வம் ஆகிய இரண்டும் இயற்கை வளம் கொண்டு மக்களால் படைக்கப்படுபவை என்பது முன்னரே சுட்டிக் காட்டப்பட்டது. இவை இரண்டும் மக்கள் துய்த்தலுக்கு உரியவை. எடுத்துக்காட்டாக உணவுப் பொருள்கள், கோழிப்பண்ணையின் கோழிகள் ஆகியவற்றைக் குறிப்பிடலாம். இவற்றைப் பொருளிய லறிஞர் Consumer goods என்பர். இவ்விளைவும் செல்வமும் மேலும் விளைவு செய்வதற்கும் செல்வம் செய்வதற்குப் பயன்படுத்தப் படலாம். அதாவது இவையே முதலாக இடப்படலாம். இவை முதலா கின்றபோது Producer goods எனப்படுகின்றன. இவ்வகையில் எல்லாம் ஒற்றுமை கொண்டிருத்தல் பற்றி இவை இரண்டையுமே முதற்பொருள் எனக் கொள்ளலாம். இவ்வாறு கொள்ளவே நாட்டு வளங்கள் மூன்றாக அடங்குகின்றன: **இயற்கை, மக்கள், முதல்.** இன்றைய பொருளியல் நூல்கள் இம்மூன்றும் பற்றி ஓரிடத்தில் பேசுகின்றன. பொருளியல் பெரும்பகுதி பேசுவது பொருளாக்கம் (Production) பற்றியாகும். பொருளாக்கமாவது புதிதாகப் பண்டங்கள் படைக்கப்படுவது. இப்பொருளாக்கத்துக்கு அடிப் படையாக மூன்று பொருள்கள் தேவைப்படுகின்றன. இவற்றைப் பொருளியல் Factors of Production என வழங்குகிறது. **பொருளாக்கக் காரணிகள்** எனத் தமிழில் சிலர் இதனை வழங்குவர். இவற்றில் முதலாவது **நிலம்** என வழங்கப்படும் இயற்கை வளம். இது இயற்கை வழங்கும் ஆதாரங்கள் (Resources) அனைத்தும் கொண்டது. உழுதொழிலுக்குப் பயன்படும் நிலம், நிலத்தில் மறைந்துகிடக்கும் கனிவளம், காற்று முதலான வான்வளம், காடுகடல்படு செல்வங்கள் முதலானவை இவை அடுத்த காரணி **உழைப்பு** என வழங்கப்படுகிறது. இவ்வுழைப்பு மக்கள் அனைவருடைய உடல்திறன் உள்ளத்திறன் ஆகியவையாகும். ஒருதொழிலுக்கோ வணிகத்துக்கோ வேண்டப்படும் பயிற்சித்திறன் முதலானவையும் இதனுள் அடங்கும். மூன்றாவது காரணி **முதல்** என வழங்கப்படு-

கிறது. துய்த்தலுக்கு உரிய பண்டங்களையும் (goods and services) படைத்தலுக்குத் தேவைப்படும் ஆதாரங்கள் இவை; இயற்கை வளங்கள் கொண்டு மக்கள் உழைப்புத்திறனால் படைத்துத் தொகுத்து வைக்கப்பட்டவை. இம்மூன்று காரணிகளின் வளத்துக்கு ஏற்பப் பொருளாக்கம் அமைகிறது எனப் பொருளியல் பாடம் சொல்லுகிறது.

வள்ளுவர் குறிப்பிட்ட நாட்டுவளங்களோடு இப்பொருளாக்கக் காரணிகள் கொண்டுள்ள ஒற்றுமை நன்கு புலப்படுகிறது. இவ்வொற்றுமை கருதியே வள்ளுவரால் குறிப்பிடப்படுகின்ற மூன்று வளங்களும் இம்மூன்று பொருளாக்கக் காரணிகளே என்று இன்றைய அறிஞர்கள் சிலர் கருதுகின்றனர். பேர். தெ. பொ. மீ. அவர்கள்

பெரும்பொருளான் பெட்டக்கது ஆகி அருங்கேட்டால்
ஆற்ற விளைவது நாடு (குறள் 732)

என்ற குறளிலேயே வள்ளுவர் இதனைக் குறிப்பிடுகிறார் என்பர்:

"பெரும் பொருளாவது இவ்வாறு இயற்கை வளமும் முதலாகும் செல்வமும் என்ற இரண்டுமே எனக்கொண்டு 'பெரும் பொருட் செல்வருமாய்' என எழுதுகிறார் காளிங்கர். பெரும்பொருள் என்பது இயற்கை வளமே என்றும் கொள்ளலாம். விரும்பத்தக்க நிலைமையாவது முதலைக்கொண்டு அந்த இயற்கை வளனை மேலும் வளம் கொழிக்க வைப்பதற்கு ஏற்ற வாய்ப்பு என்றும் கொள்ளலாம். அவ்வாறானால், நாம் முன் கூறிய பொருளதிகார மூன்று அடிப்படைகளும் (இயற்கை, முதல், மக்கள்) இங்குக் குறிக்கப் பட்டுள்ளன எனக் கொள்ளவேண்டும்." (பக். 54 பொருளின் மூன்று வேர், வ. க. நா. கா.) பொருளாக்கத்துக்கு உரிய காரணிகள் மூன்றினையும் மேலும் தெளிவாக மற்றொரு குறளும் புலப்படுத்து-கிறது என்பர் பேர். தெ. பொ. மீ. அவர்கள்.

"(1) இயற்கை வளம், (2) முதலாகிற செல்வம், (3) தொழில் என்ற இந்த மூன்றனால் நாடு சிறப்பதனை மற்றொரு திருக்குறளும் வற்புறுத்துகின்றது. முன்னைய குறளிலும் இங்கு இவை தெளிவாக விளங்குகின்றன.

தள்ளா விளையுளும் தக்காரும் தாழ்விலாச்
செல்வரும் சேர்வது நாடு. (குறள் 731)

விளையுள் என்பது, இங்கே, விளையத்தக்க இயற்கை வளத்தினைச் சுட்டுகின்றது. தக்கார் அவ்வத் தொழிலுக்குத் தக்க திறமையுடை

யார் என்று பொருள்பட்டுத் தொழிலாளரைக் குறிக்கின்றது. செல்வர் என்பது முதலாகும் செல்வத்தை விளக்குகிறது". (பக். 56, பொருளின் மூன்று கிளைகள், வ. க. நா. கா.)

இக்கருத்துக்களையே பேர். தெ. பொ. மீ. அவர்கள் 'பொருள் நூற்கருத்துக்கள்' என்னும் ஓர்அண்மைக் கட்டுரையிலும் வற்புறுத்துகின்றனர்.[15] இப்பேராசிரியர் கருத்துக்களைப் பின்பற்றியே பொருளியற் பேராசிரியர்கள் டாக்டர் பா. நடராசனார் அ. அருணசலம் ஆகியோரும் இக்கருத்துக்களையே வற்புறுத்துகின்றனர்.[16] இவை பற்றி முன்னர் இவ்வியலில் ஆங்காங்கே எடுத்துப்பேசப்பட்டது. 'த்க்கார்' என்ற சொல்லுக்குத் 'தொழிலாளர்' என்று பொருள் கொள்ளுதலின் அருமைப்பாடு சுட்டிக் காட்டப்பட்டது. 'தாழ்விலாச் செல்வர்' என்ற தொடர் வள்ளுவரால் பகுத்துண்ணலை வற்புறுத்தும் பொருட்டுப் பயன்படுத்தப்பட்டிருக்கலாம் என்பதும் விளக்கப்பட்டது. ஆனாலும் முதலாகப் பயன்படும் செல்வம் பற்றி வள்ளுவர் கண்ட கருத்துக்களுக்கும் இன்றைய பொருளாக்கக் காரணிகளுக்கும் இடையே ஒற்றுமை உண்டு என்பது இப்பிரிவின் (4. 7) தொடக்கத்தில் தந்தவற்றால் விளக்கமுறுகிறது. ஆனால் இக்கருத்துக்களை ஓரிருகுறள்களில் வைத்துக் காணுதல் சிக்கலுடையதாகத் தோன்றுகிறது. அது மட்டும் அல்ல. வள்ளுவர்க்கும் பொருளியலறிஞர்க்கும் நோக்கத்தில் வேறுபாடுண்டு. காரணிகள் இன்றைய பொருளாக்கத்துக்கு வேண்டியவையாகத் தரப்படுகின்றன. வள்ளுவர் நாட்டின் இலக்கணம் தருகிறார். ஆகவேதான் வள்ளுவர், நாட்டிற்கு வேண்டியவையாக மேலும் பலவற்றைத் தருகிறார். வள்ளுவர் கூறும் நாட்டு வளங்களுள் இன்று காரணிகள் எனப் பெயர் பெற்றவையும் இடம் பெறுகின்றன. வள்ளுவர் காலத்தில் இன்றைய முறையில் பொருளாக்கம் நடைபெற்றதில்லை. ஆகவே அவர் அவ்வாறு கருதியிருப்பார் என்றும் எதிர்பார்த்தல் தேவையும் இல்லை. இக்கருத்துக்களைப் பொறுத்தவரை வள்ளுவர் பொருளியலறிஞர் ஆகியோர் இடையே அமைந்த் ஒற்றுமையைக் கண்டு மகிழலாம். ஆனால் அவை ஒன்று என்று மயங்குதல் கூடாது. வள்ளுவர் நோக்கம் பரந்து விரிந்தது. அவர் இயற்கையையும் பொருளாக்கத்தையும் குறிக்கிறார். அவற்றுக்கு மேலும் அவற்றைக்கொண்ட வளநாட்டையும் தருகிறார். அவற்றுக்கு மேலும் நன்றியுடைச் செல்வ வாழ்க்கையையும் அன்பும்

15. பக். 145, திருக்குறள் கனிகள்.
16. பக். 59-63, வ. த. பொ., பக். 23, வ. வ. பொ. வா.

அருளும் கூடிய அறவாழ்க்கையையும் விளக்குகிறார். அவற்றுக்கு மேலும் வானுறையும் தெய்வத்துள் வைக்கப்படும் வாழ்க்கையையும் சுட்டிக் காட்டுகிறார். இந்நோக்கத்துக்கு ஏற்ப அவர் 'காரணிகள்' வேறுபடும் அல்லவா?

வள்ளுவர் நாட்டுக்கு ஆகாதன என எதிர்மறையில் வைத்துக்கூறும் கருத்துக்களும் சில உண்டு:

உறுபசியும் ஓவாப் பிணியும் செறுபகையும்
சேராது இயல்வது நாடு. (குறள் 734)

'பிணியின்மை அணி' என 738-ஆம் குறளிலும் மீண்டும் வற்புறுத்தப்படுகிறது. 'உறுபசி உழவருடைமையானும் ஆற்ற விளைதலானும் சேராதாயிற்று. ஓவாப்பிணி தீக்காற்று மிக்க குளிர் வெப்பங்களும் நுகரப்படுமவற்றது தீமையும் இன்மையின் சேராதாயிற்று' எனப் பரிமேலழகர் இக்குறளுக்குப் பொருத்தமான விளக்கம் தருகிறார். வளங்கள் வழங்குதலின் நோக்கமே இவை சேராதியல்வதுதான்.

## 4. 8. இன்பம் ஏமம் அமைவு

வள்ளுவர் விரும்பிய வளங்கள் விருப்பியவாறு நாட்டில் அமையுமானால் அதன் விளைவு எவ்வாறு இருக்கும்? அது இன்பம் மலிந்த நாடாக இயங்கவேண்டும். அதனை 738-ஆம் குறளிலேயே வைத்துக்காட்டுகிறார் வள்ளுவர்.

பிணியின்மை செல்வம் விளைவு இன்பம் ஏமம்
அணி என்ப நாட்டிற்கு இவ் ஐந்து;

வள்ளுவர் இன்பத்தைச் செல்வம் விளைவு ஆகியவற்றுடன் வைத்தே தருவதால் அவருக்கு இன்பமும் நாட்டின் இலக்கணங்களுள் ஒன்று என்றே ஆகிறது. 'இன்பவாழ்வே மக்கள் நோக்கம்' என்றே அறிஞரும் சான்றோரும் விளக்குகின்றனர். 'எல்லோரும் இன்புற்றிருக்க நினைப்பதுவே அல்லால் வேறொன்றும் அறியார்' சமயச் சிந்தனையாளர்களும். ஆகவே வள்ளுவரும் இதனை வற்புறுத்தலில் வியப்பொன்றும் இல்லை பல்வளங்களும் நிறைந்திருக்குமானால் இன்பம் தானே உறும் என்று எதிர்பார்க்கலாம். அந்த வளங்களே கூட இன்பம் எனலாம். ஆனாலும் வள்ளுவர் இன்பத்தைத் தனியே வற்புறுத்திச் சொல்வது சிந்தித்தற்கு உரியது.

பல்வளங்களும் கூடியிருந்தாலும் மக்கள் இன்பமுறுதிருக்கும் நிலைமையினையும் காணுகிறோம்.

வகுத்தான் வகுத்த வகையல்லால் கோடி
தொகுத்தார்க்கும் துய்த்தல் அரிது (குறள் 377)

என்னும் குறள் இக்கருத்தை விளக்குகிறது. ஆகவே இன்பமுண்டமை தனியே கூற வேண்டுவதாயிற்று.

மேலும் ஒரு கருத்துண்டு. பல்வளங்களும் நல்காத இன்பமும் உண்டு. ஒவ்வொருவரும் ஒவ்வொன்றை இன்பம் எனக் கருதலாம். வள்ளுவர் போன்ற சான்றோர் இன்பத்துக்குத் தரும் விளக்கமும் இன்பம் நல்கும் பொருள் பற்றித் தரும் அறிவுரையும் வேருக இருக்கலாம்.

*அறத்தான் வருவதே இன்பம். (குறள் 39)*

*மக்கள் மெய்தீண்டல் உடற்கின்பம்; மற்றுஅவர்*
*சொற்கேட்டல் இன்பம் செவிக்கு. (குறள் 56)*

*சிறுமையுள் நீங்கிய இன்சொல் மறுமையும்*
*இம்மையும் இன்பம் தரும். (குறள் 98)*

*ஈத்துவக்கும் இன்பம், (குறள் 228)*

*இருள்நீங்கி இன்பம் பயக்கும் மருள்நீங்கி*
*மாசறு காட்சி யவர்க்கு. (குறள் 352)*

*இன்பம் இடையறாது ஈண்டும் அவாஎன்னும்*
*துன்பத்துள் துன்பம் கெடின். (குறள் 369)*

*இழிவறிந்து உண்பான்கண் இன்பம். (குறள் 946)*

*இன்பம் கடல்மற்றுக் காமம். (குறள் 1166)*

*ஊடுதல் காமத்திற்கு இன்பம். (குறள் 1330)*

வள்ளுவர் கருதும் இன்பம், உயர்நிலை இன்பமும் உலகியல் இன்பமும் என்பது இவற்றால் எளிதில் புலகுனும். எந்த வளமும் நல்காத இன்பமும் இங்கு உண்டு. இக்காரணத்தால் இன்பமுடைமையைத் தனியே வற்புறுத்த வேண்டுவதாகிறது. இன்றைய பொருளியற் கல்வியின் நோக்கம் எல்லாம் உலக மக்களுக்கு இன்ப வாழ்வை அமைத்துத் தருதலே ஆகும். அத்தகைய பொருளியல், வள்ளுவர் சுட்டிக்காட்டும் இன்பத்தை எண்ணுதல் அதற்குப் பயன்தரும்.

இவ்வியலில் இதுவரை கண்ட கருத்துக்கள் எல்லாம் வள்ளுவர் 'நாடு' என்னும் அதிகாரத்தில் வழங்கியவை; இவையனைத்தும் பொருள்வாழ்வுக்கு உரியவை. வள்ளுவர் நாட்டைக் கருதுகிற போது அரசையும் கருதியே பார்க்கிறார். பல்வளங்களும் மலிந்து மக்களும் இன்புற்றிருந்தாலும் இவ்வளங்களும் இன்பமும் நிலைபேறுடையனவாக இருந்தல் வேண்டும். இவற்றுக்கு நிலைபேறு அரசன் ஆட்சியாலும் அவன் தரும் ஏமத்தாலும் (காவலாலும்) தான் அமையும். இவற்றின் நிலைபேற்றுக்கு இடையூறாக எய்துபவை பகை, பல்குழு, கொல்குறும்பு ஆகியவை. இவற்றை ஒழித்து ஏமம் நல்கல் அரசன் பொறுப்பு. அரசனிடம் அன்பும் அருளும் அமையாது போனால் எப்பயனும் இல்லை.

........................ .....செறுபகையும்
சேராது இயல்வது நாடு. (குறள் 734)

பல்குழுவும் பாழ்செய்யும் உட்பகையும் வேந்தலைக்கும்
கொல்குறும்பும் இல்லது நாடு. (குறள் 735)

..................................ஏமம்
அணிஎன்ப நாட்டிற்கு. (குறள் 738)

ஆங்குஅமைவு எய்தியக் கண்ணும் பயம்இன்றே
வேந்தமைவு இல்லாத நாடு. (குறள் 740)

நல்ல பொருளியல்வாழ்வு அமைவதற்கு அன்பும், அருளும், அமைதியும் குடிகொண்ட அரசியல் வாழ்வு அமைந்திருத்தல் வேண்டும் என இன்று அறிஞர்கள் வற்புறுத்துகின்றனர். 'வேந்தமைவு எனவே குடிகள் அவன்மாட்டு அன்புடையராதலும் அவன் தான் இவர்மாட்டு அருளுடையனாதலும் அடங்கின' என எடுத்துக்காட்டுவர் பரிமேலழகர். அன்பும் அருளும் ஆளும் இடத்தில் உரிமையும் கடமையும் உடன் ஆளும் என நம்பலாம். இவ்வுரிமை வாழ்வையே 'வேந்தமைவு' என்னும் தொடர் முடிவாகச் சுட்டிநிற்கிறது. இவ்வுரிமை வாழ்வே பொருளியல் வாழ்வை இயக்குகிறது என்பர், மேலும் அவ்வறிஞர். உள்நாட்டுப் பூசலும் கலகமும் வெளிநாட்டுப்பகையும் போரும் வளர்ச்சியினைத் தடுத்தல் மட்டுமல்லாது வளத்தினையும் கெடுத்துச் செலவினையும் சேர்க்கும். வள்ளுவர் இவ்வதிகாரத்தில் அரசியல் பற்றிக் குறிப்பிடும் கருத்துக்கள் இவ்வமைதியை வற்புறுத்துவனவாகவே உள்ளன. அரசியலறிஞரும் ஒருங்குபோற்றும் சிந்தனை இது என எண்ணி மகிழலாம்.

வள்ளுவர் வளங்களைத் தந்து பின்னர் இன்பம் ஏமம் அமைவு வேண்டும் என்று கூறிச்செல்வது, அவர் எதிர்காலம் எல்லாம் எண்ணிப்பார்த்துச் சொல்லும் சிந்தனையாளர் என்பதையே பறையறைந்து நிற்கிறது. மக்களெல்லாம் வளத்தையே தேடி வருந்தி அலைகின்றனர். இந்த வருத்தம் பற்றியே இன்று பொருளியலும் பொருளியலறிஞரும் பேசுகின்றனர். அவர்கள் கவலை வளங்காணலோடு முடிகிறது. அதன் பின்னர்? வள்ளுவர் வருத்தமின்றி வளங்கொழிக்கும் நாட்டைக் காண விழைகிறார்:

நாடுஎன்ப நாடா வளத்தன; நாடு அல்ல
நாட வளம்தரும் நாடு. [குறள் 739]

'தங்கண் வாழ்வார் தேடி வருந்தாமல் அவர்பால் **தானே அடையும் செல்வத்தை** உடையவற்றை நூலோர் நாடு என்று சொல்லுவர்; ஆதலால் தேடி வருந்தச் செல்வம் அடைவிக்கும் நாடுகள் நாடு ஆகா என்றவாறு'. — பரிமேலழகர்.

'இஃது **எல்லா நிலத்தினும் உள்ள பண்டம் கலத்தினாலாதல் காலினாலாதல் தன்னிடத்தே உடைத்தாதலும்,** தன் நிலத்தில் உள்ளபண்டத்தை மிகுதியாக உடைத்தாதலும் வேண்டும் என்றது,' — பரிப்பெருமாள்.

'நாடு என்று சொல்லுவர் பெரியோர்; யாதினை எனின் **புறத்து ஒன்றுபோய்த் தேட வேண்டாத பலவகைப்பட்ட விளைவளம்** சிறந்த நாடுகளை; மற்று அல்லவை யாது எனின் நிலத்து விளையும் வளம் புறத்துப் போய்த் தேடுமாறு விளையும் நாடு என்றவாறு.' — காளிங்கர்.

பரிமேலழகர் தன்நாட்டு வளத்தை மட்டும் குறிக்கிறார். பரிப்பெருமாளும், காளிங்கரும் அதுமட்டுமல்லாது புற உலக வளம் அனைத்தும் தன் நாட்டில் செறிந்திருப்பதையும் குறிக்கின்றனர். இங்குள்ள நுட்பமும் நயமும் நினைக்கத்தக்கன.

இன்றைய பொருளியலறிஞர் போன்றே வள்ளுவரும் வளநாட்டைக் கண்டார். அதன் பின்னர்? இன்று பெரும்பாலான பொருளியலறிஞர்க்கு அது கேள்விக்குறி. ஆனால் வள்ளுவர் அதற்கு விடை தருகிறார். அவர் தரும் விடைதான் **இன்பம், ஏமம், அமைவு** என்பன. மக்கள் புறவளம் கண்டபின் அகவளம் காணல் வேண்டும். இதனைப் பாரோர் போற்றும் பேராசிரியர் **கால்ப்ரெயத்** என்ற பொருளியல் மேதை இன்று உணர்ந்து சொல்லுகிறார்:

(Prof. Galbraith's ) 'conclusion is that, while a poverty-stricken society must inevitably revere productivity, an affluent society should turn its attention in other directions. When Private Wealth is assured, social well-being becomes a possibility. We turn from investment in things to investment in man himself.'[17]

ஆதலால் அன்று இறையனுர் வள்ளுவர் குறளை இவ்வாறு வாழ்த்தியது எவ்வளவு பொருத்தம்!

'என்றும் புலராது யாணர்நாள் செல்லுகினும்
நின்றுஅலர்ந்து தேன்பிலிற்றும் நீர்மைய தாய்க் — குன்றுத
செந்தளிர்க் கற்பகத்தின் தெய்வத் திருமலர் போனும்
மன்புலவன் வள்ளுவன்வாய்ச் சொல்.'[18]

# குறுக்க விளக்கம்

| | | |
|---|---|---|
| அகம். | : | அகநானூறு. |
| கலி. | : | கலித்தொகை. |
| சிலம்பு. | : | சிலப்பதிகாரம். |
| திருவள்ளுவர். | : | திருவள்ளுவர் அல்லது வாழ்க்கை விளக்கம் (டாக்டர் மு. வ.) |
| புறம். | : | புறநானூறு. |
| பொ நூ க. | : | பொருள் நூற்கருத்துக்கள் (பேர் தெ. பொ. மீ.) |
| மணி. | : | மணிமேகலை |
| வ க நா கா | : | வள்ளுவர் கண்ட நாடும் காமமும் (பேர். தெ. பொ. மீ ) |
| வ த பொ. | : | வள்ளுவர் தந்த பொருளியல் (டாக்டர் பா. நடராசனார்) |
| வ வ பொ வா . | : | வள்ளுவர் வகுத்த பொருள் வாழ்வு (பேர். அ. அருணசலம்) |

| | | |
|---|---|---|
| BTGE. | : | Basic Teachings of the Great Economists by John W. Meconnel. |
| EMS. | : | Economics Made Simple by Geoffrey Whitehead. |
| ETI. | : | Economic Thinking in India by G. R. Madan. |
| HET. | : | A History of Economic Thought by Eric Roll. |
| PTAI. | : | Political Theory of Ancient India by John W. Spellman. |
| RGE. | : | Relevance of Gandhian Economics by Shriman Narayan. |
| RVMPE. | : | Relevance of Valluvam to Modern Political Economy by Dr. B. Natarajan. |
| SP. | : | Sangam Polity by Dr. N. Subramaniam. |

# நூல் விளக்கம்

# (Bibliography)

[இந்நூலில் மேற்கோளாக ஆளப்பட்டனவும் பிற வகையில் சுட்டிக்காட்டப்பட்டனவும் உட்படச் சிறப்பாகக் குறிக்கத் தக்கன மட்டுமே இங்குத் தரப்படுகின்றன.]

## தமிழிலக்கியங்கள்


அகநானூறு : (1958) எஸ். ராஜம், சென்னை-1.

இன்னிலை : திரு.சங்குப்புலவர் விளக்கவுரையுடன், (1964), தி. தெ. சை. சி. நூற்பதிப்புக் கழகம் லிமிடெட், சென்னை-1.

கலித்தொகை : நச்சினார்க்கினியர் உரையுடன், (1949), தி. தெ. சை. சி. நூ. கழகம் லிட்., சென்னை-1

குறுந்தொகை : திரு பொ. வே. சோமசுந்தரனார் உரையுடன், (1972), தி. தெ. சை. சி. நூ. கழகம் லிட்., சென்னை-1.

சிலப்பதிகாரம் : **இளங்கோவடிகள்**, ந. மு. வேங்கடசாமி நாட்டார் உரையுடன், (1950), தி. தெ. சை. சி. நூ. கழகம் லிட்., சென்னை-1.

சிறுபஞ்சமூலம் : **காரியாசான்**, (1967), தி. தெ. சை. சி. நூ. கழகம் லிட்., சென்னை-1.

திரிகடுகம் : **நல்லாதனார்**, (1967), தி.தெ. சை.வை.சி. நூ. கழகம் லிட்., சென்னை-1.

திருக்குறள் : பரிமேலழகர் உரை, உ. வே. மு. கோபால க்ருஷ்ணமாச்சார்யர் குறிப்புரையுடன், (1965), வை. மு. கோ. கம்பெனி, சென்னை-5.

திருக்குறள் : உரைக்கொத்து, பொருட்பால், (1959), ஸ்ரீ காசிமடம், திருபனந்தாள்.

திருக்குறள் : ஆராய்ச்சிப்பதிப்பு, பதிப்பாசிரியர் (கி. வா. ஜகந்நாதன்), (1963), ஸ்ரீ ராமகிருஷ்ண மிஷின் வித்தியாலயம், கோவை மாவட்டம்.

திருக்குறள் சொற்பொருள் அகரவரிசை : திரு. வா. மாணிக்கசகாயஞ் செட்டியார், திரு. சு. அ. இராமசாமிப் புலவர், (1969), தி. தெ. சை. சி. நூ. கழகம் லிட்., சென்னை-1.

தொல்காப்பியம் பொருளதிகாரம் : நச்சினார்க்கினியர் உரை (1—5 இயல்கள்), (1971), தி. தெ. சை. சி. நூ. கழகம் லிட்., சென்னை-1.

நற்றிணை : பின்னத்தூர் நாராயணசாமி உரையுடன், (1967), தி. தெ. சை. சி நூ. கழகம் லிட்., சென்னை-1.

பதிற்றுப்பத்து : ஔவை சு. துரைசாமிப் பிள்ளை உரையுடன், (1968), தி. தெ. சை. சி. நூ. கழகம் லிட்., சென்னை-1.

பத்துப்பாட்டு : நச்சினார்க்கினியர் உரையுடன், உ. வே. சா. பதிப்பு, (1961), சென்னை-5

பழந்தமிழ் நூற் சொல் லடைவு (3 பகுதிகள்) : (1967, 1968, 1970), பிரஞ்சு இந்தியக் கலைக் கழகம், பாண்டிச்சேரி.

பழமொழி நானூறு : சங்குப்புலவர் உரையுடன், தி. தெ. சை. சி. நூ. கழகம் லிட், சென்னை-1.

புறநானூறு : உ. வே. சா. பதிப்பு, (1950), சென்னை-5.

மணிமேகலை : ம. கூ. சாத்தனார், (1971), தி. தெ. சை. சி. நூ. கழகம் லிட்., சென்னை-1.

## தமிழ் நூல்கள்

அருணாசலம், பேர். அ. : வள்ளுவர் வகுத்த பொருள் வாழ்வு, (1969), A. ரவிக்குமார், 19, மேலரத வீதி, திருச்செந்தூர், நெல்லை மாவட்டம்.

இராமசாமி, டாக்டர் அ.: குறள் கூறும் பொருளியல், (மதுரைப் பல்கலைக் கழகக் கருத்தரங்கக் கட்டுரை, 1970).

குருசாமி, மா. பா. : புகுமுகப் பொருளியல், குரு. தேமொழி, 15, மேலரத வீதி, திருச்செந்தூர்.

சாரங்கபாணி, இரா. : **திருக்குறள் உரை வேற்றுமை,** பொருட்பால், (1960), செல்வி பதிப்பகம், காரைக்குடி.

நடராசன், டாக்டர் பா. : **வள்ளுவர் தந்த பொருளியல்,** (2-ஆம் பதிப்பு, 1967), பழனியப்பா பிரதர்ஸ், சென்னை-14.

பாரதிதாசன் : **பாண்டியன் பரிசு,** (1970), செந்தமிழ் நிலையம், இராமச்சந்திரபுரம், திருச்சிராப்பள்ளி மாவட்டம்.

மீனாட்சி சுந்தரன், தெ.பொ. : **வள்ளுவர் கண்ட நாடும் காமமும்,** (1955) பழனியப்பா பிரதர்ஸ், சென்னை-5.

மீனாட்சி சுந்தரன், தெ.பொ. : **பொருள் நூற் கருத்துக்கள்,** (கட்டுரை) (1968), திருக்குறள் கனிகள், தமிழ் எழுத்தாளர் கூட்டுறவுச் சங்கம், சென்னை-8.

வரதராசனார், டாக்டர் மு. : **திருவள்ளுவர் அல்லது வாழ்க்கை விளக்கம்,** (7-ஆம் பதிப்பு 1967), பாரி நிலையம், சென்னை-1

வரதராசனார். டாக்டர் மு. : **திருக்குறள் தெளிவுரை,** (1970), தி. தெ. சை. சி. நூ. கழகம் லிட்., சென்னை-1.

## ஆங்கில நூல்கள்

Birmingham, Walter : **Economics : An Introduction,** (1966), Unwin University Books, George Allen & Unwin LTD, London.

Burrow, Prof. T. : **Collected papers on Dravidian Linguistics,** (1968), Annamalai University, Annamalai Nagar.

Dalton, H. : **Principles of Public Finance, 4th Edn. 1954, Routledge & Kegan Paul Ltd., London, E.C.4.**

George Henry : **Progress and Poverty,** (1879), Henry George Foundation, London (1931).

Heimann, Edward : **History of Economic Doctrines,** (1945), O U P., N. York.

Jathar, G B. and Jathar, K. G. : **Indian Ecnomics,** Oxford University Press.

Krishnamoorthy, A. V. : **Gandhian Economics,** Voice of Gandhi, VII, No. II.

Madan, G. R. : **Economic Thinking in India,** (1966), S. Chand & Co, Madras.

Mahalingam, Dr. T. V. : **South Indian Polity,** (II Edn. 1967), Madras University, Madras-5.

Marshall, Alfred : **Principles of Economics** 9th Edn. 1961), Macmillan and Co; Ltd.

Mcconnell, John W. : **Economists Past and present,** (1958), Barnes & Noble, Inc., New York

Mcconnell, John W. : **Basic Teachings of the Great Economists.**

Narayan, Shriman : **Relevance of Gandhian Economics,** (1970), Navagivan Press, Ahmedabad-14.

Natarajan, Dr. B. : **Relevance of Valluvam to Modern Political Economy,** (Madurai University Seminar Paper, 1970).

Natarajan, Dr. B. : **Economic Ideas of Tiruvalluvar,** The Sornammal Endowment Lectures (1960-61), Madras University, Madras-5.

Roll, Eric : **A History of Economic Thought,** (1953), Faber and Faber Ltd., London.

Spellman, John W. : **Political Theory of Ancient India** (A Study of Kingship from the Earliest Times to circa A. D. 300. (1964.) Clarendon Press, Oxford.

Subrahmanian, Dr. N. : **Pre-Pallavan Tamil Index** (Index of Historical Material in Pre-Pallavan Tamil Literature) (1966), University of Madras, Madras-5.

Subrahmanian, Dr. N. **Sangam Polity**, The Administration and Social Life of the Sangam Tamils,(1966), Asia Publishing House Madras-2.

Whitehead, Geoffrey : Economics Made Simple, (1970), W. H. Allen & Co., LTD., London.

Economic Ideas of Tiruvalluvar : A Collection of Sixteen Seminar Papers (Cyclostyled) of the Madurai University (1970).

# சிறப்புச் சொற் கோவை

(எண்கள் பக்க எண்கள்; எண்களை அடுத்த புள்ளிகள் பன்முறையாட்சியைக் குறிக்கும்.)

# பிழையும் திருத்தமும்

[அ. கு. = அடிக்குறிப்பு. மே. ப. = மேற்கோள் பகுதி.]

| பக்கம் | பத்தி | வரி | பிழை | திருத்தம் |
|---|---|---|---|---|
| 4 | 2 | 1 | கருத்துகள் | கருத்துக்கள் |
| 5 | 1 | 4 | அமைப்புக்கீளபும் | அமைப்புக்களையும் |
| 8 | அ. கு. | 5 | dectrine | doctrine |
| 19 | 3 | 4 | வர்த்தி | வர்த்தி |
| 22 | அ. கு. | 1 | diclum | dictum |
| 23 | 4 | 9 | சமயச் சாஸ்திரங் [களுக்கும் | சமய சாஸ்திரங் [களுக்கும் |
| 24 | அ. கு | 1 | Finances | Finance |
| 30 | மே. ப. | 2 | மூன்றூ | மூன்றும் |
| 31 | மே. ப. | 2 | முன்பு , | முன்பு. |
| 32 | மே. ப. | 2 | அன்போடு | அன்பொடு |
| 40 | அ. கு. | 12 | yatch | yacht |
| 44 | மே. ப.2 | 1 | ந லவை | நல்லவை |
| ,, | ,, | 2 | ந ல்வாம் | நல்லவாம் |
| 47 | அ. கு. | 2 | வழங்குசிறது. | வழங்குகிறது. |
| 49 | 3 | 5 | வரட்சி | வறட்சி |
| 50 | 1 | 3 | ‘ பொருளாட்சி | “ பொருளாட்சி |
| ,, | 2 | 8 | வெல்படை | வெல்படை , |
| 56 | 1 | 6 | வாய்க்க வேண்டும் | வாய்க்க வேண்டும். |
| 60 | மே. ப.2 | 1 | கரவா | கரவர்க் |
| 64 | மே. ப.2 | 2 | தமியயே | தமியவே |
| 65 | 1 | 4 | நோக்கமூம் | நோக்கமும் |
| ,, | மே. ப.5 | 1 | ஏமாப்பு இல | ஏமாப்பு இல் |
| 74 | 1 | 3 | உண்டு 4 | உண்டு.[4] |
| 78 | 2 | 16 | 4) பசுக்காவல் | 5) பசுக்காவல் |
| 81 | மே. ப 1 | 2 | பகைப்பல | பகைப்புல |
| 82 | 1 | 12 | வேறுப்பட்டது . | வேறுபட்டது |
| ,, | ,, | 14 | இவ்வற்றிலிருந்து | இவற்றிலிருந்து |

| பக்கம் | பத்தி | வரி | பிழை | திருத்தம் |
|---|---|---|---|---|
| 83 | அ. கு. | 11 | கழுகின் | கமுகின் |
| 84 | 3 | 6 | உழவு | உழவு , |
| 87 | 2 | 5 | Customs ............ அல்லது | (இடையீடின்றிப் படிக்கவும்) |
| 87 | அ. கு. | 3 | பினர்ப் | பின்னர்ப் |
| 91 | ,, | ,, | notale | notable |
| 92 | 6 | 3 | துணைக்சொண்டு | துணைக்கொண்டு |
| 93 | 4 | 1 | குறிப்ப்பிடுவதாகத் | குறிப்பிடுவதாகத் |
| 95 | அ கு. | 2 | intercharge | interchange |
| 98 | 1 | 13 | மேறகொண்டிருந்தா தக | மேற்கொண்டிருந்ததாக |
| 102 | 2 | 3 | இறைவை மக்கள் [மனமுவந்து | மக்கள் மனமுவந்து |
| 103 | 2 | 12 | அரசா | அரசர் |
| 105 | 3 | 4 | திறக்குறளிலும் | திருக்குறளிலும் |
| 106 | 1 | 16 | உரை. | உரை, |
| 110 | 1 | 8 | - திருக்கின்றன. | - கின்றன. |
| ,, | ,, | ,, | கானம், | காணம், |
| 118 | 1 | 11 | நட்பண்டாக்கி | நட்புண்டாக்கி |
| 121 | அ. கு. | 3 | நனனெறிச் | நன்னெறிச் |
| 127 | 1 | 10 | வேன்டும் | வேண்டும். |
| 128 | மே ப. 4 | 2 | கலத்துள | கலத்துள் |
| 131 | 2 | 12 | " குடிக்குத | " குடிக்குத் |
| 134 | 1 | 7 | குடிளையும் | குடிகளையும் |
| 135 | மே. ப. 2 | 1 | காண்பா | காண்பர் |
| 148 | 1 | 1 | வளங்களுக் காவல் | வளங்களுக்குக் காவல் |
| 160 | 2 | 3 | தொழில் தலைவர்கள் | தொழில் தலைவர்கள். |
| ,, | அ கு. | 5 | இப்புறப் பாட்டின | இப்புறப் பாட்டின் |
| 172 | 2 | 7 | (Eutrepreneurs) | (Entrepreneurs) |
| 179 | 1 | 6 | இருந்தல் | இருத்தல் |
| 184 | - | 21 | தி. தெ. சை. வை. சி. நூ. | தி. தெ. சை. சி. நூ. |

